# திருமங்கை ஆழ்வார் வளர்த்த பக்திப் பெரும் பயிர்

38 .
25

ம. லோகநாயகி



சாரதா பதிப்பகம்

பிளாட் எண். 12
வி. ஜி. பி. அமராவதி நகர்,
ஜலடியன் பேட்டை
சென்னை-601 302.

# திருமங்கை ஆழ்வார் வளர்த்த பக்திப் பெரும் பயிர்

திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கு
டாக்டர் (Ph.D.) பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ம. லோகநாயகி

சாரதா பதிப்பகம்
பிளாட் எண். 12
வி. ஜி. பி. அமராவதி நகர்,
ஜலடியன் பேட்டை
சென்னை-601 302.

# நன்றியுரை

ஆராய்ச்சி மாணவியாக ஏற்றுக்கொண்டு ''திருமங்கை ஆழ்வார் பாசுரங்கள்—ஓர் ஆய்வு'' என்னும் தலைப்பின்கீழ் ஆய்வு செய்யும் முயற்சியில் என்னை ஈடுபடுத்தி, ஊக்கமளித்து ஆய்வுக்கான வழிமுறைகளை வகுத்துக்கொடுத்து, வழிகாட்டிய ஆய்வு மேற்பார்வையாளர், இணைப்பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் ந. தர்மாரெட்டி அவர்களுக்கு என் மனம் நிறைந்த நன்றி உரித்தாகும்.

எனது ஆய்வு முயற்சியில் பலநிலைகளில்—உளங் கனிந்து—பெரிதும் உதவியருளிய பேராசிரியர் பொன் சௌரிராசன் அவர்களுக்கு எனது இதயங் கனிந்த நன்றி மலர்கள் உரித்தாகும்.

மற்றும் இவ்வாய்வு மேற்கொள்ள வாய்ப்பளித்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கும் எனது உளமார்ந்த நன்றி.

ம. லோகநாயகி

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| குறுந். | — | குறுந்தாண்டகம் |
| செம். | — | செம்பொருள் |
| த. ஆ. | — | தமிழாக்கம் |
| தொ.ஆ. | — | தொகுப்பாசிரியர் |
| தொ.மொ. | — | தொகுத்து மொழி பெயர்த்தவர் |
| நெடுந். | — | நெடுந்தாண்டகம் |
| ப | — | பக்கம் |
| ப.ள். | — | பக்கங்கள் |
| ப. ஆ. | — | பதிப்பாசிரியர் |
| பெரி.திரு. | — | பெரிய திருமொழி |
| பெரு.திரு. | — | பெருமாள் திருமொழி |
| பொ.ப.ஆ. | — | பொதுபதிப்பாசிரியர் |
| மொ.பெ.ஆ. | — | மொழிபெயர்ப்பாசிரியர் |

# முகவுரை

அனைத்துமாய் — அனைத்தின் உட்பொருளுமாய் விளங்கி நிற்கும் பரம்பொருள் மால். அவனைத் தலைமைக் கடவுளாய்க் கொண்டு வணங்குவது 'வைணவ' சமயமாகும். ஆய்வாளருக்குச் சிறுவயதிலிருந்தே வைணவ சமயத்தில் ஈடுபாடுண்டு திருமாலின் திருநாமமுடன் விளங்கும் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் ஆய்வாளர் முதுகலைப் பட்டப்படிப்பு பயிலும்போது வைணவம் கற்கும் வாய்ப்பைப் பெற்றார். அதோடு ஆய்வாளர் ஆழ்வார்கள் பன்னிருவரில் ஒருவரான குலசேகரர் ஆழ்வார் பற்றி ஆய்வுசெய்து எம்பில் பட்டம் பெற்றார். சேரமன்னராய் சிறந்த வைணவ பக்தராய் செங்கோலோச்சி விளங்கிய குலசேகராழ்வாரைப் போன்று சோழமன்னனிடத்து ஒரு குறுநில மன்னராயிருந்து— மாலுக்காக—மால் பக்தருக்காகத் தன் பதவி—உயர்வுகளை இழந்து தன்நிலை தாழ்ந்து—தீவிர மாலடியாராய் வாழ்ந்து திருநாடு அடைந்த திருமங்கை ஆழ்வாரிடத்து ஆய்வாளரின் மனம் அதிகம் ஈடுபட, அவரையே— அவரது பாசுரங்களையே முனைவர் பட்ட ஆய்வுக்கு எடுத்துக்கொண்டார். ஆய்வாளரின் இந்நாட்டத்திற்கு, திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியர் டாக்டர் பொன் சௌரி ராசன் அவர்களும் திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவர், இணைப்பேராசிரியர், டாக்டர் நா. தர்மா ரெட்டி அவர்களும் பெரிதும் ஊக்கமளித்தனர். ஆக, ஆய்வாளர் "திருமங்கை ஆழ்வார் பாசுரங்கள்—ஓர் ஆய்வு" என்னும் தலைப்பை முனைவர் பட்டத்திற்குத் தேர்ந் தெடுத்துக்கொண்டார்.

இவ்வாய்வு இரண்டு நோக்கங்களுடன் மேற்கொள்ளப் பெற்றது. திருமங்கையாழ்வார்தம் மால் பக்தியை—பாகவத சேவையை—வைணவமிக்கு ஈடுபாட்டை உலகுக்கு வெளிப் படுத்திக் காட்டி, மக்கள் நெஞ்சங்களில் அவருக்கு ஓர் உயர்ந்த இடம் அளிக்கப்படல் வேண்டும்; திருமாலின் சிறந்த பக்தர் களுள் ஒருவராய் அவரைக் காட்டிட வேண்டும் என்பது ஒன்று. மற்றொன்று வைணவத்திற்கு சிறப்பாக வைணவத் தமிழுக்கு ஒரு சிறிதாவது பணி செய்யவேண்டும் என்பது.

திருமங்கையாழ்வார் பாடல்கள் பற்றி, அண்ணாமலை (1977), மதுரை (1980), சென்னை (1983), பாரதிதாசன் (1984) பல்கலைக்கழகங்களுக்கு அளிக்கப்பட்ட அச்சேறாத எம்ஃபில் ஆய்வேடுகள் நான்கு குறிப்பிடத்தக்கவை.

1977—"திருமங்கையாழ்வார் வாழ்க்கை வரலாறும், அருள்மொழிகளும்" — சி. நம்மாழ்வார்— அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

1980—"திருமங்கை மன்னன் திருமடல்கள்"— ம. பெ சீனிவாசன், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

1984—"மடல் இலக்கியம்: சிறிய திருமடல்—பெரிய திருமடல்"—சிவ. மங்கையர்க்கரசி — பாரதி தாசன் பல்கலைக்கழகம்.

1929-ல் மு. இராகவையங்காரது "ஆழ்வார்கள் கால நிலை" நூலில் திருமங்கையாழ்வாரது காலம் பற்றிய கட்டுரை ஒன்றுளது. 'செந்தமிழ்' இதழில் திருமங்கை யாழ்வார் காலம் பற்றிய ஆய்வு முடிவுகள் வெளிவந்தன.

வித்வான் கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பித்த திருவேங்கடத்தான் திருமன்றம் 1981இல் வெளியிட்ட இரண்டாம் பதிப்பான "நாலாயிர திவ்வியப் பிரபந்தம்" ஆய்விற்கு மூல நூலாகக் கொள்ளப்பட்டது

இவ்வாய்வுப் பகுதி திருமங்கையாழ்வாரின்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பெரிய திருமொழி | — | 1084 | பாசுரங்கள் |
| 2. | திருக்குறுந்தாண்டகம் | — | 20 | பாசுரங்கள் |
| 3. | திருநெடுந்தாண்டகம் | — | 30 | ,, |
| 4. | திருவெழுகூற்றிருக்கை | — | 1 | ,, |
| 5. | சிறிய திருமடல் | — | 1 | ,, |
| 6. | பெரிய திருமடல் | — | 1 | ,, |

ஆக 1137 பாசுரங்களை உள்ளடக்கியுள்ளது.

இவ்வாய்வேடு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டு அமைந்துள்ளது.

முதல் இயல், ஆழ்வார்கள் பன்னிருவரில் திருமங்கை ஆழ்வாரது வாழ்வை இல்லற வாழ்வு, இறைநெறி வாழ்வு என இரு பகுப்புக்களாகப் பிரித்து அவரது பிறப்பு முதல் திருமணவாழ்வு வரையிலான செய்திகளை 'இல்லற வாழ்வு' உட்தலைப்பின் கீழும், ஆழ்வாரை இறைவன் சோதித்து அவரைப் பாகவத சேவைககாகக் கள்வனாக்கியது முதல் காஞ்சியில் நீதி கிடைக்கப்பெற்றது, ஆழ்வார் கொள்ளை

அடித்தல், ஆழ்வாரை இறைவன் ஆட்கொள்ளல், ஆழ்வாரின் திருத்தலப்பயணம், ஆழ்வார் பயணத்தின்போது பாடிய பாசுரங்கள், அவற்றின் சிறப்புக்கள்வரை உள்ள செய்திகளை 'இறைநெறி வாழ்வு' எனும் உட்தலைப்பின் கீழ் வைத்து ஆய்கிறது. மேலும் ஆழ்வார் திருமங்கை பாடிய பிரபந்தங் களைப் பற்றி அறிமுகம் விளக்கமாய்த் தரப்பெறுகிறது. அதாவது ஆழ்வார் பாடியருளிய பிரபந்தங்கள், அப்பிரபந்தங் களை ஆழ்வார் பாடியருளிய சூழல், தாண்டகம், மடல், எழுகூற்றிருக்கை யாப்பமைப்பும், விளக்கமும் ஆகிய செய்திகள் விளக்கப்பெறுகின்றன.

திருமங்கையாழ்வாரின் பக்திப் பாங்கினை அறிவதற்கு இரண்டாம் இயல் பெரிதும் உதவியாய் அமைகிறது. இவ்வியலுள் பக்தி விளக்கம், வகைகள் ஆகியன விளக்கப் பெறுவதோடு, திருமங்கை பாசுரங்களில் காணப்பெறும் பக்தி வகைகள் இனங்கண்டு ஆயப்பெற்று, திருமங்கையைச் சிறந்த மால்பக்தராய் நிறுவுகிறது.

மூன்றாம் இயல், அவதாரங்களுக்குத் தாயகமாய் விளங்கும் சமய நிலையையும், இந்து சமயம் பற்றியும் தெளிவு செய்கிறது. அடுத்து, அவதாரம், அதன்நோக்கம், விளக்கம், திருமாலின் அவதாரங்கள் பற்றியும் ஆய்கிறது. பின்னர் திருமங்கை பாசுரங்களில் இடம்பெறும் அவதாரங் களை விளக்கமாய் பேசுகிறது.

நான்காம் இயலில் தலம்—ஆலயம்—மூர்த்தி—தீர்த்தம் பற்றிய செய்திகள் பேசப்பெறுவதோடு, திருமாலுககுரிய திருத்தலங்கள் இத்தனை, அவை இன்னின்ன என்ற செய்தியும் விளக்கம் பெற்றிருக்கின்றன. இத்திருத்தலங் களுள் திருமங்கை சென்று தரிசித்த எண்பத்தாறு திவ்ய தேசங்களும், அத்தலங்கள் ஆழ்வார் பாசுரங்களில் அமைந்த பாங்கும் தெளிவு செய்யப் பெறுகின்றன.

சிறந்த திருமால் பக்தராகவே இத்தனை இயல்களிலும் நமக்குக் காட்சி தந்த ஆழ்வார், இக்கலைநலன் இயல் அமைந்த பாங்கினால் கலைநயம்மிக்க கலைஞராய்—அழகை ஆராதிக்கும் ஆர்வலராய்—புனைந்துரைக்கும் புலவராய்—கவிதேன்சொரியும் கவிஞராய் நமக்குக் காட்சி தருகிறார். உணர்வுகளை மடைமாற்றம் செய்துகொண்டு மன்னன் மங்கையாய் இருந்தவர் மாலடியராய் மனதிற்குத் தெரிகிறார். கவித்திறனெனும் கலைத்திறனால் வைணவப் பகதிப்பயிர் செழிக்கத் தம்மால் முடிந்த மட்டும் பாடுபடுகிறார்.

—பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

# இயல் 1

# திருமங்கை ஆழ்வார் வாழ்வும் வரலாறும்

திருமாலை முழுமுதற்பொருளாகக் கொண்ட சமயம் வைணவ சமயமாகும் வைணவர்களின். முழுமுதற்பொருள் திருமால் திருமாலிடத்து மிகுந்த பக்தி செலுத்தி ஆழங்கால் பட்டிருந்தவர்கள் ஆழ்வார்களாவர். எம்பெருமானுடைய குணங்களில் ஆழ்ந்து ஈடுபட்டவர்களாகவும், தம்மை ஆள்பவர்களாகவும் இவர்கள் இருப்பதால் இப்பெயரால் வழங்கப்பட்டிருக்கலாம்.[1] இவ்வாழ்வார்களை பதின்மர் என்றும், பன்னிருவர் என்றும் கூறுவர். இவர்கள் கி.பி. ஆறாம் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டுவரை வாழ்ந்ததாக வரலாறுண்டு இவ்வாழ்வார்கள் தென்னிந்தியாவில் தாமிரவருணிக்கரையிலும், வைகைக் கரையிலும், பாலாறு, பேரியாற்றின் கரைகளிலும் தோன்றி முக்தி அடைவர் என்று பாகவதபுராணம் கூறுகிறது.[2] தாமிரவருணி ஆற்றங்கரையில் நம்மாழ்வாரும், மதுரகவியும், வைகையாற்றங்கரையில் பெரியாழ்வாரும், ஆண்டாளும், பாலாற்றங்கரையில் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வாரும், காவிரிக்கரையில் தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பானாழ்வார், திருமங்கையாழ்வாரும், பேரியாற்றங்கரையில் குலசேகராழ்வாரும் தோன்றியது இங்குக் குறிப்பிடத்தக்கது. இவ்வாழ்வார்கள் பாடிய பாசுரங்களின் தொகுப்பே நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம். இவ்வாழ்வார்களுள் ஒருவரான திருமங்கையாழ்வார், கள்ளர் குளத்தில் பிறந்தும், திருமாலினால் ஆட்கொள்ளப்பட்டு, இறைவனுக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர். இவர்தம் வாழ்க்கைச் சுருக்கம் ஈண்டு ஓரளவிற்குக் கொடுக்கப்படுகிறது.

இவ்வியல் திருமங்கையாழ்வாரின் வாழ்வு வரலாற்றை மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு ஆய்ந்து செல்கிறது. திருமங்கையாழ்வாரின் உலகியல் வாழ்வு, இறைவாழ்வு திருமங்கையாழ்வார் பாசுரங்கள் பற்றிய அறிமுகம் என அமையும் அம்மூன்று பகுதிகளில் முதற்பகுதி திருமங்கையாழ்வாரின் காலம், இளமைப்பருவம், செய்த சிறப்புகள். அதனால் பெற்ற சிறப்புப் பெயர்கள் திருமணம் ஆகியன பற்றிய செய்திகளைச் சொல்லி செல்கின்றது இவ்வாறே இரண்டாம் பகுதியில் இறைவன் ஆழ்வாரை சோதித்தல், காஞ்சியில் நிதி கிடைக்கப்பெறல், கொள்ளை அடித்தல், கொலை, புறசமய வெறுப்பு, இறைவன் ஆழ்வாரை ஆட்கொளல், திருத்தலப்பயணம் பயணத்தின்போது பாடிய பாசுரங்கள், அவற்றின் சிறப்புக்கள் ஆகிய செய்திகள் எடுத்துச் சொல்லப்பெறுகின்றன. திருமங்கையாழ்வார் பாசுரங்கள் பற்றிய அறிமுகமாக அமையும் மூன்றாம்பகுதி ஆழ்வார் பாடிய பிரபந்தங்கள், அப் பிரபந்தங்களை அவர் பாடியருளிய விதம், சூழல், தாண்டகம் மடல் எழு கூற்றிருக்கை ஆகியவற்றின் யாப்பமைப்பும், விளக்கமும், ஆழ்வார் அவற்றைப் பாடியதுமான செய்திகளைச் சொல்லி செல்கிறது.

## 1-1-0 திருமங்கையாழ்வாரின் உலகியல் வாழ்வு

ஈண்டு திருமங்கையாழ்வாரின் காலம், இளமைப்பருவம், செய்த சிறப்புக்கள், அதனால் பெற்ற சிறப்புப்பெயர்கள், திருமணம், இல்லற வாழ்வு பற்றிய செய்திகள் கூறப்பெற்றிருக்கின்றன.

## 1-1-1 திருமங்கையாழ்வாரின் காலம்

சோழமண்டலத்தில் திருமங்கை என்னும் நாட்டில் திருவாலி திருநகரிக்கு மிகவும் அருகில் திருக்குறையலூரில் கள்ளர்குடியில் கார்த்திகை மாதம, கிருத்திகை நட்சத்திரம்

பௌர்ணமிப்பொழுதில் வியாழக் கிழமையில் இவ்வாழ்வார் பிறந்தார். இவரது தந்தை ஆலிநாடன் அல்லது நீலனாவார். திருமங்கையாருக்குப் பெற்றோரிட்ட பெயர் நீலனாகும். ம்லேச்ச படமீததிலே அலங்கரித்ததால் இப் பெயர் சூட்டினர் என்கிறது குருபரம்பரை பிரபாவம். இவர் 'சாரங்கம்' என்ற திருமாலின் வில்லின் அம்சமாய்ப் பிறந்தவர் என்பர். இவரை 'சேவா' குலத்தினர் என்று குறிப்பிடுகிறது திவ்யசூரிசரிதம்.

திருத்தலப்பயணம் செய்யும், திருவரங்க கோயிலைச் சீரமைத்தல் முதலான திருக்காரியங்களில் ஈடுபட்டு, மாலுக்கே தன்னை—தன் வாழ்வை அர்ப்பணித்து இறை வாழ்வு வாழ்ந்த ஆழ்வார் திருமங்கை திருக்குறுங்குடிக்கு வந்து ஆங்கு எழுந்தருளியுள்ள இறைவனுக்குத் தொண்டாற்றி தமது நூற்றைந்தாவது வயதில் இறைவனடி சேர்ந்ததாய் வரலாறு கூறும்.[3]

இவ்வாழ்வாரின் காலம் எட்டாம் நூற்றாண்டு என்பர்.[4] இவ்வாழ்வார் " கும்பகோணத்தை ஒத்த நந்திபுரம் (நாதன் கோவில்—இன்றைய பெயர்) என்னும் வைணவபதியைப் பற்றி சில குறிப்புகள் பாடியுள்ளார். அது கோட்டை மதில்களை உடையது காவல் மிகுந்தது. நந்திவர்ம பல்லவமன்னர் பெயரால் நடத்தப்பெற்ற போர்களில் 'நென்மலி' என்னும் இடத்துப் போர் ஒன்றாகும். அதனைத் திருமங்கையாழ்வார்,

**"நென்மலியில் வெருவச் செருவேல் வலக்கைப்**
**பிடித்த படைத்திறல் பல்லவர்கோன்"**

என்று பாடியுள்ளார் வயிரமேகன் என்னும் இராட்டிரகூடத்து அரசன் (கி.பி. 725—757) காஞ்சியில் பல்லவ மல்லனோடு இருந்தான் என்று வேறொரு பாட்டில் பாடியுள்ளார் பல்லவர் சாளுக்கியரோடு செய்த போரில் பயன்படுத்திய போர்க்கருவிகள், இசைக்கருவிகள் முதலிய

வற்றின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார். எனவே இவர் நந்திவர்ம பல்லவமல்லன் காலத்தவர்' (கி.பி. 710—775) என்று கூறுவர்.[5] மேலும் இவ்வாழ்வார் "பல்லவன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம்" என்று பல பாடல்களில் குறித்துள்ளார். இவரே 'நந்திபணி செய்த நகர் நந்திபுர விண்ணகரம்' என்றும் கூறியுள்ளார். பரமேசுவரன் என்றும் நந்திவர்மன் என்றும் இரு பெயர்களைக் கொண்டவன் பல்லவமல்லனேயாவான். இம்மன்னனே காஞ்சியில் பரமேச்சுவர விண்ணகரத்தை—வைகுந்தபெருமாள்கோவிலை அமைத்தவர். இவ்வாழ்வார் பரமேசுவரன் என்ற பல்லவ மல்லன் காலத்தவர் என்ற கருத்துமுண்டு[6] (கி பி 731—795)

திருமங்கையாழ்வார் வைரமேகனைக் குறிப்பிடும் பொழுது 'வணங்கும்' என்ற நிகழ்காலச் சொல்லை உபயோகிப்பதால் நந்திவர்மனின் சமகாலத்தவர். இந்த முடிவு சரியாயின் திருமங்கையின் காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். பேராசிரியர் ஜோவியுடிபிரில் நந்தி வர்மன் கி.பி. 779—830 வரை வாழ்ந்தான் என்கிறார்.[7]

மேலும் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமங்கையின் சமகாலத்தவர் என்பர்.[8]

திருமங்கையாழ்வாரின் வரலாறு கூறும் நூல்களெல்லாம் இவ்வாழ்வார் திருஞானசம்பந்தரைச் சந்தித்த நிகழ்வைக் குறிப்பிடுகின்றன. ஆதலால் இருவர் காலமும் ஒன்று எனக் கொள்ளலாம். சம்பந்தர் காலம் என்பர். இதனை ஏழாம் நூற்றாண்டு என்பர். ஏற்றுக் கொண்டால், ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த திருமங்கை மன்னன் திருஞானசம்பந்தரை ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சந்தித்திருககககூடும் திருஞானசம்பந்தருக்கு பதினாறு வயது கூறப்படுவதால், கி.பி 671 முதல் 686 வரை இவர் வாழ்நாளைக் கொள்வது......பெரிதும் ஏற்புடைய தாகும் என்பது திரு. மு. இராகவையங்கார் கருத்தாகும்.

திருமங்கை மன்னனை கி.பி. 660ல் பிறந்தவராகக்கொண்டு இவர் தமது இருபத்தைந்தாம் வயதில் அதாவது கி.பி 685ல் சுமார் பதினைந்து வயதுள்ள திருஞானசம்பந்தரைச் சந்தித்தார் என்றும் மேலும் ஊகம் செய்கிறார்.[9]

ஞானசம்பந்தர் திருமங்கையாழ்வார் காலமல்ல; தமிழ் இலக்கிய வரலாற்றில் சம்பந்தர் பலர் காணப்படுவதாலும், சீர்காழி சம்பந்தர் பிறந்த இடமாதலால், அவ்விடம் பிறந்த பலருக்கு 'சம்பந்தர்' என்ற பெயரிடுவது சாதாரணம் என்பதாலும் ஞானசம்பந்தர் (சைவ அடியார்) தான் திருமங்கை ஆழ்வாரை கலந்தார் என்ற கருத்து வ்லுவில்லாது போகிறது.[10]

மேலும் ஆழ்வார் வரலாறு கூறும் நூல்களே அன்றி. சைவசமய நூல்கள் ஒன்றுகூட இவ்விருவர்தம் சந்திப்பினைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. இதனை நோக்குகையில், ஏழாம் நூற்றாண்டினரான சம்பந்தரை ஆழ்வார் சந்தித்தார்; அவரும் இவரும் சமகாலத்தவர் என்ற கருத்து பொருந்தாத தாய்ப் போய்விடுகிறது.

திருமங்கை ஆழ்வார் கி.பி. 7 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்தவர் என்றதொரு கருத்தும் நிலவுகிறது.[11]

ஆக, இத்தனை கருத்து வேறுபாடுகளுக்கிடையே ஆழ்வார் திருமங்கையின் காலம் கி.பி. 7 ஆம் நூற்றாண்டின் இறுதியாகவோ, எட்டாம் நூற்றாண்டின் தொடக்கக் காலமாகவோ இருக்கலாம் என்பது ஆய்வாளர் கருத்தாம்.

### 1-1-2 இளமைப்பருவம்

இவர் சோழ அரசனது படைக்களத்திலிருந்து பயிற்சி பெற்று, சேனாதிபதியாகி வீரத்தில் சிறந்து விளங்கியதாக வரலாறு கூறுகிறது. தனது வீரத்தினால் பகைவரை வென்றவர் என்பதால் இவர் 'பரகாலன்' என அழைக்கப் பட்டதாக ஆழ்வார்கள் வைபவம் கூறும். இவரது ஆற்றலை உணர்ந்த சோழ மன்னன் இவரை திருமங்கைப்பகுதிக்கு

சிற்றரசனாக்கிச் சிறப்பித்தான் என்றும், இசை, நடனக் கலைகளில் இவ்வாழ்வார் பெரிதும் நாட்டம் உடையவராயிருந்து பொழுதுபோக்கினார் என்றும் செய்திகளுண்டு[12]

## 1-1-3 திருமங்கையாழ்வார் செய்த சிறப்புக்கள், அதனால் பெற்ற சிறப்புப் பெயர்கள்

திருமங்கை ஆழ்வாருக்கு திருமங்கை பரகாலன், கலியன், கலிகன்றி, அருள்மாரி ஆகிய சிறப்புப் பெயர்களுண்டு. மேலும் ஆழ்வார் கலித்வம்ஸன் லோகதிவாகரன், சதுஷ்வி சிகாமணி, நாலுகவிப்பெருமாள், மங்கையர்கோன், ஆலி நாடன் அரட்டமுக்கி கொங்குமலர்க்குழலியர்வேள், கொற்ற வேலோன், ஆடல்மாவலவன் மங்கைவேந்தன் என்றும் பல பெயர்களால் சிறப்பித்து அழைக்கப்பட்டார்

திருமங்கையாழ்வார் குமுதவல்லியைத் திருமணம் செய்ய விரும்பி, அவள் விருப்பப்படி வைணவரானார் "இறைவனது பன்னிரு நாமங்களை ஓதி, மேனியில் பன்னிரண்டு இடங்களில் திருமண்காப்பு அணிந்து, தாசன் என்னும் திருநாமம் ஏற்றார். திருவெட்டெழுத்தை சுற்றார். இறைவன் உளமகிழ்ந்து 'உன் நாமம் திருமங்கையாழ்வார் நம்முடைய பதிகள் பலவற்றையும் பாடி நீ உய்வாயாக' என வாழ்த்தினான் என்று ஆழ்வார்கள் வைபவம் கூறும்.[13]

இவ்வாழ்வார் தன்னை ஆட்கொள்ள மணமகன் கோலத்தில் வந்திருந்த இறைவனைத் தடுத்து களவாடி, அவர்தம் செல்வங்களத்தனையும் கவர்ந்தார் அதுவுமன்றி, பெருமாளின் சுழற்ற முடியாத கணையாழியை தன் பற்களால் கடித்து வாங்கினார். அம்மிடுக்கை நோக்கி எம்பெருமான் 'நம் கலியனோ?' எனச் சிறப்பித்தழைத்தார்.[14]

இவ்வாழ்வார், "தமது திவ்விய பிரபந்தங்களால் உலகத்தை நன்னெறிச் செலுத்திக் கலிதோஷத்தைக் கடிந்த

தனால் இவருக்கு 'கலிகன்றி' என்றும் ஓர் திருநாமம் வழங்கப் பட்டது "[18]

ஆழ்வார், திருவரங்கனது திருக்கோயில் திருமதில் கட்டுகையில் தொண்டரடிப் பொடியாழ்வார் பெரிய பெருமாளுக்குத் திருமாலைச் சேர்க்கின்ற இடம் நேர்பட, அவ்விடத்தைத் தவிர்த்து அம்மதிளைக் கட்டினார். இதனால் தொண்டரடியார் மலர்கொய்யும் ஆயுதத்திற்குத்திருமங்கை யாழ்வாரின் திருப்பெயர்களுள் ஒன்றான 'அருள்மாரி' எனும் திருப்பெயரை இட்டு மகிழ்ந்தார் என்பர்.

## 1 1-4 திருமணம்

நீலன் என்ற திருமங்கையாழ்வார் தன் மனதிற்கியைந்த குமுதவல்லி என்பவளை மணந்து, இல்லற இன்பம் துய்த்தார். குமுதவல்லியின் அழகினை அறிந்து, அவளை மணக்க விரும்ப, அவளது எண்ணப்படி வைணவனாகி, அவளை மணந்தார். பின் அவளுக்குத் தந்த வாக்குப்படி ஓர் ஆண்டு முழுதும் திருமாலடியார்கட்கு உணவிட்டு ஆராதித்து மகிழும் பணியில் ஈடுபட்டார்.

## 1-2-0 திருமங்கையாழ்வாரின் இறைநெறி வாழ்வு

இறைவன் ஆழ்வாரை சோதித்தல், காஞ்சியில் நிதி கிடைக்கப் பெறல், கொள்ளையடித்தல் இறைவன் ஆழ்வாரை ஆட்கொள்ளல், திருத்தலப்பயணம், பயணத்தின் போது பாடிய பாசுரங்கள், அவற்றின் சிறப்புக்கள் ஆகிய செய்திகள் ஈண்டு விளக்கப்பெறுகின்றன.

## 1-2-1 ஆழ்வாரை இறைவன் சோதித்தல்

வைணவ அடியார்களைத் தினமும் ஆராதிப்பதில் ஆழ்ந்திருந்த திருமங்கை தனது செல்வங்களையும், சோழ

அரசனுக்குச் செலுத்தவிருந்த திறைப்பொருளையும் செலவிட்டு மகிழ்ந்தார். திறைப்பொருள் செலுத்தாததால் மன்னனுக்கும், ஆழ்வாருக்குமிடையே பூசல் ஏற்பட்டது. அது போராக, அப்போரில் தோல்வியுற்ற மன்னன் அந்தணனாய் வந்து ஆழ்வாரை வஞ்சித்து, இறுதியில் ஒரு தேவாலயத்தில் சிறை வைத்ததாக வரலாறு.[16]

## 1-2-2 காஞ்சியில் நிதி கிடைக்கப்பெறல்

பாகவதர்கட்கு உணவிட்டு அவர்களின் பசியாற்ற இயலாத தன் நிலைமைக்கு எண்ணி, ஆழ்வார் தானும் மூன்று நாட்கள் உண்ணாமல் இருந்தார். அதுகண்டு பொறாத காஞ்சிவரதன் ஆழ்வார் கனவில் வந்து "காஞ்சிக்கு வந்தால் பொருள் தருகிறோமென" மன்னவன் அனுமதியுடன் அவரும் சென்றார். பொருள் கிடைக்காது வருந்திய நிலையில் இறையருளால் வேகவதி ஆற்றங்கரையில் பெரும்நிதி பெற்றார். அரசனுக்குத் திறையாக அளித்த செல்வம் தவிர பிற பாகவதர்கட்கு பணி செய்வதில் செலவிட்டார் இப்படி ஓர் நிகழ்ச்சி இவரது வாழ்வில் நடந்ததாக வரலாறு கூறுகிறது. இது ஆழ்வாருக்கு ஏற்பட்ட முதல் இறை அனுபவமாகும் திருமங்கையாழ்வாரின் தெய்வீகத்தை உலகுக்கு உணர்த்த இறைவன் செய்த முதல்கட்ட லீலை இது எனலாம்.

## 1-2-3 கொள்ளையடித்தல்

இறையருளால் கிடைக்கப்பெற்ற நிதிகொண்டு, திருமால் அடியார்களை ஆராதித்த ஆழ்வார், நிதி ஏதுமிலாத நிலையில் திருமால் அடியார்கட்கு உணவிட்டு பசியாற்றல் முதலான தொண்டாற்ற தன் குலத்தொழிலாம் களவுத் தொழிலை மேற்கொண்டதாகத் தெரிகிறது. சாதுக்கள், ஏழைகள் பொருளைப் பறிகொடுத்தால் மீண்டும் அது அவர்கள் வீடுபோய் சேரும்படி தமது தொழிலைச் செய்து வந்தார்.[17]

திருமங்கையாழ்வார் வரலாற்றைப் பார்க்கும்போது அவர்தன் குலத்தொழிலாம் களவுத்தொழிலை மேற்கொண்டு திருமாலடியார்களை ஆராதித்தார் என்பது குறிப்பிடத் தக்கது. வைணவநெறியில் ஒழுகும் பெரியவர் ஒருவர் களவு செய்தலெனும் இழிதொழிலில் ஈடுபடலாமோ என்று எண்ணத் தோன்றும். வைணவத்தில் பகவானைவிட பாகவதர்கட்கு அதிக முக்கியத்துவம் தருகிறார்கள். ஆழ்வார்களும் ஆசாரியர்களும் பாகவதரை ஆராதிப்பதில் பெரும் ஈடுபாடு காட்டியுள்ளனர்.

ஆழ்வார் திருமங்கையும் தன்னிடம் நிதி ஏதுமில்லாத நிலையில், திருமாலடியார்களை உபசரிப்பதற்காக வேறு வழியின்றி தமது குலத்தொழிலாம் களவுத்தொழிலை மேற்கொள்கிறார். ஆதலால் ஆழ்வாரது திருமாலடியார் களை ஆராதிக்க வேண்டும் என்ற பேரவா களவு செய்தேனும் அதை நிறைவேற்ற தூண்டுகிறது. ஆழ்வாரது 'அடியார்கள் ஆராதனை' எனும் குறிக்கோளின் முன் 'களவுசெய்தல் இழிவு' என்ற கொள்கை பயனற்றுப் போகிறது. ஆக, ஆழ்வார் களவுசெய்தது திருமாலடியார்கட்காக அன்றி தனக்காக, தன் சுயநலத்திற்காக அல்ல என்பது தெளிவாவ தால் ஆழ்வாரின் சிறப்பு குன்றிவிடாது மேலும் ஒளிவீசவே செய்கிறது எனலாம்

## 1-2-4 கொலை செய்தல்

ஆழ்வார் திருமாலால் ஆட்கொள்ளப்பட்டு வைணவ தல யாத்திரை செய்து முடிந்தபின், திருவரங்கனுக்குக் கோயில் மதில் கட்டுதல் முதலான பணிகளுக்காக நாகப்பட்டினத்தில் இருந்த தங்கத்தினாலான புத்தரின் சிலையினைக் கவர்ந்து வந்ததாக செய்தி உண்டு. திருவரங்க கோயில் திருப்பணி முடிந்ததும் அப்பணியில் ஈடுபட்டிருந்த சிற்பி முதலா னோர்க்கு கூலி கொடுப்பதற்கில்லாமையால் அவர்களைப் பரமபதம் சேர்ப்பதாகக் கூறி அவர்களது இசைவின் பேரில்

தோணியில் ஏற்றிச் சென்று, காவிரியின் பெருவெள்ளத்தில் கவிழ்த்ததாகவும், அவர்கள் கரையில் நின்றவர் கண்டு வியக்கும் வண்ணம் சோதிவடிவாய் பரமபதம் சென்றதாகவும் திருமங்கை வரலாறு கூறும் நூல்கள் செப்புகின்றன.

ஆழ்வார் தங்கத்தினாலான புத்தரின் சிலையினை களவாடிய செயல் அவருக்கிருந்த புத்தசமய வெறுப்பினைக் காட்டுவதாய் இருக்கலாம்; அல்லது திருவரங்கக் கோயிலைச் சீரமைக்க வேண்டும் என்ற பேராசையினாலிருக்கலாம்

ஆனால் கோயில்பணி செய்த சிற்பிகளை காவிரியில் தள்ளி கொலை செய்தார் எனும்போது அது ஓர் பெரும் கொலை நிகழ்வாகவே தெரிகிறது. ஆனால் சிறிது ஆழ்ந்து நோக்கினால் ஆழ்வாரை ஓர் கொலைக்குற்றவாளியாக ஏற்க நெஞ்சு மறுக்கிறது. ஆலயப்பணி செய்த சிற்பிகட்குத் தர வேண்டிய கூலியினை ஆழ்வார் தந்திருந்தால் அப்பணம் பெற்ற அவர்கள் சில நாட்கள் திருப்தியுடன் வாழ்ந்திருப்பர். ஆனால், ஆழ்வார், தன் கையில் நிதி ஏதுமில்லை என்ற காரணத்தால் மட்டுமின்றி, அரங்கனது ஆலயத்தை சீரமைந்த சிற்பிகளை கடையேற்றி பேரின்பம் உணர்த்த வேண்டும் என்ற நல்லெண்ணத்தினாலும் அவர்களது இசைவின் பேரில் அழைத்துச் சென்று காவிரியின் வெள்ளத்தில் ஆழ்த்தியிருக்கலாம். சிற்றின்ப உயிர்களை, சிற்றின்ப வெள்ளத்தில் உழன்றுகொண்டிருந்த உயிர்களை பரமாத்மாவினது பேரின்ப சேர்க்கையில் ஆழ்த்த வந்திருந்த திருமங்கையாழ்வார் போன்ற வைணவ சமயவாதிகளின் பொருள் பொதிந்த செயலுக்கு மாசுகற்பிக்க பிற சமயவாதிகளால் கட்டுவிக்கப்பட்ட கட்டுக்கதையாய் இந்நிகழ்வு அமைந்துமிருக்கலாம்.

மேலும் ஆழ்வார் திருமங்கை சம்பந்தப்பட்ட இந்நிகழ்வு நடந்திருக்கும் என்பதற்கு சான்றுகளில்லை சிறந்த வைணவ பக்தரான ஆழ்வார் புறசமயவாதிகளை வாதினில் வென்று

வெற்றிவாகைச் சூடி வைணவத்தை வளர்த்தவர் ஆவார். வாதில் தோல்வியுற்ற புறசமயவாதிகள் ஆழ்வாரின் மேலுள்ள வெறுப்பினை அவரது வெற்றியை களவின் வெற்றியாக்கி திரித்துக் கதைக்கட்டி இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. அதுமட்டுமன்றி நாகையில் தங்க[18] விக்ரகம் மந்திரகாப்புடன் புத்தராலயத்தில் இருந்ததற்கும் சான்றுகளில்லை. மேலும் ஆழ்வார் திருமங்கையார் இறையருள் பெற்றபின் தமது பழைய வாழ்க்கைக்கு திரும்பவில்லை. என்பதனை அவர்தம் வாக்கிலேயே அறியமுடிகிறது.

> "இனிஎப் பாவம்வந்(து)
> எய்தும்சொல் லீர்! எமக்(கு)
> இம்மை யேஅருள் பெற்றமையான்."[19]

## 1-2-5 புறசமய வெறுப்பு

திருமங்கையாழ்வார் புறச்சமயங்களான பௌத்த சமண சமயங்கள்மீது மிகுந்த வெறுப்புற்றிருந்ததை அவர் தம் பாசுரங்கள் வழி அறியலாம் புறசமய வெறுப்பு என்பதனை இறைவனை முழுவதுமாய் உணரும் முன் பக்தி நிலையில் ஏற்படும் ஓர் ஆரம்பகட்ட நிலை எனலாம். இறைவனை பழுதற உணரும்போது அவனுக்கு அனைத்தும்—அனைத்துச் சமயங்களும்—சமயதெய்வங்களும் ஒன்றாகவே—ஒரே பரம்பொருளாகவே தெரிகின்றன. இந்நிலையில் இறைவனது திருக்காட்சி காணப்பெற்று இறையருள் பெற்ற நிலையில் இவ்வாழ்வார் புறச்சமய வெறுப்பினைக் கொண்டிருந்தார் என்றால் அது அவரது முதிராத பக்தி நிலையினைக் காட்டி அவரை ஓர் ஆரம்பநிலை பக்தராகக் காட்டுகின்றது. ஆனால் ஈண்டு திருமங்கையாழ்வார் என்ற தனிமனிதனை நோக்காது அவர் வாழ்ந்த காலச்சூழல், காலம், சமுதாய, அரசியல் பின்னணியை நோக்குதல் வேண்டும்.

பக்தி இயக்கக் காலம் என்பது கி. பி. 6ஆம் நூற்றாண்டிலிருந்து 9ஆம் நூற்றாண்டு வரையிலான காலக்கட்டத்தில் நிகழ்ந்த ஓர் பேரியக்கம் ஆகும். இக் காலக்கட்டத்திற்கு முன் தமிழகத்தை களப்பிரர் என்ற இனம் ஆண்டு வர, அவர்கள் காலத்தில் சமணசமயமும் பௌத்த சமயமும் செல்வாக்குடன் திகழ்ந்தன. ஆனால் இக் களப்பிரர்கள் தெற்கே நின்ற சீர்நெடுமாறன் என்னும் பாண்டிய அரசனால் தோற்கடிக்கப்பட்டு அரசியல் செல்வாக்கிழந்தார்கள். அச்சமயம் வடக்கே பல்லவர்கள், ஆட்சிச் செல்வாக்குப் பெற்றுத் தொண்டை மண்டலம் உள்ளிட்ட பகுதிகளைத் தன் வசமாக்கி இருந்தது இவர்களது காலத்தில்தான் சைவ வைணவ சமயங்கள் புத்துயிர் பெறத் துவங்கின.

அரசியலில் ஏற்பட்ட மாற்றம் சமயத்திலும் பெரிய மாற்றத்தினை ஏற்படுத்தியது. இதுவரை ஆதிக்கம் செலுத்தி வந்த பௌத்த, சமண சமயங்கள் ஆட்டம் காணத் துவங்கின. இப் புறச் சமயங்களின் மீதிருந்த வெறுப்பும் பழிவாங்குமுணர்வும் வெளிப்பட்டு செயல் வடிவம் பெறத்துவங்கின. இந்து சமயவாதிகட்கு தமது சமயத்தை வளரச் செய்ய புறச்சமயங்களான பௌத்த சமண சமயங்களை ஒடுக்குவதோடு வேரோடு அழிக்க வேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. அதனை தன் சமயத்திற்குச் செய்யும் புனிதப் பணியாக எண்ணுகின்ற ஓர் மனப்பான்மை உருவானது.

இந்து சமயப் பயிரை செழுமையுற வளர்த்து வாழ வைக்க வேண்டி இந்துசமய சான்றோர் பல அரும் பணிகளை மேற்கொள்ளவேண்டி இருந்தது இதுவரை இந்து சமயத்திலிருந்த சில வேண்டாத களைகள் பறிக்கப் பட்டன; மக்களைக் கவரும் வகையில் 'பக்திநெறி' பிரபலமானது; பெண்களும் பக்தியினால் முக்தி அடையலாம் என்று பெண்களுக்கு சமத்துவம் தந்து ஆண்டாளையும் காரைக்காலம்மையாரையும் காட்டித் தாய்க்குலங்களின்

மனங்கள் கவர்ந்திழுக்கப்பட்டன. நாட்டுப்புற மக்களைக் கவரும் வகையில் சாழல், தாலாட்டு, ஊசல் போன்ற நாட்டுப்புற அமைப்பில் பக்திப்பாடல்கள் பாடப்பெற்று மக்கள் இலக்கியமாய் மலர்ந்தன. மேலும் இந்துசமயப் பெரியோர்களின் வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்கள், அவர்களது தெய்வீகச் செயல்கள் எளிய மக்களிடையே புதிய நம்பிக்கையை ஏற்படுத்தின. இந்து சமயத்தில் பெருமைகள், ஏற்றங்கள் சமயப் பெரியோர்களால் பேசப் பட்டு மக்களைக் கவர்ந்ததோடு, புறச்சமய வெறுப்பினை அவர்கள்பால் தூண்டும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அம்முயற்சியின் விளைவே பௌத்த, சமண சமயங்களை இழிவுபடுத்திப் பேசுதல், செயலாற்றுதல் முதலான செயல் களாகும். இச்செயல் அக் காலக்கட்டத்தின் கட்டாயத் தேவையாக இருந்தது.

ஆக, 'புறச்சமயவெறுப்பு' என்பதனை ஆழ்வார் என்ற 'தனிமனித வட்டத்துள்' நோக்காது, அக் காலக்கட்டத்தின் அரசியல், சமுதாய, சமயப் பின்னணிச் சூழலை நோக்க அது அக்கால கட்டாயத் தேவையாக இருந்து இருக்கிறது. வைணவசமயப் பெரியோரான இவ்வாழ்வார் தம் சமயத்தை வளர்க்க வேண்டி புறச்சமய வெறுப்பினை ஓர் கருவியாகக் கைக்கொண்டார் எனக் கொள்ளலாம். அக் கண்ணோட்டத் தில் பார்த்தால் ஆழ்வாரின் புறச் சமய வெறுப்பு என்பதனை தவறான ஒன்றாகக் கருதமுடியாது.

### 1-2-6 ஆழ்வாரை இறைவன் ஆட்கொள்ளல்

பெண்ணழகில் ஈடுபட்டிருந்த ஆழ்வாரைத் தன்னழகில் மயக்கி ஆட்கொள்ள திருமால் திருமணக் கோலத்தில் தன் பரிவாரங்களுடன் வந்தார். ஆழ்வார் அவர்களைத் தடுத்து செல்வங்களைக் களவுகொண்டு, மணமகன் வலது கணை யாழியை வாயினால் கடித்து, மிக முயன்று கழற்றி, களவுச் செல்வங்களைத் தூக்க இயலாது, 'என்மந்திரம் செய்தாய்'

என வாள்வலியால் இறைவனிடம் திருவெட்டெழுத்து மந்திரோபதேசம் பெற்றார். உள்ளத்தில் இறைவன் இருக்கின்றார் எனினும் உள்ளத்தில் மாயை சூரியனை மேகம் மறைப்பதுபோல் மறைத்து வைத்துள்ளது. அம் மாயையை அகற்றினால் உள்ளிருக்கும் இறையைக் காணமுடியும். 'அவனதருள் பெற்றால் அது நீங்கும்' என்பதற்கேற்ப மாயை நீங்கிடப் பெற்று ஆழ்வார் அவனை உணர்ந்துகொண்டார்.

இறைவனிடம் உபதேசம் பெற்று இவ்வாழ்வார் உடனே 'வாடினேன்' எனத் தொடங்கி பத்துப் பாசுரப் பாடல் பாடி முடிக்க, திருமால் இலக்குமியோடு திருக்காட்சி கொடுத்ததாகவும், 'திருத்தலப்பயணம் மேற்கொண்டு தீந்தமிழ்ப் பாசுரங்கள் பாடு' என்று இறைவன் கட்டளையிட்டதாகவும் ஆழ்வார்கள் வரலாறு கூறுகிறது.

## 1.2-7 திருத்தலப் பயணம்

இறைவன் ஆணைப்படி ஆழ்வார் நாடு முதலியன துறந்து, திருமாலவனது திருத்தலங்களுக்குப் பயணமானார். திருப்பிரிதி முதல் திருக்குறுங்குடி ஈறாக எண்பத்தாறு வைணவத்தலங்களைக் கண்டு தலங்கள்தோறும் நெஞ்சுருகிப் பாசுரங்களைப் பாடிச் சென்றார். திருத்தலப் பயணம் முடிந்தபின்னும் பல பாசுரங்களை ஆழ்வார் பாடியதாக செய்தியுண்டு அங்ஙனம் அவர் பாடிய திருமொழிகளின் தொகையே பெரிய திருமொழியாகும்

## 1-2-8 பயணத்தின்போது பாடிய பாசுரங்கள்

திருமங்கை ஆழ்வார் பெரியதிருமொழி, திருக்குறுந் தாண்டகம் திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் முதலான பக்திப் பாசுரங்களைப் பாடியருளியுள்ளார்.

### 1-2-9 அவற்றின் சிறப்புக்கள்

திருமங்கையாழ்வார், பல நூல்களையும் கற்றறிந்தவர். இவருடைய பாசுரங்களில் பழந்தமிழ் நூல் கருத்துக்கள் பலவற்றைப் பார்க்கலாம். இவருடைய பாடல்கள் அனைத்தும் சிறந்த செந்தமிழ் நடையில் அமைந்தவை எனலாம்.

திருமங்கையாழ்வார் பாடல்களில் தமிழகத்துச் சரித்திரக் குறிப்புக்கள் பலவற்றைக் காணமுடிகிறது. அவர் காலத்து நிகழ்ச்சிகள் பலவற்றை அவர் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். மேலும் இவ்வாழ்வார் பாடல்களில் வரலாற்று உண்மைகள் பலவும் அறநெறிகள் பலவும், பழந்தமிழர் பண்பாடுகளும் காணப்படுகின்றன.

திருமங்கை தன் பாசுரங்களில் மூவர் தேவாரங்களும் பயன்படுத்தப் பெற்றுள்ளமையைக் காணலாம் ஆழ்வார் பாடல்களுள், இவர்தம் பாசுரங்களே கவிச்சுவை நிரம்பியன என்கிறார் மறைமலை அடிகளார்.[30]

### 1-3-0 திருமங்கைஆழ்வார் பாசுரங்கள் —அறிமுகம்

ஈண்டு ஆழ்வார் பாடி அருளிய பிரபந்தங்கள், அப் பிரபந்தங்களை பாடி அருளிய சூழல், தாண்டகம், மடல், எழுகூற்றிருக்கை அமைப்பும் விளக்கமும், ஆழ்வார் அவற்றைப் பாடியதும் ஆகிய செய்திகள் இடம் பெறுகின்றன.

### 1-3-1 ஆழ்வார் பாடியருளிய பிரபந்தங்கள்

நம்மாழ்வார் அருளிச்செய்த சதுர்வேத சாரமான நான்கு திவ்யப்பிரபந்தங்களுக்கு திருமங்கையாழ்வார் ஆறங்கம் கூறுவதால் ஆறு பிரபந்தங்கள் பாடி அருளினர். அவை பெரிய திருமொழி (1084 பாசுரங்கள்) திருக்குறுந்தாண்டகம்

(20 பாசுரங்கள்) திருவெழுகூற்றிருக்கை சிறிய திருமடல் பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் (30 பாசுரங்கள்) ஆகும்.

### 1-3-2 அப்பிரபந்தங்களை பாடி அருளிய சூழல்

இறைவன் தானே சென்று திருமங்கையை வலிய ஆட்கொண்டு திருமந்திரம் உபதேசித்தருள ஆழ்வாரும் திருமந்திரார்த்தத்துக்கு எல்லை நிலமான திவ்யதேசங்களை 'வாடினேன் வாடி' எனத் தொடங்கி எம்பெருமான் உகந்தருளின இடமே சிறந்தது என்று அவற்றை பெரிய திருமொழியில் அநுபவித்துப் பாடுகிறார்.

இத்திருமொழி அளவால் பெரியதாய் 'பெரிய திருமொழி' என வழங்கப்பெறுகிறது. ஏனைய ஆழ்வார்களருளிய திருமொழிகளிலும் அளவில் மிக்கு, நூற்றி எட்டு திருமொழிகளைப் பெற்றுள்ளது. இப்பெரிய திருமொழியில் பதினோரு பத்துக்களே. பதினோறாம் பத்து மட்டும் எட்டு திருமொழிகளை பெற்றுள்ளது. மேலும் பத்தாம்பத்து ஏழாம் திருமொழியில் மட்டும் பதினான்கு பாசுரங்கள் பாடப் பெற்றிருக்க, மற்ற திருமொழிகள் பத்துப் பாசுரங்களால் அமையப்பெற்றுள. ஆக, இப் பெரிய திருமொழியில் (1084) ஆயிரத்து எண்பத்து நான்கு பாசுரங்களுள.

வைணவத் திருத்தலங்களைச் சிறப்பித்துப் பாடுதல், அகப்பொருள் துறையில் தலைவன் தலைவி தன்மைப் புலப்பட பாடல், இறைவனது பெருமைகளை பலவாறு புகழ்ந்து பாடுதல், தன் பெருமைகளை தனக்குத்தானே சிறப்பாக பாடிக்கொள்ளல் ஆகிய செய்திகள் இப்பெரிய திருமொழியில் காணப்பெறுகின்றன. பண் தாளங்களுடன் இத்திருமொழி பாடப்பெற்றிருக்கலாம் என்ற கருத்தும் உண்டு[21]

ஆழ்வாரின் இவ்வனுபவ பாசுரங்களுக்கு மனங்குளிர்ந்த இறைவன் ஆழ்வாருக்கு சம்சார வாழ்வில் வெறுப்புண்

டாகும்படி அதனுடைய தன்மையை அறிவிக்க, ஆழ்வாரோ சம்சார சாகரத்திற்கு மிகவும் அஞ்சி நடுங்கி மாற்றமுள என்னும் திருமொழியிலே "ஆற்றங்கரை வாழ்மரம்போல்" "காற்றத்திடைப்பட்ட கலவர் மனம்போல்" "மரம் போலொரு தரையிலே பயின்றாற்போல்" "இருபாடெரி கொள்ளியினுள் எறும்பேபோல்" 'வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போல்" என்ற தமது அச்சத்திற்குப் பலவற்றை சான்றுகளாகச் சொல்லிக் கதறுகிறார்.[22]

இப்படி இவர் கதறியும், சிறுகுழந்தைகள் பசிபசியென்று கதறி அழுதாலும் அஜீரணம் முதலியவை கழிந்து உண்மை யான பசி உண்டாகுமளவும் சோறிடாத தாயைப்போல் எம்பெருமானும் இவருக்கு முற்ற முதிர்ந்த பக்தி பிறக்கு மளவும் முகங்காட்டக் கூடாது. அலட்சியமாயிருக்க ஆழ்வார் தாகம் கொண்டவர்கள் நீரிலே விழுந்து நீரைக் குடிப்பவரும் நீரை வாரி மேலே இறைத்துக் கொள்வதும் செய்வதும்போல், இறைவனை வாயால் பேசியும், தலையாலே வணங்கியும் நெஞ்சாலே நினைந்தும் தரிக்கிறார்.[23] (திருக்குறுந்தாண்டகத்தில்)

தாகம் அளவற்றதாயிருக்கச் சிறிது குடிக்கத் தண்ணீர் திருப்தி தராது, மேலும் தாகத்தை அதிகமாக்குவதுபோல, திருக்குறுந்தாண்டகத்தில் அனுபவித்த அனுபவம், மேலும் அவன்பால் மிக்க ஈடுபாட்டினை ஏற்படுத்திவிட, நின்னடி யினை பணிவன் வருமிடரகலமாற்றோ வினையே என்று ஆர்த்தராய்ச் சரணம் புகுகிறார்.[24] (திருவெழுகூற்றிருக் கையில்)

அப்போதும் இறைவன் ஆழ்வார் மூலமாய் இன்னும் சில பாசுரங்களை வெளியிட வேண்டி வாளாயிருக்க, கடலரசனை இலங்கையை அடைய வழி விடுமாறு வணங்கிய இராமபிரான் அவனது இறுமாப்பைக் கண்டு 'இதோ கடலையே வற்றச் செய்து விடுகிறேன்' என்றுரைத்தது போல், இவரும் 'நமது எண்ணம் நிறைவேற்றாத இவன் ஏதுக்கு? அவனுடைய

ஸ்வரூபகுண விபூதியையும், அவன் உகந்து எழுந்தருளியிருக்கு மிடங்களையும் அழித்துவிடுகிறேன் என அவற்றை அழிக்கப் பார்க்கிறார்.[25] (சிறிய திருமடல், பெரிய திருமடல்)

இறைவன் அதுகண்டு, ஆழ்வார்க்குத் திருமுகங்காட்டி யருள அதனால் உண்டான ஆனந்தத்தை பேசித் தலைக் கட்டுகிறார் திருநெடுந்தாண்டகத்தில்.[26]

### 1-3-3 தாண்டகம், மடல், எழுகூற்றிருக்கை—யாப்பமைப்பும், விளக்கமும், ஆழ்வார் அவற்றைப் பாடிய விதமும்

தாண்டகம் என்பது ஓர் வகைப் பிரபந்தம். இது அறுசீரால் ஆவது. எண்சீராலாவது இஷ்டதேவதையைப் புகழ்ந்து பாடுவது. அறுசீர்க்கொண்டது குறுந்தாண்டகம்; எண்சீர் கொண்டது நெடுந்தாண்டகம். நெடுந்தாண்டகத்தில் அடிதோறும் (மெய்யெழுத்துட்பட) இருபத்தாறெழுத்துக் கள் குறைவின்றி இருக்கவேண்டும் என்னும் நியதியுண்டு.[27]

திருநெடுந்தாண்டகம் முப்பது பாசுரங்கள் கொண்டது. இது விஷயவைலக்ஷண்யத்தாலே முதற்பத்து, இரண்டாம் பத்து, மூன்றாம்பத்து என மூன்று பகுதியாக விளங்குகிறது. முதற்பத்து ஆழ்வார் தாமான தன்மையால் அருளிச் செய்தது; இரண்டாம்பத்து திருத்தாயார் வார்த்தையாக அருளிச் செய்தது; மூன்றாம்பத்து தோழியோடே தனது வருத்தங்கள் கூறும் தலைமகள் வார்த்தையாய் வருவது.

திருநெடுந்தாண்டகத்தை இறுதியாய் இன்றி, பெரிய திருமடல் இறுதியாய் பாடியது என்பர் சிலர். பெரிய திருமடலோடே தமது பாசுரங்கள்தனை ஆழ்வார் முடித்துக் கொண்டார் என்று கொண்டால் ஆழ்வார் அவாவற்று வீடு பெற்றமை விளங்காதொழிகின்றது. ஆகவே திருநெடுந் தாண்டகத்தை இறுதிப் பிரபந்தமாய்க் கொள்வர்.[28]

எம்பெருமானின் அருளினால் இவருடைய மனம் ஸம்ஸாரத் துக்கத்தை மறந்து அதைத்தாண்டி இறைவனது

அனுபவத்தில் ஆழ்ந்ததின் மேல்வந்த பிரபந்தம். ஆகையாலே இது தாண்டகம் ஆயிற்று.[29]

## மடல்கள்—சிறிய திருமடல், பெரிய திருமடல்

'மடல்'—இது அகப்பொருள்துறைகளில் ஒன்று. காதலுணர்வில் கனிவுற நின்று பாடப்படுவதாகும். அறம் முதலானநாற் பொருள்களில் இன்பமே சிறந்தது; மேலானது என்னும் வேட்கை புலப்படுமாறு இவ்விலக்கியம் பாடப் பெறுகிறதாம்.[30]

சிறிய திருமடல் நூற்றம்பத்தைந்து அடிகளினால் அமைந்த கலிவெண்பாவாலானது; பெரிய திருமடல் இருநூற்றுத் தொண்ணூற்றேழடிகளினால் அமைந்த கலிவெண்பாவால் அமைந்தது.[31]

சிறிய திருமடல் சிறியதான அளவினதாய் 'சிறுத்திரு மடல்' என வழங்கப்பட்டிருக்கிறது என்பர்.[32]

இவ்விரு திருமடல்களிலும் ஆழ்வார் பெண்ணை மடலூர்வேன்; மடலூர்வேன் என மாயவனை மிரட்டுகிறார் எனலாம். உண்மையில் இவற்றில் மடலூர்தலில்லை. இலக்கணப்படி திருமடலை ஒரே பாட்டாகக் கொள்வர்.[33]

## திருவெழுகூற்றிருக்கை—விளக்கம்

கவிகளில் ஆசுகவி, மதுரகவி, சித்திரக்கவி, வித்தாரக்கவி என்று நான்கு வகைகளுண்டு. எழுகூற்றிருக்கை என்பது சித்திரககவியைச் சேர்ந்தது என்பர்.

திருவெழுகூற்றிருக்கை—திரு எழு கூற்று இருக்கை. திரு—முக்தி இன்பம் எழு—எழுகின்ற (அ) எழுப்புகின்ற. கூற்று இருக்கை—சொற்களின் இருப்பிடம். அதாவது செல்வமும், வீட்டின்பமும் தருதற்கு இருப்பிடமாகிய பதிகம் என்பது பொருளாம்.[34]

எழுகூற்றிருக்கை என்பது ரதபந்தத்தில் அமைக்கத்தக்க ஒரு பாசுரம். தேரின் உருவந்தோன்றக் கட்டங்கள் போட்டு

அவற்றில் எண் முறையே பாசுரப்பகுதிகளை அடக்க வேண்டும். தேரானது மேற்பாகமென்றும் கீழ்பாகமென்றும் இரண்டு பாகங் கொண்டதாயிருக்கும். ஒவ்வொரு பாகத்திலும் ஏழுகூறுகள் உண்டாம்படி கீறவேண்டும். அப்படிக் கீறும்போது, முதற்கூறு மூன்று அறையும், இரண்டாங்கூறு ஐந்து அறையும், மூன்றாங்கூறு ஏழுஅறையும், நான்காங்கூறு ஒன்பது அறையும், ஐந்தாங்கூறு பதினோ ரறையும், ஆறாங்கூறு பதின்மூன்றறையும், ஏழாங்கூறும் அங்ஙனமேயாக இப்படி ஒன்றற்கொன்று இரண்டறை மேற்பட முறையே கீறவேண்டும். மேற்பாகத்தில் தலையில் இருந்தும் கீழ்பாகத்தில் அடியில் இருந்தும் இந்த க்ரமங் கொள்ளத்தக்கது. வீரசோழியம் முதலிய இலக்கண நூல் களில் இதன் இலக்கணம் சுருங்கக் கூறப்பட்டுள்ளது.[35] எண்கள் நிரம்பக் கொண்ட ரதபந்தமே எழுகூற்றிருக்கை எனப்படும்.[36]

ஒன்றுமுதல் ஏழு வரையுள்ள எண்கள் கூடியும் குறைந்தும் பெரும்பாலும் ஆசிரியப்பாவால் பாடப்பெறும் சித்திரக்கவிகளில் இதுவொன்றாம். இறைவனது அருட் செயல்கள், சில தத்துவங்களை வைத்துப் பாடுவது மரபாம்.

ஆழ்வார்களுள் திருமங்கை ஆழ்வார் மாத்திரமே இவ்வகையான சித்திரக்கவி பாடினவர் என்பது குறிப்பிடத் தக்கது. நாயன்மார்களில் ஞானசம்பந்தரும், மாறலைங்கார நூல் ஆசிரியர் ஒரு எழுகூற்றிருக்கையும், நக்கீரர் ஒரு எழுகூற்றிருக்கையும் பாடியுள்ளதாகக் குறிப்புண்டு.[37]

## குறிப்பெண் விளக்கம்


1. ஜி.டி. கோபாலகிருஷ்ணநாயுடு, 'திவ்யப்பிரபந்தமும், தேவாரமும்' ஸப்தகிரி (ஜனவரி, 1980).
2. Bhagavatha Purana, Book XI—Chap V.
3. கே கே. பிள்ளை, தென்னிந்திய வரலாறு (முதற்பகுதி), ப. 167.
4. கோவிந்தசாமி, இலக்கியத் தோற்றம், (சென்னை, 1960) ப. 160.
5. மா. இராசமாணிக்கம்பிள்ளை, பல்லவர் வரலாறு, மறுபதிப்பு, (சென்னை, 1964) ப. 17.
6. நாராயணவேலுப்பிள்ளை, ஆழ்வார்கள் வைபவம், ப. 104—105.
7. க. தேவர், 'திவ்வியபிரபந்த ஆய்வு வளர்ச்சி ஒரு பார்வை', பதினான்காவது கருத்தரங்க ஆய்வுக் கோவை—தொகுதி 1, ப 342.
8. மேற்படி ப. 342.
9. இராச அரசு, தமிழ்இசைக்கட்டுரைகள், கலையக வெளியீடு—1, ப 75
10. ஏ. சுதாகர், ஆழ்வார்கள்—அன்னமாச்சாரியர் பாடல் களில் கண்ணன்பிள்ளைத் திருவிளையாடல்கள்—ஓர் ஒப்பாய்வு, 1983, ப. 36.
11. சாமி. சிதம்பரன், ஆழ்வார்கள் அருள்மொழி, 1960, ப. 85.
12. பி.பி. அண்ணங்கராசாரியர், ஆழ்வார்கள் வைபவம், (காஞ்சிபுரம், 1956) ப. 72.

13. நாராயண வேலுப்பிள்ளை, ஆழ்வார்கள் வைபவம், ப. 100.

14. வை.மு. சடகோபராமாநுஜாசாரியர், வை.மு. கோபால கிருஷ்ணமாசாரியர், ஆழ்வார்கள் சரித்திரம், மூன்றாம் பதிப்பு. (சென்னை, 1966) ப. 57.

15. மேற்படி ப. 62.

16. நாராயணவேலுப்பிள்ளை, ஆழ்வார்கள் வைபவம், ப. 100.

17. பி ஸ்ரீ., காதலால் கதி பெற்றவர், முதற்பதிப்பு, (சென்னை, 1958), ப. 26.

18. பி.ஸ்ரீ., காதலால் கதி பெற்றவர், ப. 41.

19. மேற்படி ப. 35.

20. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், முதற்பதிப்பு, (சென்னை, 1969) ப. 108.

21. பெரி. திரு. 1-9.10, 4.2.10.

22. நெடுந்தாண்டகம், திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை, ப. 2.

23. மேற்படி ப. 3.

24. மேற்படி ப. 3.

25. மேற்படி ப 3.

26. மேற்படி ப. 3—4

27 யாப்பருங்கலவிருத்தி, இரண்டாம் சூத்திர விளக்க வுரை.

28. நெடுந்தாண்டகம், திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை, ப. 2.

29. வீரராகவாசார்யன் ப்ரபந்தரக்ஷை, விசிஷ்டாத்வைத ப்ரசாரிணி சபைமலர்—33, தி.நகர், 1979, ப. 1.

30. இலக்கண விளக்கப்பாட்டியல் 856.

31. பி. பி. அண்ணங்கராசாரியர், இயற்பா ஆயிரத்தில் மூன்றாவது ஸம்புடம், மூன்றாம்பதிப்பு, (காஞ்சிபுரம், 1957) ப. 56.

32. எஸ். ராஜம் (பதி), ஸ்ரீ திவ்யப்பிரபந்தம், இயற்பா, சென்னை, 1956), ப. 1

33. பி. பி. அண்ணங்கராசாரியர், இயற்பா ஆயிரத்தில் மூன்றாவது ஸம்புடம், ப. 23.

34. வ. சு. செங்கல்வராயபிள்ளை, முருகவேள் பன்னிரு திருமுறை, திருப்புகழ் தொகுதி—5 பகுதி—1, ப 683.

35. பி. பி. அண்ணங்கராசாரியர், இயற்பா ஆயிரத்தில் மூன்றாவது ஸம்புடம், மூன்றாம் பதிப்பு, கிரந்தமாலா ஆபிஸ், காஞ்சிபுரம், 1957, ப. 2—3.

36. மேற்படி ப. 7.

37. மேற்படி ப. 7.

# இயல்—2

# திருமங்கை ஆழ்வார் பாசுரங்களில் பக்தி

## 2.0.

திருமங்கை ஆழ்வாரின் வாழ்வையும். வரலாற்றையும் முதல் இயல் ஆய, அவ்வாழ்வாரின் பாசுரங்களில் பக்திச்சுவை சொட்டும் பாங்கினை பக்தி—பக்திவகைகளின் விளக்கத்துடன் இவ்வியல் ஆய்ந்து செல்கிறது.

## 2-1 பக்தி விளக்கம்

மனிதன் பிறக்கின்றான்; வளர்கின்றான்; வாழ்கின்றான்; தேய்கின்றான்; மடிகின்றான் நன்மையும், தீமையும் நாடி குடியிருக்கும் இடமாய் விளங்குகின்றது அவன் மனது. பல நேரங்களில் மிருகமாய் வாழ்கின்றான்; சில நேரங்களில் தெய்வமாய் மிளிர்கின்றான். அத்தகைய மனிதன் புவியில் வாழ்வாங்கு வாழ்ந்தால் வானுறையும் தெய்வத்தில் வைக்கப்படுகிறான்; தெய்வமாயும் மதிக்கப் பெறுகிறான். இத்தகைய மனிதன் தானே சமைத்துக் கொண்ட சமயத்தால் அச்சமயங்கள் உருவாக்கிக் கொண்ட தெய்வங்களால்—அத் தெய்வத்திடம் மேற்கொண்ட ஈடுபாட்டால்—அன்பால் தனது மிருக இயல்பினின்று மாறி மனிதனாக—வேண்டுவார்க்கு வேண்டியது அளிக்கும் தெய்வமாக—தேவனாக உயர்கின்றான். இவ்வாறு மனிதனையும், தெய்வத்தையும் இணைக்கும் பாலமாய், மனிதனது மனத்தில் எழும் இறை சம்பந்தப்பட்ட ஒருணர்வாய் விளங்குவது 'பக்தி' என்று வழங்கப்பெறுகின்றது. கண்களால் காண முடியாதபடி—செவிகளால் கேட்டறியாதபடி—வெறும் மனத்தாலேயே உணரப்படும் நுண்ணிய—இறைமீது கொண்ட

பேரன்பு உணர்வு இது; பக்தனது உள்ளத்தில் இடையறாத என்னை ஒழுக்குப் போன்று சுரக்கும் அன்பு உணர்வு இது. இறைவனது பெருமையையும் இயல்பையும் அறிந்தபின் எழும் பெருங்காதல் உணர்வு இது. மனிதனது மனத்தில் நான் என்கிற ஆணவம் ஒழியும்போது இப்பக்தி முழுமை பெறுகிறது எனில் அது மிகையாகாது. "நெஞ்சக்கனிவோ அல்லது வெறும் உணர்ச்சியோ பக்தி ஆகிவிடுவதில்லை. வினைகள் விட்டு நீங்குவதற்கு வேண்டிய சிவத்தொண்டும், மலத்தைச் சுட்டு எரிக்கவல்ல சிவஞானமும் இரண்டிறக்கைகளாகக் கொண்டு ஆன்மாவைச் சிவனை நோக்கி மேலேற்றுவதே பக்தி என்பர் ப. அருணாசலம் அவர்கள்.[1]

## 2-2-0 பக்தி வகைகள்

இப்பக்தி அடியவர்களின் மனத்தின் திறத்திற்கேற்ப பல்வேறு நிலை கொள்கிறது. வைணவர் கூறும் ஐந்துவித பக்தி வகைகள் நாரதர் கூறும் பதினோருவித பக்தி வகைகள், பாகவதம் கூறும் எண்வகை பக்திநெறிகள், பகவத்கீதை குறிப்பிடும் நான்குவித பக்திகள், தாமஸ, ராஜஸ, சாத்விக பக்திவகைகள், வைதிபக்தி, ராகபக்தி என்னும் இருவகைப்பட்ட பக்திகள் என பக்தி பல்வேறு நிலைகளில் காட்சி கொள்கிறது.

## 2-2-1. வைணவர்களும் ஐந்துவித பக்திவகைகள்:

வைணவர்கள் ஐவகைப்பட்ட பக்திநிலைகளில் மாலிடம் அன்பு செலுத்துவர். அவை 1. தாசபக்தி (தாஸ்யாசக்திபக்தி) 2. தோழ பக்தி (ஸக்யாபக்தி சக்தி) 3. தாய்மைபக்தி (வாத்ஸல்யாசக்திபக்தி) 4. தந்தைபக்தி (சாந்தபக்தி) 5. நாயகிபக்தி (மதுரபக்தி).

### தாசபக்தி (தாஸ்யசலக்திபக்தி)

இறைவனுக்கு அடிமையாய் தனைக் கருதி இருக்கும் நிலை,

**தோழபக்தி** (ஸக்யாசக்திபக்தி)

இறைவனைத் தோழனாய்க் கருதி பக்தி செலுத்தும் நிலை.

**தாய்மைபக்தி** (வாத்ஸல்யாசக்திபக்தி)

இறைவனுக்குத் தனை தாயாய் கருதி அன்பு செய்யும் உயர்ந்ததொரு நிலை.

**தந்தைபக்தி** (சான்று—ரிஷிகள்) (சாந்தபக்தி)

உயிர்க்கு என்றும் தந்தையாகும் பகவான் மீதுள்ள பிரேமையினால் உலகப் பொருள்களின் மீதுள்ள ஆசைகளை அடக்கி மனதை எப்போதும் சலனமற்ற அமைதியான நிலையில் வைத்துக்கொண்டு பகவானையே தியானித்து இறையருள் பெறுதல் சாந்தபக்தியாகும்.

**மதுரபக்தி**

பகவானைத் தன் நாயகனாகக் கருதியிருக்கும் நிலை.

## 2-2-2 நாரதர் கூறும் பதினோருவிதமான பக்திவகைகள்

நாரத பக்திச்சூத்திரம் பதினோருவிதமான பக்திவகைகளைக் குறிப்பிடுகின்றது.

**குணமகாத்மியா சக்திபக்தி**

இறைவனுடைய திருக்கல்யாண குணங்களில் ஈடுபடுதல். சான்றாக நாரதரைக் கூறலாம்.

**ரூபாசக்திபக்தி**

எம்பெருமானுடைய திவ்வியமங்கள விக்கிரக ஈடுபாடு. சான்று—பிருந்தாவனத்துப் பெண்கள்.

**ஸ்மரணாசக்திபக்தி**

பகவத்ஸ்மரணத்தில் ஈடுபடுதல். சான்று—பிரகலாதன்.

**பூஜாசக்திபக்தி**

பகவத்பூசையில் ஈடுபாடு காட்டாக அம்பரீடனைக் கூறலாம்.

**தாஸ்யாசக்திபக்தி**

இறைவனுக்கு அடிமையாய் இருக்கும் நிலை. சான்று—அனுமன்.

**வாத்ஸல்யாசக்திபக்தி**

அவனுக்குத் தாயாய் இருக்கும் நிலை. சான்று—தேவகி, கௌசல்யை.

**சக்யாசக்திபக்தி**

இறைவனைத் தோழனாகக் கருதி பக்தி செய்வதிது. சான்று—அருச்சுனன், சுந்தரர்.

**காந்தாசக்திபக்தி**

தம்மைப் பெண்ணாகவும் அதாவது தலைவியாகவும், இறைவனைத் தலைவனாகவும் கருதி பக்தி செய்தல் காந்தாசக்திபக்தி எனப்படுகிறது. சான்று—நம்மாழ்வார் முதலியோர்.

**ஆத்மநிவேதனா சக்திபக்தி:**

இறைவனுக்கே தன்னை முழுமையாக அர்ப்பணித்து விடும் நிலையிது. சான்று—விபீடணன்.

**தன்மயதாசக்திபக்தி**

தன்மயனாக—பகவான்மயனாகப் பித்தனைப் போலிருக்கும் நிலை சான்று—சனத்குமாரர், யாக்ஞவல்கியர் முதலானோர்.

**பரமவிரஹாசக்திபக்தி:**

பகவானை விட்டுப் பிரிந்திருக்கும் வேதனையின் நிலை. சான்று—கோபியர், இராதை

## 2-2-3 பாகவதம் கூறும் எண்வகை பக்தி நெறிகள்

எண்வகைப்பட்ட பக்திநெறிகளைப் பாகவதம் கூறுகிறது [3]

**அவை வருமாறு :**

1. பக்தர்களிடம் அன்பு செலுத்துதல்
2. பூசைநெறிகளை ஏற்றுக்கொள்ளல்
3. கதாகாலட்சேபங்களைக் கேட்பதில் நாட்டம்
4. குரல், பார்வை முதலானவற்றின் வெளியீடு—குரல் தழுதழுத்தல், ஆனந்த கண்ணீர் பெருகுதல் முதலியன.
5. தானே பூசைசெய்தல்
6. செருக்கற்றிருத்தல்
7. சதா இறைவனை நினைத்துக்கொண்டே இருத்தல்
8. கைம்மாறு கருதா வழிபாடு

## 2-2-4 பகவத்கீதை குறிப்பிடும் நான்குவித பக்திகள்

பகவத்கீதை குறிப்பிடும் நான்குவித பக்திகளாவன : ஆர்த்தித்துவம், ஜிஞ்ஞாசத்துவம், அர்த்தார்த்தித்துவம், ஞானத்துவம்.[4]

### ஆர்த்தித்துவம்

தனக்கு துன்பம் வந்தபோது அதனை நீக்கவேண்டி பக்தி செய்வது. இத்தகையோர் ஆர்த்தர் என வழங்கப்படுவர். சான்று—திரௌபதையின் மானம் காத்த நிகழ்ச்சி.

### ஜிஞ்ஞாசத்துவம்

மோட்சத்தில் இச்சையுற்று, அது பெற பக்திசெய்யும் நிலைஇது. சான்று—உத்தவர்.

### அர்த்தார்த்தித்துவம்

செல்வம் பெற வேண்டி பக்திசெய்வது இந்நிலையாம்.

### ஞானத்துவம்

மெய்ஞ்ஞானம் பெற்று யாதொன்றையும் வேண்டாது, உள்ளத்தில் இயல்பாகவே எழும் பரிவினால் பக்தி செய்வது ஞானத்துவநிலையாம். சான்று—பிரகலாதர்.

### 2-2-5 தாமஸ, ராஜஸ, சாத்வீக பக்திகள்

பக்தி அது செய்யப்படும் நோக்கங்களின் அடிப்படையில் வகை பிரிக்கப்படுகிறது.

இறைவனிடம் பக்தி செலுத்தி, அருள்பெற்று மற்றவர் தமை அழிக்க, குழப்பம் ஏற்படுத்த அதைப் பயன்படுத்துவது தாமஸபக்தியாகும். சான்றாக இராவணனைக் கூறலாம்.

தனக்கு நன்மை ஏற்பட பக்திசெய்வது ராஜஸ பக்தியாகும்.

எப் பலனையும் எதிர்பாராது, பிறப்பிலிருந்து விடுதலை அடைய செய்யும் பக்தி சாத்வீகபக்திநிலையாம்.[5]

## 2-2-6 வைதிபக்தி, ராகபக்தி

வைதிபக்தி, ராகபக்தி—எக்காரணம் கொண்டும் சுயநல மில்லாது அவனுக்காக அவனிடம் பக்தி செலுத்தும் நிலைகள் இவை.

"பக்தி நூல்களில் கூறியுள்ள விதிகளைப் பின்பற்றுவதினால் பகவான்மீது அன்பு உண்டாக வழி ஏற்படுகிறது. மனதிலுள்ள மாசு (மலம்) சற்றே அவ்விதக் கிரியைகளினால் குறைந்துவருகிறது. அக் காரணத்தால் பிரீதியும் வெளித் தோன்ற ஆரம்பிக்கிறது. இவ்விதிகளை ஒழுங்காக நாடோறும் பின்பற்றி வருபவனிடத்து உண்டாகும் பக்தி வைதிபகதி அல்லது ஆரம்பபக்தி எனப்படும். அபரபக்தி என்பதும் இதுவே.[6]

இம்முறைப்படி, இறைவன்மீது அன்பு செலுத்தி வருவதனால், நாளடைவில் "அவனைக் காணவேண்டும்" என்ற ஆசை மனதில் எழுகிறது. அவனைக் காணாத வாழ்வு கசந்து, வெறுப்படையச் செய்கிறது. "உணவு இல்லாது பசியால் மக்கள் துடிப்பதுபோலவும், பாலைவனத்தில் நடந்து செல்வோர் தாகத்தால் தவிப்பது போலவும், நீரைப் பிரிந்த மீன் தத்தளிப்பது போலவும் இவர்கள் பகவானை அடைவதற்காகப் பரிதவிப்பார்கள். இத்தகைய நிலை ராகபக்தியாகும்.[7]

## 2-3-0 திருமங்கையாழ்வார் பாசுரங்களில் பக்தி

பக்திவகைகளுள் நாரதபக்திசூத்திரம் குறிப்பிடும் பதினோருவித பக்திவகைகளும் ஆழ்வார் திருமங்கையின் பாசுரங்களில் சிறப்பாக இடம் பெறுவதை ஈண்டு விளங்கக் காணலாம்.

## 2-3-1-0 தாஸ்யாசக்திபக்தி

ஈண்டு தாஸ்யாசக்திபக்தி விளக்கம், ஆழ்வார் திருமங்கை பாசுரங்களில் இப்பக்தி அமையும் பாங்கு ஆகியன விளக்கப் பெறுகின்றன.

## 2 3-1-1 விளக்கம்

வைணவசமயமரபு குறிக்கும் பக்திவகைகளுள் தாஸ்யா சக்திபக்தி (தொண்டன்பு) குறிப்பிடத்தக்கது ஆண்டவ னிடத்துத் தம்மை அடிமையாகக் கொண்டு, அவனுக்கு எப்போதும் அடிமையாக இருந்துகொண்டு செய்வது தாஸ்யா சக்திபக்தியாகும்.

## 2-3-1-2 திருமங்கை பாசுரங்களில் தாஸ்யாசக்திபக்தி

திருமங்கையாழ்வார் மாலை பலநிலைகளில் பலவாறு முழுமையாய் பல்வேறுபட்ட பக்திநிலைகளில் மனங்குளிர அனுபவித்து ஆனந்தப்படுகிறார். அனைத்துமாய், அனைத்தின் உட்பொருளாய் இருக்கும் முதற்பொருளாம் பெருமாளுக்கு அடிமையாய் இருப்பதில் ஆனந்தப்படுகிறார்; அவனுக்கே அடிமையாகி அவன் சரணாகதியை அடைவதில் களிப்புறுகிறார்; அவனது பக்தர்களையும் அவனாகவே எண்ணி அவர்களுக்கும் தான் அடிமையே என்று சொல்லி மகிழ்கிறார்: அவனுக்கே அடிமையான தனது தாஸ்யாசக்தி பக்தி நிலையினைக் காட்டிக்கொள்கிறார்.

திருமால் அண்டமாயிருக்கிறான்; அண்டத்தை ஆட்டுபவ னாய் இருக்கிறான்; அண்டத்தை ஆள்பவனாயிருக்கிறான்; அண்டத்திற்கு அருள் செய்பவனாயிருக்கிறான்; வானவர் களின் ஆவியாயிருக்கிறான். அதனால் அமரர் நாயகனாய் இருக்கிறான்; ஆயர் நாயகனாயிருக்கிறான். இத்தகைய சிறப்புக்களுடையவனாய், முதற்பொருளாய் வீற்றிருக்கும் எம்பெருமானிடம் தான் அடிமையாய் இருப்பதையே பாக்கிய மாய் கருதுகிறது ஆழ்வார் மனம். அப் பாக்கியம் பெற்றதற்கு ஆழ்வார் திருமங்கை உளங்குளிர்ந்து, மனம் மகிழ்ந்து நினைந்துருகிப் பாடி மகிழ்கிறார்.

**"வானவர் தங்கள் சிந்தை போல, என்**
**நெஞ்சமே! இனிதுஉ வந்து மாதவ**
**மானவர் தங்கள் சிந்தை யமர்ந்துறை கின்ற எந்தை**

கானவர்இடு காரகிற்புகை
யோங்கு வேங்கடம் மேவி மாண்குறள்
ஆன அந்தணற்கின்று அடிமைத்தொழில் பூண்டாயே

"அறவன் நாயகற் கின்றி அடிமைத்தொழில் பூண்டாயே"

"அண்டம் ஆண்டிருப்பாற்கு அடிமைத்தொழில் பூண்டாயே"

"ஆவி யாயிருப்பாற்கு அடிமைத்தொழில் பூண்டாயே"

"அங்கண் நாயகற் கின்று அடிமைத்தொழில் பூண்டாயே"

"அமர நாயகற் கின்று அடிமைத்தொழில் பூண்டாயே"

"அருக்கன் மேவிநிற் பாற்கு அடிமைத்தொழில் பூண்டாயே"

"ஆயர் நாயகற் கின்று அடிமைத்தொழில் பூண்டாயே"

"ஆடு கூத்தனுக் கின்று அடிமைத்தொழில் பூண்டாயே"[5]

திருமங்கையாழ்வார் விஷ்ணுவின் அடிமையாகி அவர் சரணாகதியை பெற விழைகிறார். அதனால் தனக்கு வரும் இடையூறுகளை நீக்க வேண்டுகிறார்.

இலங்கைக்கு இறைவனாய் விளங்கிய இராவணனது திண்ணிய மேனியை துளைத்து அவனது உயிரைப்போக்கியது உனது கை திருவில்லும்; திருவம்பும். மன்னோர் தொழும் படிக்கு இராமனாய் அவதரித்த நீ இன்று விண்ணோர் தொழும்படிக்கு திருவேங்கடமலையில் திருவேங்கடவனாய் வந்து காட்சித் தருகின்றாய்; என்னுடைய சுற்றமாய்— உறவாய் விளங்கும் தேவே! உனது அடியேன் நான்; எனது இடரை நீ களைய வேண்டும்.

அரக்கர் குலங்கெடும்படி கொடிப்புள் திரித்தாய்! திருவேங்கடமலையில் துளபம் சூடிய கூந்தலழகோடு நீ விளங்குகிறாய்! உனது அடிமையாய் உனக்கே நான் ஆட்பட்டு,

சரணாகதியுற்றேன்; இவ்வடிமைக்கு நீ அவசியம் அருளத் தான் வேண்டும்.

அனைத்தையும் வாரியுண்டு ஒன்றும் அறியாத பிள்ளையாய் ஆலிலையில் கிடந்தவன்நீ! உறிமேல் நறுநெய் களவாடி உண்ட கண்ணன்நீ! குறளாய் திருவிக்ரமனாய், அரியாய், பல்வேறு விபவதார லீலையன்நீ!

பாழும் இந்த மானிடப் பிறவியை நீக்கி, உன்னருளாலே உன் தாள் வணங்கச் செய்யும் — அருளும் முழுமுதற்பொருள்நீ. சேயனாய், அணியனாய் என் சிந்தையுள் நின்ற மாயனாய் நின்றவன்நீ. வந்து, என்மனம் புகுந்து, மன்னி நின்றவன்நீ. இத்தகைய நீ உன்னை அல்லது மற்றறியாத பேதை எனக்கு அருளத்தான் வேண்டும் இனி யான் உன்னை என்றும் விடேன்; விடவே மாட்டேன் எனப் பலவாறு தனது அடிமைத் திறத்தையும், அவனது மேன்மை நிலையையும் காட்டி தனது தாசபக்தி மிளிரும் வண்ணம் பலவாறு திருவேங்கடவனை வேண்டி சரணுறுகிறார்; பக்திப்பரவசமுறுகிறார் ஆழ்வார்.

**"அண்ணா அடியேன் இடரைக் களையாயே"**

**"அலங்கல் துளப முடியாய்! அருளாயே"**

**"ஆரா அமுதே! அடியேற் கருளாயே"**

**"அண்டா! அடியே னுக்கருள் புரியாயே"**

**"ஆயன் அடியல்லது மற்றறியேனே"**

**"எந்தாய்! இனியா னுன்னையென்றும்விடேனே"**

திருமாலின் அருளால் — அன்பால் — தான் அவனது பக்தனாய் இருப்பதையும், திருமாலின் பக்தனாய் மட்டுமின்றி பரமனின் அடிமையாய் அமையப்பெற்ற வாய்ப்பையும் எண்ணி மகிழ்கிறார்.

அம்மட்டோடு நில்லாது திருமாலின் அன்புக்கு ஆளாகிய மால்பக்தர்களையும் திருமால் நிலையில் ஆழ்வார் மனம்

ஏற்றுக்கொள்கிறது. ஆகவே அவர்களின் அடிமையாயும் தானிருக்க விழைகிறார். ஆக, திருமங்கையாழ்வார் திருமாலின் தாசனாயும், திருமால் பக்தர்களின் தாசனாயும் இருநிலைகளில் தனது தாசபக்தியை தன் பாசுரங்களில் காட்டிச் செல்லுவதைக் காணமுடிகிறது.

அவனுக்கு மட்டுமின்றி அவனிடத்து பக்தி செலுத்தும் அடியார்க்கும் தான் அடிமையே; அவர்கள் தனை ஆள்பவரே என தனது தாஸ்யாசக்தி பக்தியின்ன கீழ்வருமாறு புலப்படுத்துகின்றார்.

''கார்வண்ண முதுமுந்நீர்க் கடல்மல்லைத் தலசயனம்
ஆர்எண்ணும் நெஞ்சுடையார் அவரெம்மை யாள்வாரே"

''கானத்தின் கடல்மல்லைத் தலசயனத் துறைகின்ற
ஞானத்தின் ஒளியுருவை நினைவார்என் நாயகரே"

''கண்டாரை கடல்மல்லைத் தலசயனத் துறைவாரை
கொண்டாடும் நெஞ்சுடையார் அவரெங்கள்குலதெய்வமே"

''கச்சிக் கிடந்தவன்ஊர் கடல்மல்லைத் தலசயனம்
நச்சித் தொழுவாரை நச்சென்றன் நன்னெஞ்சே?"

"கலங்கள்இயங் கும்மல்லைக் கடல்மல்லைத் தலசயனம்
வலங்கொள்மனத் தார்அவரை வலங்கொள், என்
மட நெஞ்சே!"

''கஞ்சைக் கடந்தவன்ஊர் கடல்மல்லைத் தலசயனம்
நெஞ்சில் தொழுவாரைத் தொழுவாய்என் தூயநெஞ்சே!"

"கழுநீர் கடிகமழும் கடல்மல்லைத் தலபயனம்
தொழுநீர் மனத்தவரைத் தொழுவாயென் தூய்நெஞ்சே!''

"கணங்கள் இயங் கும்மல்லைக் கடல்மல்லைத் தலசயனம்
வணங்குமனத் தார்அவரை வணங்கென்றன்
மடநெஞ்சே!"[10]

## 2-3-2 வாத்ஸல்யாசக்திபக்தி (தாய் அன்பு)

தானே அனைத்துமாய், அனைத்தின் உட்பொருளாய் விளங்கும் பரம்பொருளை—அனைத்துயிர்கட்கும் தாயாய், தந்தையாய், உறவாய், அனைத்துமாய் இருந்து கல்லுக்குள் இருக்கும் தேரைக்கும் கருணைசெய்யும் முதற்பொருளை— தனது மிக்க பக்தி உணர்வினால்—பக்தியால் விளைந்த நெஞ்சக்கனிவால்—தன்நிலை மறந்து, அவன் மேன்மையை மறந்து, அவனைத் தன் பிள்ளையாய், குழந்தையாக தன்னை அவனைப் பேணிப் பாதுகாக்கும் அன்னையாய் எண்ணி, தனக்குள் ஒருவித பக்திபரவசநிலை வட்டத்தை ஏற்படுத்திக் கொண்டு வாழ்வது இந்நிலைப் பக்தி எனில் அது மிகை யாகாது.

அவனுக்குத் தான் அடிமைநிலையினனாய் இருந்து பக்தி செய்வது தாஸ்யாசக்திபக்திநிலை எனில், தன்னைத் தாயாக வும் இறைவனைத் தனது குழந்தையாகவும் கருதிப் பக்தி செய்யும்நிலை வாத்ஸல்யாசக்திபக்தி நிலையாகும்.

ஆழ்வார் தாய் யசோதையாக மாறி கண்ணனை அம்மமுண்ண அழைத்தல், சப்பாணிகொட்டுமாறு கூறல், கண்ணனது செய்தியைக் குறித்து பரிந்தலும், ஆய்ச்சியர் முறையிடுதலும் என்னும் மூன்று நிலைகளில் தனது வாத்ஸல்யாசக்திபக்தி புலப்படுமாறு பாடிப் பக்திபரவச முறுகிறார்.[11]

தாழ்ந்த அழகிய குழல் மலர்சூடப் பெற்றுளது; அக்குழலுக்குரியவன் தன் அண்ணனோடும், "தன்னேராயிரம் பிள்ளைகளோடும்" தளிர்நடையிட்டு விளையாடிக்கொண்டு இருக்கிறான். விளையாடி களைத்துவிட்டது அக்குழந்தை; அதற்கு பசி வயிற்றைக் கிள்ளுகிறது. தன் பசிதணிக்கும் பால் சுரங்கம் தன் தாய் என்பது தெரிந்த அம் மழலைச் செல்வம் அனைவரையும் விட்டுவிட்டு தனியொருவனாய் தன் தாயைத்தேடி வருகின்றது. தனது மிகுந்த பசியினால்

பொறுமையின்றி, தாயின் முலைத்தடத்தைத் தானே வாங்கித் தன் வாயில் வைத்துக்கொண்டு பாலருந்துகிறது. இவ்வாறு தனியே தானே வந்து தன் முலைத்தடந்தன்னை வாங்கித் தன்வாயில் மடுத்துப் பாலருந்த வேண்டும்; அவ்வின்ப உணர்வினைத் தான் அனுபவிக்கப்பெற வேண்டுமென விரும்புகிறாள் ஆழ்வாராகிய தாய் யசோதை.

"சந்த மலர்க்குழல் தாழத்
தானுகந் தோடித் தனியே
வந்துஎன் முலைத்தடந் தன்னை
வாங்கிநின் வாயில் மடுத்து
நந்தன் பெறப்பெற்ற நம்பீ!
நானுகந் துண்ணும் அமுதே!
எந்தை பெருமானே! உண்ணாய்;
என்னம்மம் சேமமுண் ணாயே"[12]

என்மகன் எங்கு சென்றுவிட்டான்? பாலருந்த நான் கூவி அழைத்தும் இன்னும் அவனைக் காணவில்லையே? இந்த ஆயர்பிள்ளைகளோடு இவன் எங்கிருந்து கொண்டு, என்ன விளையாடிக் கொண்டிருக்கின்றானோ.[13] என அவன் வந்து இன்னமும் பாலருந்தவில்லையே என வருந்துகிறாள் யசோதை.

சிவந்த நெடிய விழியழகன்; கமலவாயழகன்; முகிலை யொக்கும் கருமேனி அழகனானவன்.

"வங்க மறிகடல் வண்ணா!
மாமுகி லேயொக்கும் நம்பீ!
செங்கண் நெடிய திருவே!
செங்கம லம்புரை வாயா!"[14]

என தனது பிள்ளையின் அழகிற்கு உள்ளம் குளிர்ந்து பெருமை பேசும் யசோதை, தனது மகனை நோக்கி,

மகனே! தெருவில் விளையாடியது போதும்; வந்து மடிமீது அமர்ந்து குடங்காலிருந்து பாலுண்ண வாராய்.[15]

கண்ணா! பிள்ளைகள் செய்வன செய்யாய்! தூங்குவது போல் நடிக்காதே! பாலமுதுண்ண வா.[16]

மதக்களிறு போன்றவனே! அந்த வானத்திலிருந்து வீசுகிறது பார் இளம்பிறை; அதை வாங்கி நின்கையில் தருவேன்; அம்மம் உண்ண ஓடி வா.[17]

ஆநிரை எல்லாம் வந்து வீடுசேரும் பொழுதாயிற்று; வானிடைத் தெய்வங்கள் உலவும் நேரமிது. இன்னுமேன் அங்கு நிற்கிறாய்; வா; வந்திடடா.[18]

கண்ணா! உன்னை அழிக்க வந்த பூதகியின் முலையில் வாய்வைத்து 'அவளை அழிக்க என்னுடைய மகனல்லவா நீ; பின்னையின் மணாளன் அல்லவா நீ மகனே' கண்ணா! வந்து பாலருந்தடா[19] என தனது மகனைப் பலவாறு அம்மமுண்ண அழைக்கின்றாள் தாய் யசோதை. ஆழ்வார் திருமங்கையார் இங்கு தாய் யசோதையாகவே மாறி அவனை மழலையாக்கி வாத்ஸல்யாசக்தி பக்தியில் ஆழ்ந்துவிடுகிறார்.

இவ்வாறு தன் மகனைப் பலவாறு அம் மமுண்ண அழைத்த ஆழ்வாராகிய தாய் யசோதை தன் மகனிடம் சப்பாணி கொட்டுமாறு செப்புகிறாள்.

கடலில் நீலநிறத்தை ஒத்தது அம்மேனி; அரவிந்தம் போன்று சிவந்தது அத் திருவாய் ஆயர் அழகன்[20] என தனது மகனின் திவ்ய அழகில் உள்ளமார்க்கும் ஆழ்வாராகிய தாய் யசோதை, அவனது சௌலப்ய, ஸ்வாமித்துவ திருக்கல்யாண திருக்குணங்களைக் காட்டும் அவனது பிள்ளைமை லீலைகளைப் பலவாறு சொல்லி தனது மழலையை 'கொட்டாய் சப்பாணி' என்கிறாள்.

கோகுல ஆய்ச்சியர்கள் தத்தம் இல்லங்களில் தாம் கடைந்த தயிர் நெய்யினை பானைகளில் வைத்து உறிகளில்

தொங்க விட்டுள்ளனர். கோகுலத்தின் செல்லப்பிள்ளை கண்ணன் திருட்டுப்பூனைபோல் தோழர்களோடு அவர்தம் வீடுகளுக்குச் சென்று வெண்ணெய், தயிர், நெய்ப்பானைகளை உரிகளிலிருந்து வாங்கி, பகிர்ந்து உண்ணுகின்றான்; பாவம்! அவனும் அவன் தோழரும் எண்ணாதபடிக்கு அவ்வில்லத்து ஆய்ச்சி வந்துவிடுகிறாள். கள்வர்களை கையும் களவுமாய் பிடித்து தாம்பினால் கட்டிப் போடுகிறாள்.[51] எவர்க்கும் எதற்கும் கட்டுப்படாதவன் பக்தி என்னும் பிடியுள் அகப்பட்ட பெருமையைாகிவிடும் இன்னொரு காட்சி இது.

இவ்வாறே கண்ணனது ஒருத்தி வயிற்றில் பிறந்து, ஒருத்திக்கு மகனானது, பூதகியை வதைத்தது, புள்ளினை வாய்பிளந்தது, பூங்குருந்தம் சாய்த்தது, சகடுதைத்தது[52] ஆகிய லீலைகளை எல்லாம் தன் உள்ளம் குளிரப் பலவாறு பொருமைபட பேசி,

"ஆய்ச்சியர் அப்பம் தருவர்"[53]
"நானவல் அப்பம் தருவன்"[54]

ஆகையால் நீ கொட்டவேணும் சப்பாணி எனத் தன் மகனை வேண்டுகிறாள் தாய் யசோதை. ஈண்டு திருமங்கை ஆழ்வாரின் வாத்ஸல்யாசக்திபக்தி நம்மை ஆழ்வாரை காணமுடியாது, யசோதையை காணுமாறு செய்கிறது எனில் அது மிகையாகாது.

கண்ணனது செய்தியைக் குறித்து யசோதை பணித்தலும் ஆய்ச்சியர் முறையிடுதலுமாகிய பெரிய திருமொழி பத்தாம் பத்து ஏழாம் திருமொழி பாசுரங்களில், ஆழ்வார் தான் ஆய்ச்சியரின் நிலையில் கண்ணனது தமது தொடர்பான லீலைகளை கூறியும், தாய் யசோதை நிலையில் அவனது ஸ்வாமித்துவம் போன்ற திருக்கல்யாண குணங்களைக் காட்டும் தன்னோடு தொடர்புடைய அவன் லீலைகளைக் கூறியும் முடிக்கிறார். ஆழ்வாரின் வாத்ஸல்யாசக்திபக்தி மனம் இப் பாசுரங்களில் கமழ்கிறது—கமழ்ந்து மணம் வீசுகிறது.

## 2-3-3-0 ரூபாசக்திபக்தி

ஈண்டு ரூபாசக்திபக்தி விளக்கம், எம்பெருமானின் ஐவகை நிலைகள் திருமங்கை பாசுரங்களில் ரூபாசக்திபக்தி ஆகியன விளக்கப்பெறுகின்றன.

## 2-3-3-1 விளக்கம்

திருமாலினது திவ்விய மங்கள விக்கிரகத்தில்—மேனி அழகில் ஈடுபடுதல் ரூபாசக்தி பக்தியாகும்.

## 2-3-3-2 எம்பெருமானின் ஐவகை நிலைகள்

எம்பெருமான் கொண்டுள்ள திருமேனிகள் ஐந்துவகைகளாகும் அவை பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை ஆகியன.

### பரம்

வைகுந்தத்தில் பரவாசுதேவனாய் எழுந்தருளி உள்ள வடிவம் பரமாகும். இவ்வடிவு நிலை என்றும் அழியாத தன்மையதாய், வளர்தல் குறைதல் மாறுபாடுகளின்றி ஒரே நிலையிலிருப்பதாம்.

### வியூகம்

வியூகம் - வாசுதேவன் - ஸங்கர்ஷணன் - ப்ரத்யும்நன் - அநிருத்தன் என்கிற திருநாமங்களால் வழங்கும் உருவங்கள் ஆகும். இந்த உருவங்களுக்கும் முதற்காரணம் பரவாசுதேவனாவன். இந்த நான்கினுள் முந்திய உருவினின்று பிந்திய உருவங்கள் தோன்றுகின்றன. அதாவது பரவாசுதேவனிடம் இருந்து வியூகவாசுதேவன், இவனிடமிருந்து ஸங்கர்ஷணன், இவனின்று ப்ரத்யும்நன், ப்ரத்யும்நனிடமிருந்து அநிருத்தன் என்ற முறையில் இந்நான்கு உருவங்களும் உண்டா

கின்றன. இத்திருமேனிகளின் நிறம் கிருதயுகத்தில் வெண்மையாய், திரேதாயுகத்தில் பொன்னிறமாய், துவாபரயுகத்தில் பசுமை நிறமாய், கலியுகத்தில் கருமையாய் யுகந்தோறும் மாறிவருவதாகும்.[85]

**விபவம்**

அவதாரம் எனப்படுவது இது. அவதாரம்—மேலிருந்து கீழிறங்கி வருதலாம்.

நல்லோரைக் காத்து, தர்மத்தை நிலைநாட்ட திருமால் கீழிறங்கி வருதல் அவதாரம் என்றழைக்கப்படும். இவ் அவதாரம் அவனது விருப்பத்தின்படி நிகழ்வதாம்.

**அந்தர்யாமி**

எப்பொருளிலும் உள்ளிருந்து கரந்து நிற்கும் நிலை இது. ஒவ்வொரு சீவனுடைய இதயத்தில் மிகச் சூட்சுமமானதொரு வடிவத்துடன் இறைவன் திகழ்வதை இந்நிலை காட்டுகிறது.

**அர்ச்சை**

அர்ச்சை என்பது பெருமாளை மனிதன் தன் ஊனக்கண்களால் காணும்படிக்குச் செம்பினாலோ, மரத்தினாலோ, கல்லினாலோ அமைக்கப்பட்டு திருக்கோயில்களில் எழுந்தருளி இருக்கும் திருமேனிகளாகும். திவ்யதேசங்களில் இறைவன் இந்நிலையில் எழுந்தருளி காட்சிதருகிறான் எனில் அது மிகையாகாது ஏரி, குளங்களில் உள்ள நீர் போன்று மானிடனின் பக்தி தாகவிடாயினை யாவரும் நன்கு கண்டு சேவித்து மகிழ்ந்து, தீர்த்துக் கொள்ளும்படி இருப்பது இவ்வர்ச்சைநிலை என்றால் அது தவறில்லை.

### 2-3-3-3 திருமங்கையாழ்வார் பாசுரங்களில் ரூபாசக்திபக்தி

தாய்மனம் குழந்தை நாளுக்கொரு வகையாய் அலங்காரம் செய்து அனுபவித்து ஆனந்தப்படுவதுபோல ஆழ்வாரும் மாலை—மாலின் திவ்ய சொருபத்தை

தெவிட்டாத வகையில் பல ரூபங்களில் கண்ணாரக்கண்டு அனுபவித்து மகிழ்கிறார்; நம்மையும் மகிழ்விக்கிறார்.

சிங்கவேள் குன்றில் மால் ஆளரியாய் இரணியனைப் பிளந்து உக்கிரமூர்த்தி நரசிம்மனாய் வீற்றிருக்கும் திவ்ய மங்கள விக்கிரகத்தில் ஆழ்ந்து ஈடுபட்டு கசிந்துருகிப் பாடுவதில் அவர்தம் ரூபாசக்திபக்தியினைக் காண முடிகிறது.

"அங்கண்ஞாலம் அஞ்ச அங்கோ ராளரியாய் அவுணன்
பொங்க ஆகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதன் இடம்"

"அலைத்த பேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய் அவுணன்
கொலக்கை யாளன் நெஞ்சிடந்த கூருகி ராளன் இடம்"

"ஏய்ந்த பேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய் அவுணன்
வாய்ந்த ஆகம் வள்ளுகிரால் வகிர்ந்த அம் மான்"

"மென்ற பேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய் அவுணன்
போன்ற ஆகம் வள்ளுகிரால் போழ்த்த புனிதன்"

"எரிந்த பைங்கண் இலங்குபேழ்வா யெயிற்றோடு
இதெவ்வுருஎன்று
இரிந்து வானோரர் கலங்கியோட இருந்தஅம் மான்"[16]

திருவேங்கடத்தில் நின்றவண்ணனாய் இருக்கும் திருவேங்கடனைத் தரிசித்த ஆழ்வார் அவனது திவ்யமங்கள உருவினில் பின்வருமாறு ஆழங்கால் படுகிறார்.

"பொங்கு போதியும் பிண்டியும் உடைப்
புத்தர் நோன்பியர் பள்ளி யுள்ளுறை
தங்கள் தேவரும் தாங்களு மேயாக என்நெஞ்சமென்பாய்!
எங்கும் வானவர் தான வர்நிறைந்
தேத்தும் வேங்கடம் மேவி நின்றருள்

அங்கண் நாயகற் கின்று அடிமைத் தொழில் பூண்டாயே"
மருட்கள் வண்டுகள் பாடும் வேங்கடம்
கோயில் கொண்டத னோடும் வானிடை
'அருக்கண் மேவிநிற் பார்க்கு அடிமைத் தொழில்
பூண்டாயே"[27]

திருவல்லிக்கேணியில் எழுந்தருளியுள்ள பார்த்தசாரதி கோல் கையில் கொண்டு பார்த்தனுக்குத் தேர்முன் நிற்கும் கோலத்தை அழகுபட வருணித்து அவ்வழகில் தான் மூழ்கி விடுகிறார்.[28]

திருக்கடன்மல்லையில் எம்பெருமான் தனது அரவிந்தம் போன்ற தனது சிவந்த விழிகளோடு[29] ஸ்ரீதேவி, பூதேவி யினரைத் தனது திருமார்வகத்தில் கொண்டு நாகத்தணை மேவி பள்ளிகொண்டுள்ள அழகை ஆழ்வார் பின்வருமாறு பாடி பரவசப்படுகிறார்.

''பார்வண்ண மடமங்கை பணிநன்மா மலர்க்கிழத்தி
நிர்வண்ண மார்வகத்தில் இருக்கையை"

''செல்வம் மல்குதென் திருக்குடந்தை
அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க
ஆடர வமளியில் அறிதுயில் அமர்ந்த
பரம''[30]

என்ற திருக்குடந்தையானது திவ்யமங்கள விக்கிரகத் திருவழகில் ஆழ்வார் ஆழங்கால் படுவதைக் காணலாம்.

சிறிய திருமடலில் ஆழ்வார் திருமங்கை ஆய்ச்சியர் நாயகியாகி அவன் குடக்கூத்தாட, தனை பாடுபடுத்திய அவனது திருமேனியைக் கண்டு களிக்கப் பெறுமளவும் அவன் குணங்கள் கொண்டாடி இருக்கும் திருத்தலங்கள் எங்கும் நுழைந்து, விரகம் தின்ற தனது வடிவைக் காட்டி

அவன் குணங்களை அழித்து வழியில்லா வழியிலேனும் அவனைப் பெற முயல்கிறாள். இவ்வாறு திருமங்கையார் — ஆழ்வார் நாயகியாகி - அவனது திவ்வியத் திருத்தலங்களைக் கண்டு தரிசித்து ஆங்கு எழுந்தருளியுள்ள கீழ்க்குறிப்பிட்டுள்ள அர்ச்சாவதார மூர்த்திகளின் திவ்வியமங்கள விக்கிரகத்தில் ஆழங்கால்படுகிறார்; தமது ரூபாசக்திபக்தி மிளிர பக்திப் பரவசத்தோடு பாசுரங்கள் பாடிக் களிக்கிறார்.

## ஆழ்வார் சென்று தரிசித்த திருத்தலங்கள் —திருத்தலமூர்த்திகள்

1. திருவேங்கடமலை திருவேங்கடவன்
2. திருக்கோவலூர் நாயகன்
3. காஞ்சியில் எழுந்தருளியுள்ள ஊரகத்தான்
4. அப்பக்குடத்தான்
5. திருவெள்ளறை திருவெள்ளறையான்
6. திருவெஃகாவினன்
7. திருவாலிபிரான்
8. திருத்தண்கால்நாயகன்
9. திருநறையூரான்
10. திருப்புலியூரான்
11. திருவரங்கன்
12. திருக்கண்ணமங்கையான்
13. திருவிண்ணகரான்
14. திருக்கண்ணபுரத்தான்
15. திருச்சேறையான்
16. தேரழுந்தூர் நாயகன்

17. திருக்குடந்தையான்
18. சோளசிம்மபுரத்தான்
19. திருக்கடன்மல்லையான்
20. திருவிடவெந்தையான்
21. திருநீர்மலையான்
22. திருமாலிருஞ்சோலையான்
23. திருமோதரன்
24. பத்ரிகாச்ரமத்தான்
25. வடதிசைமதுரையான்

மேலும் ஆழ்வார் திருமங்கையார் பெரிய திருமடலில்,

"பொன்னி மணிகொழிக்கும் 'பூங்குடந்தைப் போர்விடையை"

"விண்ணகருள் பொன்மலையை''

"தென்னவன் குறுங்குடியுள் செம்பவளக் குன்றினை
மன்னிய தண்சேறை வள்ளலை – மாமலர்மேல்
அன்னம் துயிலும் அணிநீர் வயலாலி
என்னுடைய இன்னமுதை எவ்வுள் பெருமலையை
கன்னி மதிள்சூழ் கணமங்கைக் கற்பகத்தை
மின்னை இருசுடரை வெள்ளறையுட் கல்லறைமேல்
பொன்னை மரகதத்தைப் புட்குழியெம் போரேற்றை"

"மின்னுது அரங்கத்தெம் மாமணியை

"வல்லவாழ்
பின்னை மணாளனை''

"பேரில் பிறப்பிலியை"

"இடவெந்தை ஈசனை"

"கடன்மல்லை மாயவனை"

"அழுந்தூர் எழும் சுட்டுரை"

"தென்னில்லைச் சித்திர கூடத்தென் செல்வனை"

"மின்னி மழைதவழும் வேங்கடத்தெம் வித்தகனை"

"மாலிருஞ் சோலை மணாளனை

"......திருமெய்யத்து
இன்னமுத வெள்ளத்தை"

"இந்தளூர் அந்தணனை"

"மன்னிய பாடகத்தெம் மைந்தனை"[31]

என பூங்குடந்தை, திருவிண்ணகர், திருக்குறுங்குடி, திருச்சேறை, திருஎவ்வுள், திருக்கண்ணமங்கை, திருவெள்ளறை, திருபுட்குழி, திருவரங்கம், திருவல்லவாழ், திருப்பேர், திருவிடவெந்தை, திருக்கடன்மல்லை, திருவழுந்தூர், தில்லைத் திருச்சித்திரக்கூடம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருமெய்யம், திருவிந்தளூர், திருப்பாடகம் ஆகிய திருத்தலங்களையும் ஆங்கு எழுந்தருளியுள்ள எம்பிரானது திருஉருவஅழகையும் கண்குளிரக் கண்டு வணங்கி பரவசப்படுகிறார். இத் திருத்தலங்களில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளை தமது பக்திப் பெருக்கால் பலவாறு அடைகளால்—பொருள்களால் பலவாறு அழைத்து உருகுகிறார். சிறந்த ரூபாசக்தி பக்தராய் மிளிர்கிறார்.

இவ்வாறே திருக்குறுந்தாண்டகத்திலும் திருவரங்கன், திருவேங்கடவன் திருக்குடந்தையானது திவ்யமங்கள சொரூபத்தில் தனைமறந்து ஈடுபாடு காட்டுகிறார் ஆழ்வார்.[32]

இவ்வாறு திருமங்கையாழ்வார் பாசுரங்களில் ரூபாசக்தி பக்தி சிறப்புற காணப்பெறுகிறது.

## 2-3-4 மதுரபக்தி

மனிதன் இயற்கையோடு இயைந்து வாழ்ந்து வருகிறான். அவ்வாறு வாழ்ந்த வாழ்க்கைநிலை இலக்கியமாய் வடிவு கொள்ளலாயிற்று. அவ்வடிவம் உணர்வோரால் இருகோணங்களில் நோக்கப்பட்டது. ஒன்று அகநோக்கு; மற்றொன்று புறநோக்கு, ஆகவே சிறப்பாகத் தமிழிலக்கியம் (சங்க இலக்கியம்) அகஇலக்கியமென்றும், புறஇலக்கியமென்றும் இரு பகுப்புக்களாய் அமையலாயிற்று. இப் பகுப்பிற்கு இலக்கணம் தோன்றலாயிற்று. அவ்விலக்கிய நூல் தொல்காப்பியமாகும்.

தொல்காப்பியத்தில் அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என நான்கு இயல்கள் வகுக்கப்பட்டு அகத்திணையின் இயல்பு தெரிவிக்கப்படுகிறது. அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, பரிபாடல், பத்துப்பாட்டு ஆகிய அகத்திணை நுவலும் சங்கப் பாடல்களும், காமத்துப்பால் கொண்ட திருக்குறளும் தமிழனின் அக வாழ்வை விளக்குவனவாயுள்ளன.

பழந்தமிழன் மேற்கொண்ட இவ்வகத்திணை கைக்கிளை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என ஏழாக பாகுபடுத்தபட்டு, ஐந்திணை, கைக்கிளை, பெருந்திணை என மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அகத்திணையின் பெரும்பிரிவாய் விளங்கும் ஐந்திணை, களவு, கற்பொழுக்கம் என இருபாற்படுகிறது. இக்களவெனும் பிரிவில் மடலேறுதல், வெறியாட்டு, அலர், அறத்தோடு நிற்றல், உடன்போக்கு, போன்ற செய்திகள் இடம்பெற காதலியைப் பெறாத நிலையில் காதலன் மடலேறிச் செல்லுதல் எனும்படிக்கு களவு கற்பாக—மடலேறுதல் பெருந்திணையில் இணைகிறது.

இவ்வகத்திணையில் காதல் உள்ளப்புணர்ச்சி, மன நிறைவு எனப்பொருள் தர, காமம் என்பது மெய் யுணர்ச்சியைக் குறிப்பதாய் விளங்குகிறது. உடல் இயைந்த உள்ள உறவு, உள்ளம் இயைந்த உடலுறவு அதாவது உயிர்

மெய்ப் புணர்ச்சி அகத்திணையின் உயிராய் அமைகின்றது. இந்தப் போக்கினை சங்க இலக்கியத்தில் பார்க்கின்றோம்.

சமுதாயத்தின் தேவைக்கேற்றவாறு இலக்கியங்கள் எழுதல் இயல்பு. தமிழிலக்கியத்திலும் சங்க இலக்கியத்திற்கு அடுத்து சங்கப்போக்கில் அகச்சுவையை அமைந்து பக்தி நிலையை வளர்க்கும் சூழல் ஏற்பட்டது. இவ்வாறு அமைந்த இலக்கியம் பக்தி இலக்கியமாகப் பெயர் பெறலாயிற்று. சங்க இலக்கியத்தில் இடம்கொண்ட தலைவன் தலைவி ஒழுக்கநிலை இங்கும் இடம்கொள்ளலாயிற்று. ஆயின் இங்கு இறைவன் நாயகனாகவும், பக்தனை பக்தனாகிய கவிஞனை நாயகியாகவும் கொண்டு இலக்கியம் இயங்குகிறது. இப்படி நாயக—நாயகி பாவத்தில் பக்தனும் இறைவனும் ஒன்றுசேரும் நிலையை ஏற்படுத்தும் பக்தி நிலை மதுரபக்தி எனப் பெயர்கொள்ளலாயிற்று.

இந்தியாவில் இந்துசமயங்களாகிய வைணவம், சைவம் முதலிய மதங்கள் தாழ, சமணம், பௌத்தம் போன்ற புறமதங்கள் செழிக்கலாயிற்று. இந்துசமயத்தை அழிவுப் பாதையினின்று காத்திட, அதனைச் செழுமையுற வளர்த்திட அன்றைய சைவ அடியார்கள், வைணவ ஆழ்வார்கள் பெரும் முயற்சி கொண்டனர். தமது சமயத்தைக் காப்பதைத் தன் கடமையாகக் கொண்ட அப்பெரியவர்கள் மதப்பிரச்சாரத்தில் ஈடுபட்டனர்: எல்லோரும் புரிந்து கடைபிடிக்கும்படிக்கு மதத்தை எளிதாக்கினர் விரும்பி ஏற்கும்படிக்கு பல்வேறான வழிவகைகளைச் கண்டனர். உடல் உபாதையைப் போக்க இனிப்புப்பூசிய மாத்திரைகள் தருவதுபோல், சீவாத்மாக்களின் பிறவிப் பிணியைப் போக்கிட பரமாத்மாவினைக் காட்டிட தமது சித்தத்தை அகத்தில் நுழைத்து சிற்றின்பம் மூலம் பேரின்பம் காட்ட முயன்றனர். அதன் விளைவாக அவர்கள் மேற்கொண்ட பக்திநிலை மதுரபக்தி என வழங்கலாயிற்று.

பகவானை நாயகனாகக் கருதும் அன்பு மதுர பக்தி யாகும். அதாவது சீவாத்மா தன்னை நாயகியாகவும், இறைவனை நாயகனாகவும் நினைத்து செய்யும் பக்தி யாகுமிது.

ஆழ்வார் திருமங்கையார் நாயகி நிலையில் தம்மை வைத்து ஆய்ச்சியாகி மாறி, கண்ணனோடு ஊடுவதாக அமைந்த பெரிய திருமொழி பத்தாம்பத்து எட்டாம் திருமொழிப் பாசுரங்களில் நிறைந்து வழிவதைக் காணலாம்.

கண்ணன் தான் ஆய்ச்சி ஒருத்திக்குச் சொன்னபடி அவளைச் சென்று சந்திக்கவில்லை. அதனால் அவன்மீது கோபமுறுகிறாள் அவள் கண்ணன் அவளைச் சந்திக்க வேண்டி தன்னை நன்றாய் அலங்கரித்துக்கொண்டு அவள் இல்லம் செல்கிறான். அப்போது அவள் அவனிடம் தனது நிறைந்த காதலை உள்ளடக்கிய நிலையில் பலவாறு கூறி ஊடுகிறாள்.

நன்றாய்த்தான் அலங்காரம் செய்துகொண்டு வந்தி ருக்கிறீர். திருச்செவிகளில் கடிப்பிட்டுக்கொண்டு கலிங்கம் உடுத்தி, துழாய் அணிந்து, கலிக்கச்சுக் கட்டிக்கொண்டு, பலமாமணி, பொன்னாபரணங்களை அணிந்துகொண்டு, குழல்தாழ சுரிகை அணைந்து, வில்லொன்று கையில் ஏந்தி அழகாய்த்தான் வந்திருக்கிறீர் எதற்காக இப்படி என்னிடம் வந்திருக்கிறீர்? இது என்ன? நீர் யார்? என வினவி ஊடுகிறாள்.

எனது வீட்டின் புறமே வந்து நின்றீர்; பின் கவரார் கதவின் புறம் வந்தீர்; காமன் எனப்பாடி வந்தில்லம் புகுந்தீர்; முற்றம் புகுந்து முறுவல்செய்து • நிற்கின்றீர்; அதுவும் போவார் வருவார் எவருமிலையெனப் பார்த்து வந்து புகுந்து கொண்டீர். இப்படி நீங்கள் நடந்துகொண்டது ஏதுக்கு? 'இது என்ன? என்ன? நீங்கள் எவரோ? என மேலும் கூறி ஊடுகிறாள்.

உங்கள் மனத்தின் கருத்தினை நீர் ஏதும் சொல்லத் தேவையில்லை. நீங்கள் போகலாம். சொன்னபோது வருவதை அறியாதவர் அல்லவா நீங்கள் எனத் தமது ஊடலின் காரணத்தைத் தொட்டுகாட்டி ஊடிச் செல்கிறாள்.

உங்களுக்கென்ன? பல தேவிமார்கள் உண்டு. உங்களைத் தேடி திருமாமகளும் மண்மகளும் நிற்க நீங்கள் ஏன் என் இல்லம் புகுந்து என்முன் முறுவலித்து நிற்கிறீர்? ஏடி இது என்? இது என்? இது என்னோ? எனப் பலதேவியர் இருக்க அவர்களுள் ஒருவரைச் சந்திக்க வேண்டித்தான் நீ சொன்ன படி வரவில்லை என குறிப்பாலுணர்த்தி ஊடுகிறாள்.

இவ்வாறு ஆழ்வார் திருமங்கை தானே ஆய்ச்சியாகி— 'மதுர பக்தியிலாழ்ந்து புதியதொரு அனுபவத்தில் நம்மை ஆழ்த்திவிடுகின்றார்.

மேலும் ஆழ்வார் திருமங்கை பெண்தன்மையேற்று தலைவி தோழி தாய் நிலைகளில் இருந்தும் பாசுரங்கள் பாடியுள்ளார்.

ஆழ்வார் தான் தலைவியாகி, தலைவனைப் பிரிந்த தலைவி, வண்டு, குருகு முதலியவற்றை நோக்கி இரங்கிக் கூறுவதாய் பெரியதிருமொழி மூன்றாம்பத்து ஆறாம் திருமொழிப் பாசுரங்கள் அமைந்துள. தலைவனைப் புணர்ந்துப் பிரிந்த தலைவி தனது பாங்கியற்குத் தலைவன் பதி உரைத்தலாய் ஏழாம்பத்து ஐந்தாம் திருமொழிப் பாசுரங்கள் அமையப்பெற்றுள. தலைமகனைப் பிரிந்த தலைமகள் இரங்கிக் கூறுவதாய் எட்டாம்பத்து மூன்றாம் திருமொழிப் பாசுரங்கள், ஐந்தாம் திருமொழிப் பாசுரங்கள் விளங்குகின்றன. தலைவனது உருவெளிப்பாட்டில் நலியும் தலைவி தோழியிடம் கூறுதலாய் ஒன்பதாம் பத்து இரண்டாம் திருமொழிப் பாசுரங்களும், பிரிவு ஆற்றாத தலைவி பறவைகளைத் தூது விட்டுப் பிறை, தென்றல் முதலியவற்றால்

வருந்தியும் கூறுதலாய் அமைந்த ஒன்பதாம்பத்து நான்காம் திருமொழிப் பாசுரங்களும் இலங்குகின்றன பிரிவு ஆற்றாத தலைவி தலைவன் இருக்கும் இடத்தில் தன்னைக் கொண்டு சேர்க்குமாறு தோழியரை வேண்டுதலாய்ப் பெரியதிருமொழி ஒன்பதாம் பத்து ஐந்தாம் திருமொழிப் பாசுரங்கள் விளங்க, தலைவி பறவைகளை நோக்கி 'மாயனை அழைக்க' என்பதாய் வரும் பத்தாம்பத்து பத்தாம் திருமொழிப் பாசுரங்களும் விளங்குகின்றன. தலைவி இரங்கலாக அமையும் பதினோறாம் பத்து ஒன்று, இரண்டு, மூன்றாம் திருமொழிப் பாசுரங்களிலும் மதுரபக்தி இழைந்தோடுகிறது. இது அனைத்து நிலைகளிலும் ஆழ்வார் ஆழ்வாராக இல்லாது தலைவியாய் அமைந்து தன் மதுரபக்தியை வெளிப்படுத்து கிறார்.

இவ்வாறே திருநெடுந்தாண்டகத்தில், தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்கும் இருபத்தொன்று முதல் இருபத்தைந்து வரையிலான பாசுரங்களும், தலைவி வண்டையும், நாரையை யும் தூதாய் விடுக்கும் இருபத்தாறு, இருபத்தேழு பாசுரங் களும், தலைவி ஊடல் கொண்டு உரைத்த இருபத்தெட்டு, இருபத்தொன்பது பாசுரங்களும் ஆழ்வாரின் மதுரபக்தியைப் புலப்படுத்துவனவாகவே உள.

திருவெழுகூற்றிருக்கையில் நின்னடியிணை பணிவன் வருமிடரகல மாற்றோ வினையே என்று ஆர்த்தராய்ச் சரணம் புகும் ஆழ்வார், இறைவன் அவர் மூலம் இன்னும் சில பிரபந்தங்கள் செய்ய வாளாயிருக்க, ஆழ்வார் தமக்கருளுதலின்றி, தமது விருப்பத்தை நிறைவேற்றாத இவன் எதுக்கு? அவனுடைய ஸ்வரூபகுண விபூதிகளையும், அவன் உகந்து அருளின இடங்களையும் அழித்துவிடுவோம் என அவற்றை அழிக்கப் பார்க்கும் சிறிய திருமடலில், கிருஷ்ணாவதார குடக்கூத்திலகப்பட்டு அவனை அனுபவிக்கப் பெறாது வருந்தி மடலெடுக்கத் துணிந்த பிராட்டி ஒருத்தி யின் தன்மையினை ஏற்று அவள் பாடுவதாகப் பாடுகிறார்.

ஆதலால் இவ்வாறு மடலெடுக்கத் துணிந்த நாயகியாகி 'மடல் ஊர்வன்' எனப் பாடும் சிறிய திருமடல், பெரிய திருமடல் என்ற அவரின் இரண்டு படைப்புக்களும் அவரது மதுரபக்தியை புலப்படுத்துவனவாகவே அமைந்து விளங்குகின்றன எனில் அது மிகையாகாது.

## 2-3-5 பூஜாசக்தி பக்தி

பகவத் பூஜையில் ஈடுபடுதல் பூஜாசக்தி பக்தியாகும்.

பூசை என்பதற்கு நன்மையில் விருப்பம் என்று ஒரு பொருளுண்டு. பேராற்றலைக் காணுமிடத்துத் தன்னை அறியாது மனிதனுக்கு வியப்பு வந்துவிடுகிறது. இத்துணைப் பேராற்றல் வாய்ந்தது ஒன்று உண்டா என்று அதிசயிக்கிறான். மெய்ப்பொருளின் மகத்துவத்தை உணர்வதால் உண்டாகும் அதிசயமே பூசையாகின்றது பேராற்றல் படைத்துள்ள ஒன்றை நெருங்குதற்கு ஏற்பத் தன் துயரங்களும், அச்சங்களும் நீங்கப்பெறுவதை மனிதன் காண்கிறான். அப்போது அவன் அல்லலை நீக்கும் பரமவஸ்துவின்கண் அடிபணிகிறான். வேறு எவ்விதத்திலும் நன்றி செலுத்த அவனுக்கு இயலுவதில்லை. ஆதலால் அச்சத்தைத் தவிர்த்தலும், அடிபணிதலும் பூசையின் பகுதிகள் ஆகின்றன. இறைவனது சட்டத்துக்கு அடிபணிந்து ஒழுகுமளவு மனிதனுக்குச் சீரும் சிறப்பும் உண்டாகின்றன. அதனால் தனக்கு உண்டாகும் மகிழ்வை அடக்கமுடியாது மனிதன் கடவுளைப் போற்றவும்,வழுத்தவும், வணங்கவும் செய்கின்றான். உள்ளத்தின் உவகையே வணக்கமாக வடிவெடுக்கிறது.[11]

உடலில் ஒரு காயம் ஏற்பட்டால் அது ஆறும் வரையில் அதற்குக் காப்பாக மேலே பொருக்குத் தோன்றுகிறது. உள்ளே காயம் இருக்கும் வரையில் பொருக்கு இருக்க வேண்டும். புண் ஆறுவதற்கு முன் பொருக்கை எடுக்கக் கூடாது. புண் ஆறிய பின் தானாகவே அது உலர்ந்து வேறு பட்டுவிடும். ஞானம் அடைந்த பின் சடங்குகளும், ஆசாரங்

களும், தாமாகவே கழிந்து ஒழிந்துபோம். ஞானம் அடைவதற்கு முன் அவற்றை ஒழிக்கப் பார்ப்பது புண் ஆறுவதற்கு முன் பொருக்கை எடுத்துப் புண் ஆறுவதைத் தடுப்பது போலாகும்.

நீர் உடலைத் தூய்மைப்படுத்துவதுபோல் பிரார்த்தனை மனதைத் தூய்மைப்படுத்துகிறது முழுமனத்துடன் உறுதியுடன் மேற்கொள்ளப்படும் பிரார்த்தனைகள் சர்வ சக்தி உள்ளவையாக மாறுகின்றன,[34]

எம்பெருமானைக் கண்டு களித்து வாழ்த்தி, அணுகி, கூப்பித்தொழுது, உருகி, விழிகளில் நீர்மல்க நின்று, பகவானைக் கண்டு இன்பக் கலவி எய்தி, பூதலத்தில் விழுந்து, புரண்டு அடியவர்க்குழுவினைக் கண்டு அவர்களுடன் இசைந்து உடன் இருந்து, வாழ்வது என்றோ என்று ஏங்கச் செய்வதும் பூசாசக்தி பக்தியாகும்.

ஆழ்வார் திருமங்கைக்கு அவனை எண்ணியதும்—தனை ஆட்கொண்ட கருணையை நினைந்ததும் பக்தி பொங்குகிறது; விழிகளில் நீர் சோருகின்றது; உள்ளம் உருகுகிறது.

> **"புள்ளாய் ஏனமுமாய்ப் புகுந்து என்னை யுள்ளங்கொண்ட**
> **கள்வா!' என்றலும்என் கண்கள்நீர் சோர்தருமால்**
> **உள்ளே நின்றுருகி,"[35]**

பூமாலைசாத்தல், பாமாலைபாடல், அவனை உளமார நினைத்தல், நாடல், கண்ணாரக்கண்டு களித்தல், வாழ்த்தல், மகிழ்ந்தேத்தல் ஆகிய பூசையின்பால் நிகழும் நிகழ்வுகளில் தமை மறந்து ஆழங்கால்பட்டு தமது பூசாசக்தி பக்தியினைப் புலப்பட வைக்கிறார் ஆழ்வார்.

> **"கள்ளேன் உன்னையல்லால், கறையூர்நின்ற நம்பியே."**

> **"நாடேன் உன்னையல்லால் கறையூர்நின்ற நம்பியே!"**

> **"............உன்**
> **கைம்மான வண்ணமல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே"**

"..........என்
கண்ணிணைகள் களிப்பக் களித்தேனே!"

"...மகரக்குழைக் காதனை,
மைந்த னை மதிள் கோவல் இடைகழி
ஆய னைஅம ரர்க்கரி யேற்றை, யென்
அன்ப னையன்றி, யாதரி யேனே"

".........தாமரைக் கண்ணனுக்
கன்றி, யென்மனம் தாழ்ந்துநில் லாதே"

"வெண்ணெ யுண்டுர லின்இடை யாப்புண்ட
தீங்க ரும்பினை தேனை நன் பாலினை,
அன்றி யென்மனம் சிந்தைசெய் யாதே"

"......பர வைத்துயி லேற்றை யென்
பண்ப னை, யன்றிப் பாடல்செய் யேனே"

"......மாமணி வண்ணனெம் மண்ணல்
வண்ண மேயன்றி வாயுரை யாதே"

"பொன்செய் மால்வரை யை மணிக் குன்றினை
அன்றி, யென்மனம் போற்றியென் னாதே"[36]

என அவனையன்றி பிறருக்குத் தனது பூசையில் பங்கில்லை எனக் கூறிவிடுகிறார் ஆழ்வார்.

"நீடு பன்மலர் மாலையிட்டு, நின்னிணையடி
தொழுதேத்தும் என்மனம்"[37]

என அவனுக்கு அன்பொடு மலரிடல்—அடியிணைத்தொழல்—ஏத்தலாகிய நிகழ்வுகளில் ஈடுபட்டு பூசாசக்தியின் ஆழ்ந்தமையைக் குறிப்பிடுகிறார் ஆழ்வார்.

ஆண்டவனது திருநாமம் அவனினும் சிறந்தது. நாமஜெபம் பூசையில் ஓர் அங்கமாகும்.

ஆழ்வார் அவனது திருநாமம், செபித்துத் தான் உய்ந்தமையைப் பக்திப் பரவசத்தோடு பாடுகிறார்.

"செப்பலர் கமல மோங்கு
செறிபொழில் தென்தி ருப்பேர்
பையர வணையான் நாமம்
பரவி, நான் உய்ந்த வாறே!"

"எங்கள்மால் இறைவன் நாமம்
ஏத்தி நான் உய்ந்த வாறே!"

"வானவர் தலைவன் நாமம்
வாழ்த்தி, நான் உய்ந்தவாறே"[38]

இவ்வாறு தான் அவனது திருவநாமத்தைப் பரவி, ஏத்தி வாழ்த்தி உய்வு பெற்றதைத் தமது பூசாசக்திபக்தி பாடுகிறார் ஆழ்வார்.

திருமாலின் திருநாமச் சிறப்பைத் தாம் உணர்ந்து அறிந்தவாறு தம் பாசுரங்களால் கேட்போரும், படிப்போரும், உணரும்படி வைக்கிறார்.

அவனது திருநாம உச்சரிப்பால் விளையும் நன்மைகளை யும் கூறி, பூசையில் நாம உச்சரிப்பின் முக்கியத்துவத்தையும் காட்டுகிறார்.

"பொங்கு புணரிக் கடல்சூழ் ஆடை நிலமா மகள் மலர்மா
மங்கை பிரமன் சிவன், இந்திரன்; வா னவர்நா யகராய
எங்கள் அடிகள் இமையோர் தலைவ ருடைய திருநாமம்
நங்கள் வினைகள் தவிர உ ரைமின்—நமோநா ராயணமே"[39]

அவனது நாமம் உச்சரித்தால் பாவிகளும் பிழைத்து விடுவர்; அவனருளும் வாய்த்துவிடுமெனத் தன்னையே சான்றாகக் காட்டிப் பாடுகிறார் ஆழ்வார் திருமங்கையார்.

"ஆவியை யரங்க மாலை
அழுக்குடம் பெச்சில் வாயால்
தூய்மையில் தொண்ட னேன் நான்
சொல்லினேன் தொல்லை நாமம்
பாவியேன் பிழைத்த வாறு' என்
றஞ்சினேற் கஞ்ச லென்று
காவிபோல் வண்ணர் வந்தென்
கண்ணுளே தோன்றி னாரே"[40]

எம்பெருமானைப்போன்றே அவனது அடியவர்களை எண்ணுதலும் வணங்குதலும், அவர்களுடன் இசைந்து உடனிருந்து வாழ விரும்புதலும் பூசாசக்தியின்பால்பட்டதே என்பதறிந்த ஆழ்வார் தனது பூசாசக்திபக்தி புலப்படுமாறு பின்வருமாறு பாகவத ஈடுபாட்டில் ஆழங்கால்படுகிறார்.

அவனைத் தொழும் மாலடியவர்கள் எப்பொழுதும் என் மனத்தே இருக்கின்றனர்; அவர்களை என் தலைமீது தாங்குவேன்; அவர்களை நான் ஒருக்காலும் பிரிகிலேன்; அவர்களைக் கண்டால் என் கண்கள் களிக்கின்றன; நினைத்தால் நெஞ்சம் இனிக்கிறது; அவர்களுக்காக எனதுள்ளம் உருகும்; அன்பு பொழியும்.

மாலடியார் விண்ணவரினும் சிறந்தவர்; அவர்களிடம் பாவங்கள் சேரா. வெங்கூற்றம் அவர்களை உண்ணாது.[41]

பூசாசக்திபக்தியிலாழ்ந்து பக்தர்களுக்கு எம்பிரான் எழுந்தருளியுள்ள திருத்தலங்களும், அவனது திருமேனியை அலங்கரிக்கும் திவ்யாபரணங்களும், திவ்யாயுதங்களும் என அவனது தொடர்பான அனைத்தும் அவனாகவே காட்சி அளிக்கும்; அவனை ஏத்தித் தொழுதல் போல் அவற்றின் பெருமை பேசல்—இவற்றிலும் அவர்களுடைய செயல் களிருக்கும். ஈண்டு ஆழ்வாரும் தனைமறந்து பூசாசக்தி பக்தியில் மூழ்கி, அவனது திருத்தலங்களை ஏத்துகிறார்; அவற்றை பெருமைபட பேசுகிறார்; இறைவனாகவே அவற்றைக் கண்டு துதிக்கிறார்.

உயிரை உடலை வருத்தி கடினப்பட்டு தவஞ்செய்தல் எல்லாம் வேண்டாம். அவனைச் சிந்தையுள் வைத்து அவன் எழுந்தளியிருக்கும் தில்லைத் திருச்சித்ரகூடத் திருத்தலம் சென்று சேருங்கள்; தவத்தால் பெறும் பலன்களிலும் மிக்கு பெறப்பெறுவீர் என அவனது திருத்தலம் சென்று திரும்பினாலே தவத்தால் விளையும் பயன்களிலும் மேலானப் பயன்களைப் பெறலாம் எனத் திருத்தலங்களின் மகிமையைத் தன்னுள்ளங் குளிரப் பேசிப் பரவசப்படுகிறார்; மானிடரை ஆற்றுப்படுத்துகிறார்: பிறரை வைணவத்திற்கு இழுக்க முயல்கிறார்.

"ஊன்வாட உண்ணா துயிர்காவ லிட்டு
உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து
தாம்வாட வாடத் தவம்செய்ய வேண்டா
தமதா இமையோ ருலகாள கிற்பீர்!
கானாட மஞ்ஞைனக் கணமாட மாடே
உயலாடு கால்நீர்ப் பழனம் புடைபோய்
தேனாட மாடக் கொடியாடு தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்றுசேர் மின்களே"

"செருநீல வேற்கண் மடவார் திறத்துச்
சினத்தோடு நின்று மனத்தால் வளர்க்கும்
அருநீல பாவம் அகலப் புகழ்சேர்
அமரர்க்கும் எய்தாத அண்டத் திருப்பீர்!
பெருநீர் நிவாவுந்தி முத்தங்கொணர்ந்து
வித்தும் வயலுள் கயல்பாயந் துகள
திருநீலம் நின்று திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்று சேர்மின்களே"[42]

தேவர்கள் வந்து வணங்கும்படிக்குப்[43] பெருமை உடையது இத்தலமென மேலும் இதன் பெருமை பேசுகிறார் ஆழ்வார் அவர்கள்.

திருநாங்கூரில் ஆங்கு எழுந்தருளியுள்ள இறைவனைக் காண மானிடரின் ஏகப்பட்ட கூட்டம்; இவர்களோடு இந்திரன் முதலான தேவர்களும், முனிவர்களும், சந்திரன், கதிரேசன் முதலானவர்களும், பிரம்மன் முதலிய தலைமைக் கடவுளரும் ஆக அனைவரும் சேர்ந்து வந்து "நாங்கூர் இறைவா! எமக்கு அருள்வாய்!"[44] என வேண்டி கோஷமிட்டுக் கொண்டிருக்கின்றார். இவ்வாறு தேவர்களும் மானிடரும் சென்று வணங்கும் சிறப்பினை உடையது நாங்கூர் திருத்தலமென அதன் பெருமை பேசி மகிழ்கின்றார்.

எம்பிரான் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்கள் அவனைப் போன்றே மிகுந்த சக்தி வாய்ந்தவை: அருள் வார்ப்பவை என்கிறார்.

"பிண்டியார் மண்டை ஏந்திப்
பிறர்மனை திரிதந் துண்ணும்
முண்டியான் சாபம் தீர்த்த
ஒருவனூர் உலக மேத்தும்
கண்டியூர் அரங்கம் மெய்யம்
கச்சி பேர் மல்லை என்று
மண்டினார் உய்யல் அல்லால்
மற்றையார்க் குய்ய லாமே?"[45]

அவனை, அவன் திருத்தலங்களை உளமாற வேண்டி மண்டினால் உய்வு கிடைக்கும் எனத் திருத்தலங்களின் மகிமையைச் செப்புகிறார்.

சிறிய திருமடலில் ஆழ்வார் ஏறத்தாழ இருபத்தைந்து திருத்தலங்களைச் சென்று தரிசித்த குறிப்பு காணப்படுகிறது. சமயம் வாங்கும்போது எல்லாம் அவன் தலங்களைப் பலவாறு சிறப்பித்துப் பேசும் ஆழ்வார், ஈண்டும் தான் கண்டு களித்த திவ்யதசங்களுக்குச் சிறப்பாகப் பலவாறு அடைகொடுத்து விளிக்கிறார்; அவனாகவே அவற்றைக் கண்டு பரவசப்படுகிறார்.

"சீரார் திருவேங் கடமே"

"தண்கால் நறையூர்"

"சீரார் கணபுரம்"

"பாரோர் புகழும் வதரி"''

இவ்வாறு ஈண்டு ஆழ்வாரின் பூஜாசக்திபக்தி விளக்கம் பெறுகிறது.

## 2-3-6. ஆத்மநிவேதனாசக்திபக்தி

முழுமையாகத் தன்னை இறைவனுக்கு அர்ப்பணித்தல் ஆத்ம )நிவேதனாசக்திபக்தியாகும். பிரபக்தி நெறி என்றும் சரணாகதி என்றும் இப்பக்தி பலவாறு வழங்கப்பெறுகிறது.

எம்பெருமானைத் தாம் சென்றடைகின்ற குறியாகக் கொள்வதோடு, அவனே தமது இலட்சியத்தை அடையும் நெறியாகவும் உள்ளான் என்று உறுதியோடு அவனையே புகலிடமாக அடைவது பிரபத்தியாம் அதாவது உபாயம், உபேயம், நெறி, குறி எல்லாம் எம்பெருமானே என்றிருத்தலிது இதனை மூன்று நிலைகளில் விளக்குவர்.

1. சுவரூபசமர்ப்பணம் : தான் இருப்பதே அவனால் தான் என நிற்றல் இறைவனுக்கே தான் உரியவன் எனத் தெளிந்து தன்னையே அவனிடம் ஒப்படைத்தல்.

2. பல சமர்ப்பணம் : தன் முயற்சியின் பலனையும்—கருமபலனையும்—அவனிடம் ஒப்படைத்தல்; அவன் உகப்பையே கருதல்

3 பார சமர்ப்பணம் : தெய்வானுபவத்தை அடையச் பொறுப்பையும் இறைவனிடமே ஒப்படைத்தல் அவனே அருள்வான் என்ற தெளிவு.

அதாவது இறைவனையன்றி வேறு எவர்க்கும் வேறு எதற்கும் அடிமை இல்லை; அவனையன்றி வேறு எவரையும்

வேறு எதனையும் உபாயமாகக் கருதேன்; அவனையன்றி வேறு எவரையும், வேறு எதனையும் இன்பமாகக் கொள்ளேன் என்று உறுதியோடு வாழ்தலாம்.

இப் பிரபத்திநெறியில் சகுணக்கடவுள் வழிபாடு செய்யப் பெறுகிறார். அனைவருக்குமுரிய எளிய நெறியாக இது விளங்குகிறது. இப்பிரபத்தி காமம், பகை, பயம் முதலிய உணர்ச்சிகளை இறைவனிடத்தில் திருப்பச் செய்கிறது. பூனைக்குட்டியைத் தாய்ப்பூனை தூக்கிச்செல்லும் நிலை இந்நெறி நிலையாம்.

ஆழ்வார் திருமங்கையாரும் இறைவனுக்குத் தன்னை முழுமையாய் அர்ப்பணித்துக்கொண்டு பலவாறு தனது ஆத்ம நிவேதனாசக்திபக்தி புலப்பட பக்திப்பரவசத்தோடு பாசுரங் கள் பாடிச்செல்கிறார்.

ஆழ்வார், தாயே தாரமே கிளை மக்களே வாழ்ந்தது; கலா இரசிகனாகப் பெண்மட்வாரிடம் மயங்கி இருந்தது இறைவனைப் பற்றும் குறிக்கோள் ஒன்றிலாது திருமங்கை மன்னனாயிருந்து மக்களைக் காக்க மாற்றாருடன் போரிட்டு உயிர்களைக் கொன்றது பாலகனாய்த் தெரியாது இப்படி பல தீமைகள் செய்தது; பிறர்க்கே உழைத்து ஏழை ஆனது ஆகிய தாம் வாழ்ந்த சம்சார வாழ்வினுக்கு நொந்து, நாணி வெறுத்து அவனை வந்து சரணுற்றதை—அவனை இனி விடாத தனது உறுதியைப் பாடும்போது திருமங்கையார் ஆத்மநிவேதனாபக்திபக்தராய் காட்சி தருகிறார்.

எம்பெருமானுக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டமையை, இவ்வன்பு நெறியில்தான் ஆழ்ந்தமையை ஆழ்வார்,

"நாயேன் வந்தடைந்தேன்; நல்கியாளென்னைக் கொண்டருளே"

"ஆனாய் வந்தடைந்தேன்; அடியேனையாட் கொண்டருளே"

"அன்றே வந்தடைந்தேன்; அடியேனையாட் கொண்டருளே"

"அலந்தேன் வந்தடைந்தேன்; அடியேனையாட் கொண்டருளே"

"அப்பா! வந்தடைந்தேன்; அடியேனையாட் கொண்டருளே"

"அண்ணா வந்தடைந்தேன்; அடியேனையாட் கொண்டருளே"

"தெரியேன் பாலகனாய்ப் பலதீமைகள் செய்துவிட்டேன்
பெரியேன் ஆயினபின் பிறர்க்கேயுழைத் தேழையானேன்
கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா!
அரியே! வந்தடைந்தேன், அடியேனையாட் கொண்டருளே"

"ஆற்றேன் வந்தடைந்தேன்; அடியேனையாட் கொண்டருளே"

"பற்றேல் ஒன்றுமிலேன்; பாவமேசெய்து பாவியானேன்
மற்றேல் ஒன்றறியேன் மாயனே! எங்கள் மாதவனே!
கற்றேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனை வேங்கடவா!
அற்றேன் வந்தடைந்தேன்; அடியேனையாட் கொண்டருளே"[47]

எனப் பலவாறு பக்திப் பரவசத்தோடு கூறி மகிழ்கிறார்.

அவனுக்கே முழுமையாய்த்தனை அர்ப்பணித்து அவனுக்கே ஆளாகிப் போன தனது நிலையை,

"ஆயன் அடியல்லது மற்றறியேனே"
"எந்தாய்! இனியா னுன்னை யென்றும் விடேனே"[48]

என்று பாடி, அவனது திருவடி அன்றி தான் வேறொன்றும் அறியாததையும், இனி அவனை என்றும் விடாத தனது உறுதியையும் வெளிப்படுத்துவதன் மூலம் காட்டிச் செல்கிறார்.

நின் அடிகளை அடைந்தேன், அணிபொழில் திருவரங்கத்து அம்மானே. நினது திருவடிகள் இம்மூவுலகை அளந்த திருவடிகள் அல்லவோ?[49] என ஆழ்வார் திருமங்கை திருவரங்கத்தானிடம் சரணடைகின்றார்.

சம்சார வாழ்வில் உழன்று—அவனால் ஆட்கொள்ளப்பட்டு பின் சம்சார வாழ்வு, அரச வாழ்வு இவற்றை வெறுத்து

வாழ்வின் நிலையாமை உணர்ந்துதான் அவனது திருவடிகளில் தனை முழுமையாக அர்ப்பணித்ததைத் திருமங்கையார் ஆறாம்பத்து இரண்டாம் திருமொழிப் பாசுரங்களில் பாடிச் செல்கிறார். நின்னடைந்தேன்; நின்னடைந்தேன் எனப் பாடும் ஆழ்வாரின் இப் பாசுரங்களில் அவர்தம் ஆத்ம நிவேதனாசக்திபக்தியைக் காணமுடிகிறது.

தான் அவன் திருவடி அடைய தீவினைகள் தீர்ந்தன வாகவும், அவனை அன்றி வேறோர் தெய்வம் தேடாது அவனையே உறுதியாய்க் கொண்டிருக்கும் தனது நிலையையும் ஆழ்வார் பின்வரும் பாசுரங்களில் காட்டிச் செல்கிறார்.

**"தீர்ந்தேன் நின்னடைந்தேன் திருவிண் ணகரானே!"**

**"......நெஞ்சுதன்னால் குணங்கொண்டுமற் றோர்தெய்வம்**
**தேறேன், உன்னையல்லால்—திருவிண் ணகரானே!"[50]**

மேலும்,

**"கனியே! உன்னைக் கண்டு கொண்டுய்ந் தொழிந்தேனே"**

**"கதியே! உன்னைக் கண்டு கொண்டுய்ந் தொழிந்தேனே"**

**"முத்தே! மணிமா ணிக்கமே! முளைக்கின்ற**
**வித்தே உன்னையெங் ஙனம்நான் விடுகேனே?"**

**"ஆயா! அலைநீ ருலகேழும் முன்னுண்ட**
**வாயா! உன்னையெங் ஙனம்நான் மறக்கேனே"[51]**

என அவனுக்கே தானாகி ஒழிந்தநிலை—அவனைத்தான் விடுதல்—மறத்தல் முடியாது என்ற தன்நிலை ஆகியவற்றை அழகுபடக்கூறி, அவர்தம ஆத்மநிவேதனாசக்திபக்தியை நாம் குறிப்பால் உணரும்படிச் செய்கிறார்.

அவனையே தான் சரணுற்றதை—அவனையே நோக்கும் தனது உறுதியை வெளிப்படுத்தி, பின்வருமாறு கசிந்துருகிப் பாடுகிறார்.

"கள்ளேன் உன்னையல்லால், நறையூர்நின்ற நம்பியே!"

"பாடேன் தொண்டர்தம்மைக் கவிதைப் பனுவல்கொண்டு
நாடேன் உன்னையல்லால், நறையூர்நின்ற நம்பியே!"

"......................உன்
கைம்மான வண்ணமல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே"

"நீண்டாயை வானவர்கள் நினைந்தேத்திக் காண்பரிதால்
ஆண்டாயென் றாதரிக்கப் படுவாய்க்கு நானடிமை
பூண்டேனென் நெஞ்சினுள்ளே புகுந்தாயைப்போக
லொட்டேன்
நான்தான் உனக்கொழிந்தேன் நறையூர்நின்ற நம்பியே."

"ஆய னை அம ரர்க்கரி யேற்றை யென்
அன்ப னையன்றி, யாதரி யேனே"

"......தாமரைக் கண்ணனுக்
கன்றி, யென்மனம் தாழ்ந்துநில் லாதே"

"தீங்கரும்பினை தேனை, நம் பாலினை,
அன்றி யென்மனம் சிந்தைசெய் யாதே"

"காத லால்மறை நான்குமுன் னோதிய
பட்ட னைபர வைத்துயி லேற்றை, யென்
பண்ப னை, யன்றிப் பாடல்செய் யேனே"

"வீங்கு நீர்மக ரந்திணைக் கும்கடல்
வண்ணனன் மாமணி வண்ணனெம் மண்ணல்
வண்ண மேயன்றி, வாயுரை யாதே"

"பொன்செய் மால்வரை யை, மணிக் குன்றினை
அன்றி, யென்மனம் போற்றியென் னாதே"[12]

இவ்வாறு தன் மனம்—மெய்—வாக்கு ஆகிய அனைத்துமே அவனுக்குச் சரணுற்றுவிட்டதை ஆழ்வார் ஆங்காங்குக் காட்டிச் செல்கிறார்.

திருவழுந்தூரானை 'அடியேன் கண்டு கொண்டேன்' என அவன் திருவடிகளில் சரணுற்றுப் பேசுகிறார்.

"அடியேன் அடைந்துய்ந்து போனேனே"

"நின்னடி யன்றிமற் றறியேன்"[53]

திருவழுந்தூரானிடம் பேசும் ஆழ்வார், ஐம்புலன்களின் பிடியிலிருந்து தப்பிப் பிழைத்து உனது திருவடிகளின் கீழ் வந்தடைந்தேன். கூறை சோறு இவை தந்து எனை நீ காப்பாய் எனச் சரணுறுகிறார்.[54]

திருச்சிறுபுலியூரானிடம், அவனதடி யல்லது ஒன்றறி யாத[55] தன் சரணாகதியைக் கசிந்துருகி உளமுருகப் பாடி உணர்த்துகிறார். திருச்சிறு புலியூரானிடம் சரணுற்று வணங்குவர் துயரங்கள் நீங்கப்பெறுவர் என அவனைச் சரணாகதி அடைவதால் பெறும் பயனையும் காட்டிச் செல்கிறார்.[56]

திருக்கண்ணபுரத்தானிடம், அம்மானை அடைந்துய்ந்து போனேன்; பெருமானை அடைந்துய்ந்து போனேன்; அக்காரக் கனியை அடைந்துய்ந்து போனேன்; நின்னை அன்றி ஒரு தெய்வம் உளது என்று கருதேன்; அப்படி எண்ணம் கொண்டிருப்பாரோடு உற்றிலேன்; பெற்றோர், சுற்றம் என எவரையும் பேணாது மற்றாரையும் பற்றாது உனையே அடைந்தேன்[57] என ஆத்மநிவேதனாசக்திபக்தராய் நெஞ்சுருகிப் பாடிக் களிக்கிறார்.

திருநெடுந்தாண்டகத்தில் அவனது திருக்கல்யாண குணங்களில் ஆழங்கால் பட்ட ஆழ்வார்,

"...............எந்தை
மலர்புரையும் திருவடியே வணங்கி னேனே"

"...............எந்தை
தளிர்புரையும் திருவடியென் தலைமே லவே"

"பேரகத்தாய்! பேராதென் நெஞ்சி னுள்ளாய்!
பெருமான்! உன் திருவடியே பேணி னேனே"[58]

எனப் பலவாறு மாலைச் சரணுறுகிறார்.

மனிதப்பிறவி பாவங்களை நீக்கி புனிதத்தைப் பெற அமைந்த ஒரு பயிற்சிக் களமாகும். இப்பயிற்சியில் ஒருசில பிறவிகளே வெற்றிப் பெறுகின்றன. அவ்வெற்றியால் இறைவனை அடைகின்றன. விடாது அவனோடு ஒட்டி வாழ்கின்றன. திருமங்கையாழ்வாரும் பாவத்தை நீக்கி புனித நிலைபெற்று இறைவனை அடைகிறார். அந்நிலையால் தான் நீக்கிய பாவங்களை உணர முடிகிறது. ஆகவே தனைப் பாவி என அழைத்துக் கொள்கிறார். இறைவனை அடைந்தவர்தான் அவனைவிட்டு நீங்க மனமின்றி ஒட்டி வாழ விழைந்து அவனைச் சிக்கெனப் பிடித்ததாகக் கூறிக் கொள்கிறார். இந்நிலையை,

"மாலிருஞ் சோலை மேய
மைந்தனை வணங்கி னேனே"

"...உம்மை யல்லால்
எழுமையும் துணையி லோமே"

"அத்த! நின் னடிமை யல்லால்
யாதுமொன் றறிகி லேனே"

"பண்டமாம் பரம சோதி!
நின்னையே பரவு வேனே"[59]

எனும் பாசுர வரிகளில் உணரலாம்.

திருவெழுகூற்றிருக்கையில், இறைவன் பக்தர்களைக் காத்தருள்வதற்காகச் செய்த செயல்களையும் மற்றும் அவனுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களையும் பரக்கப் பேசி, எம்பெருமானது திருக்குணங்களெலாம் செவ்வனே விளங்கத் திருக்குடந்தையில் கிடக்கிற தன்மையில் ஈடுபட்டு அங்கே சரணாகதி பண்ணி முடிக்கிறார்.

"செல்வம் மல்குதென் திருக்குடந்தை
அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க
ஆடர வமளியில் அறிதுயில் அமர்ந்த
பரம! நின் அடியிணை பணிவன்
வருமிடர் அகல—மாற்றோ வினையே"[40]

இவ்வாறு ஆழ்வாரின் ஆத்மநிவேதனாபக்திசக்தி ஈண்டு விளக்கம்பெறுகிறது.

## 2-3-7-0 குணமகாத்மியாசக்திபக்தி

குணமகாத்மியாசக்திபக்தியின் விளக்கம் எம்பெருமானின் திருக்கல்யாண குணங்கள், ஆழ்வாரின் பாசுரங்களில் குணமகாத்மியாசக்திபக்தி ஆகியன ஈண்டு கூறப்பெற்றிருக்கின்றன.

### 2-3-7-1 விளக்கம்

இறைவனுடைய கல்யாண திருக்குணங்களில் ஈடுபடல் குணமகாத்மியாசக்திபக்தியாகும்.

### 2-3-7-2 எம்பெருமானின் திருக்கல்யாண குணங்கள்

இறைவன் எண்ணிறந்த திருக்கல்யாண குணங்களுடையவன். அவற்றுள் வாத்ஸல்யம், சௌசீல்யம், ஸ்வாமித்துவம், சௌலப்யம் என்பன குறிப்பிடத் தக்கனவாகும்.

**வாத்ஸல்யம்**

குற்றத்தினையும் குணமாகக் கொள்ளும் அளவற்ற அன்பு வாத்ஸல்யம் எனப்படும்.

**சௌசீல்யம்**

உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு கலக்கும்போது தன் உயர்வும், அவனது தாழ்வும் நெஞ்சிற் சிறிதேனும் தோன்றாமல் புரையறக் கலக்கும் பண்பு சௌசீல்யமாகும்.

**ஸ்வாமித்துவம்**

தன்னை ஒழித்த மற்றெல்லாப் பொருள்களுக்கும் தலைவனாய் இருத்தல் இந்நிலையாம்.

**சௌலப்யம்**

இவ்வுலகத்து அனைத்து உயிர்களும் தன்னைப் பற்றி உய்யும்படி எளியனாயிருத்தல் சௌலப்யமாகும்.[61]

இக்குணங்கள் திருமங்கை பாசுரங்களில் அமைந்துள்ள பாங்கினைச் சிறிது காணலாம்.

## 2-3-7-3 திருமங்கை ஆழ்வார் பாசுரங்களில் குணமகாத்மியாசக்திபக்தி

ஆழ்வார் தம் பாசுரங்களில் எம்பிரானது கல்யாண குணங்களுள் ஒன்றான ஸ்வாமித்துவம் ஆங்காங்கு இடம் பெறுகின்றன.

மாலினது தனது ஒழிந்த அனைத்திற்கும் தலைவனா யிருக்கும் இருப்பு அதாவது முழுமுதற்பொருளாய தன்மை எல்லாம் தானாய் தன்னுள் எல்லாமாய் வியாபித்திருக்கும் நிலை—பிரளயநேரத்தில் ஆலிலைப் பாலனாய் வந்து உலகைக் காத்த நிகழ்வு என அனைத்தும் ஆழ்வார் வாக்கில் அவரது குணமகாத்மியாசக்திபக்தியை அவனது ஸ்வாமித்துவம் வெளிப்பட புலப்படுத்துவனவாக மலர்கின்றன.

வானவர் அவனது ஆயிரம் நாமம் பாடி அவனை ஏத்தும் படி அவன் தனை ஒழிந்த மற்று எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாய் இருக்கும் அவனது இருப்பைப் பாடுகிறார்.

"அண்டமரும் வானத் தவரும் ஆயிர நாமங்களோடு
திண்திறல் பாட வருவான்"[62]

மேலும் அவனது விசிஷ்டாத்வைதத் தன்மையினைப் பின்வருமாறு பலவாறு புலப்படுத்தி ஆழ்வார் அவனது

ஸ்வாமித்துவம் புலப்பட செய்ய, ஈண்டு அவரது குணமகாமித்யாசக்திபக்தியும் புலப்படுகிறது.

யாவருமாய் யாவுமாய் எழில்வேதப் பொருள்களுமாய் மூவருமாய் முதலாய் இருக்கின்றான்; வான், மண், மற்றுள்ள பல்லுயிராய்த் தான் ஆனவன்; கடல்நீரினை உடையாகச் சுற்றிக்கொண்டு, பாரினைத் திருவடியாக, புவனத்தை மெய்யாய், செவ்விமாதிரமெட்டும் தோளாய், அண்டம் திருமுடியாய் நின்றவன்; வேதமாய், வேள்வியாய் விண்ணாய், இருசுடராய், ஆதியாய் ஆனவன் [63]

சாக்யர், உலூக்யர், பௌத்தர், சார்வாகர், பாசுபதர், கானாகர் என்று இப்படி சொல்லப்படுகின்ற புறமதத்தவர் களால் அறியக்கூடாத ஸ்வரூப குண விபூதிகளை உடையவன்.

தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்று நான்கு புருஷார்த்தங்களையும் ஆர்த்திகட்கு அளிப்பவன்.

படைப்புத் தொழிலை நடத்துகைக்காக நான்முகனை ஆவேசித்தும், சம்ஹாரத் தொழிலை நடத்துகைக்காகச் சிவபிரானை ஆவேசித்தும், காக்கும் தொழிலை நடத்துக்கைக்குத் தானான தன்மையிலே இருந்தும் ஆக இப்படி மூவுருவினனாய் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தனாய் நின்றவன்.

சேதநர் செய்யுங் கருமங்களுக்கெல்லாம் சுகமாவது துக்கமாவது பயனாகத் தேறும் கருமம் வாயிலாக அந்தச் சுகதுக்கங்களுக்குப் பிரயோஜநன் அவன் [64]

இவ்வாறு அவன் அறுவகை சமயமும் அறிவரும் நிலையாய்—அறமுதல் நான்காய்—மும்மூர்த்தியாய்—இரு வகைப் பயனாய்—ஒன்றாய் நிற்கும் பரப்பிரம்மமாய் நிற்கும் அவனது நிலைகளைக் காட்டி அவனது ஸ்வாமித்துவ திருக்கல்யாண குணத்தைப் புலப்படுத்துகிறார். குணமகாத் மியாசக்திபக்தராய் மிளிர்கிறார்.

அவன் மிகவும் இனிமையானவன்; கரும்பின் சாறு போன்று இனிப்பவன் என்கிறார்.

'தேனிடைக் கரும்பின் சாற்றை"

"கரும்பினின் சாறு போலப்
பருகினேற் கினிய வாறே"

"...இன்பப்
பாவினைப் பச்சைத் தேனை"

"...இன்ப
ஆற்றினை, அமுதம் தன்னை"

"அரங்கமா கோயில் கொண்ட
கரும்பினை"[65]

இவ்வாறெல்லாம் அடியவர்கட்கு இனிமையாயுள்ளவன். அனைத்துயிர்க்கும் தன்னைப் பற்றி உய்யும்படி எளிமை யானவனே. எளிமையானவன் தான் இனிமையானவ னாகுவன். என்பதற்கேற்ப ஆழ்வார் அவனை 'இனிமை யானவன்' என்று மட்டுமே சொல்லி அதனது சௌலப்ய திருக்கல்யாண குணத்தைச் சுட்டுகிறார்.

"கேட்கயா லுற்ற துண்டு
கேழலா யுலகங் கொண்ட
பூக்கெழு வண்ண னாரைப்
போதரக் கனவில் கண்டு
வாக்கினால் கருமந் தன்னால்
மனத்தினால் சிரத்தை தன்னால்
வேட்கைமீ தூர வாங்கி
விழுங்கினேற் கினிய வாறே"

"வரும்புயல் வண்ணனாரை
மருவியென் மனத்து வைத்து
கரும்பினின் சாறு போலப்
பருகினேற் கினிய வாறே"[66]

என்று குழந்தை ஓரடி எடுத்து வைத்ததும் ஓடிவந்து அள்ளிக் கொள்ளும் தாயாகத் தன்னை உன்னுவார் உள்ளங்களில் வந்து இனியனாகும் எளியனாகிறான் என்கிறார்.

எம்பிரான் கண்ணன், தனை யசோதை தாம்பினால் கட்டும்படிக்குத் தாயார் செய்தவாறு தனது திருமேனியைச் சுருக்கிக்கொண்டும், தனது ஸ்வாமித்துவம் மறைத்து, தனது சௌலப்யம் புலப்படுமாறு அவளுக்கு உதவி அருளி, அவளால் தாம்பினால் கட்டுண்டான் என்கிறார்.

"மருதிற நடந்து"[67]

**வாத்ஸல்யம்**

"பேசினார் பிறவி நீத்தார்
பேருளான் பெருமை பேசி
ஏசினார் உய்ந்து போனார்"[68]

அவனை நினைத்தால் போதும்; அவனது திருநாமத்தை வாய்தவறி சொன்னால் போதும்; அவனது புகழைப்பேசித் தான் ஆகவேண்டும் என்பதில்லை. அவனை ஏசினால்கூட போதும். ஏசும்போது மனம் அவனை நினைக்கிறது; அவனது திருநாமம் நினைவுக்கு வருகிறது. ஆக அவனது நினைவு நெஞ்சில் நிழலாட, அவனை அறியாது அவனது பாவங்கள் சுட்டெரிக்கப்படுகின்றன. காட்டாகச் சிசுபாலன் அழிவினைக் காட்டலாம்; இராவண, இரணிய சம்ஹாரத்தைக் கூறலாம்.

ஈண்டு ஆழ்வார் திருமங்கையும் தனை ஏசுபவருக்கும் அருளும் கருணை உளத்தினன் அவன்; தனை ஏசுபவர்களது பிறவிப் பிணிகளை நீக்கும் மாமருத்துவன் அவன் என அவனது குற்றத்தையும் குணமாய் கொள்ளும் தாயின் பரிவினை நமக்குப் படம் பிடித்துக் காட்டுவதை உணர முடிகிறது.

**பரமவிரஹாசக்திபக்தி**

"சேஷத்வமில்லாதபோது ஸ்வருபமில்லை"[69]

என்கிறது முமுட்சுப்படி. ஆன்மாவிற்குச் சொருபம் சேஷத்துவமாகும்.

சீவாத்மா—பரமாத்மா உறவின் சிறப்பு ஆழ்வார் பாசுரங்கள் பலவற்றில் பேசப்படுகின்றது. பகவானை விட்டுப் பிரிந்திருக்கும் நிலையில் சீவாத்மா வேதனை கொண்டு உருகும் நிலையே பரமவிரஹாசக்தி பக்தி ஆகும்.

சீவாத்மாவாகிய தலைவி பரமாத்மாவாகிய இறையைச் சேருதலின்றி பிரிந்திருத்தலால், அது படும் வேதனைகளை, அத் தலைவிபடும் துன்பங்களைக் கண்டு நற்றாய் பேசுவதாக அமைத்துக் காட்டிச் செல்கிறார் ஆழ்வார். குறிப்பாக ஆழ்வார் சீவாத்மாவாகிய தான் பரமாத்மாவாம் அவனை விட்டுப் பிரிந்திருத்தல்—அதனால் வேதனைகொண்டு உருகிடல் ஆகிய நிலையில் நாம் அவரது பரமவிரஹாசக்தி பக்தியினைக் காணமுடிகிறது.

என் மகளாகிய தலைவியானவள் தோழிகளிடத்தில் குறுநகை சிந்தி புன்னகை பூத்தல் செய்தலிலை; முலைத்தடங் களில் சாந்து அணிந்து கொண்டும், குவளை போன்ற விழிகட்கு மையிட்டுகொண்டும், மலர்க் குழலுக்கு அணி செய்துகொண்டும் செய்தல் இலாள். மேலும் அவள் தனது காதல் நோவு மிக்குற்று. சாந்தம். சந்தனக் குழம்பு தடமுலை களுக்கு அணிந்து பூசுகையில் தழல் என்கிறாள். திங்களது ஒளிகூட கதிரின் வெம்மையைத் தருகின்றதே என வெதும்பு கிறாள். பொருகடல் புலம்பினாலும் புலம்புகிறாள். தனது அழகியமேனிவண்ணம் மாற, பசலையுற்று தனது வளைகளும் நில்லாத படிக்கு மெலிந்துபோனாள் தென்றல்கூட அவளுக்குத் தீயாய் வினை செய்கிறது. அவள் விழி தூக்கத்தைக்கூட மறந்துவிட்டாள்.[10]

மேலும் இவ்வாறு ஆழ்வார் நாயகியாகி, தலைவனைப் பிரிந்திருத்தலால் வேதனைகளைப் புலப்படுத்திப் பாடிய அனைத்துப் பாசுரங்களும் இப்பக்திவகையில் இடம் பெறும் எனில் அது மிகையாகாது.

ஜீவாத்மாவாகிய தான் பரமாத்மாவாகிய எம்பெருமா னுடன் சேருதலின்றி பிரிந்திருக்கும் நிலையில் சம்சார

கழலுக்கு பிறவி நோய்க்கு அஞ்சி, வேதனைக்கொண்டு உருகும் தன் நிலையை, தனது நோவினை—ஆழ்வாரின் கீழ்வரும் பாசுர வரிகள் நமக்கு உணர்த்துகின்றன.

"ஆற்றங் கரைவாழ் மரம்போல அஞ்சுகின்றேன்"

"காற்றத் திரைப்பட்ட கலலர் மனம்போல
ஆற்றத் துளங்கா நிற்பன்"

"பாம்போ டொருகூ ரையிலே பயின்றாற்போல்
தாங்காதுள் ளம்தள்ளும், என்தா மரைக்கண்ணா "

"இருபா டெரிகொள் ளியினுள் எறும்பேபோல்
உருகாநிற்கும் என்னுள்ளம், ஊழி முதல்வா"[11]

இவ்வாறு திருமங்கையாழ்வார் பாசுரங்களில் பக்தி நயம்பட பேசப்பெறுகிறது.

## குறிப்பெண் விளக்கம்


1. ப. அருணாசலம், பக்திஇலக்கியம், ப. 132.
2. Swami Chinmayananda, LOVE DIVINF NARADA BHAKI SUTRA, (Uttarkasi, 1968), Sutra 82.
3 மாருதிதாசன், இந்துசமயக் கருத்துக்கள், முதற்பதிப்பு, (சென்னை 1981), ப. 102. ப. 97.
4. சுவாமி சித்பவானந்தர் (த. ஆ) ஸ்ரீமத் பகவத்கீதை, ஆறாம்பதிப்பு, (திருப்பராய்த்துறை, 1966), ப 428-429.
5. டி. எஸ். பாலகிருஷ்ணசாஸ்திரிகள் 'ஆஞ்சநேயரின் சாத்விகபக்தி', தெய்வவழிச் சிந்தனைகள், (சென்னை, 1978), ப. 167.
6. திரு. அருள்மொழி, ஆறாம்பதிப்பு சென்னை, ப. 14.
7. மேற்படி ப. 15.
8. பெரி திரு. 2.1.1-9.
9. பெரி. திரு. 1. 10. 1, 2, 3, 4.
10. பெரி. திரு. 2. 6.

11. பெரி. திரு. 10. 4— 10. 5. 10. 7.
12. பெரி. திரு. 10. 4. 1.
13. பெரி. திரு. 10. 4. 2.
14. மேற்படி 10. 4. 2,
15. பெரி திரு. 10. 4. 3.
16. பெரி. திரு. 10. 4. 6.
17. பெரி. திரு. 10. 4. 4.
18. பெரி. திரு. 10. 4. 8.
19. பெரி. திரு. 10. 4. 7.
20 பெரி. திரு. 10. 5. 1, 2.
21. பெரி. திரு. 10. 5. 2, 3.
22. பெரி. திரு. 10. 5. 4, 5; 9; 7, 9.
23. பெரி. திரு. 10. 5. 5.
24 பெரி திரு. 10. 5. 6.
25. ஸ்ரீராமதேசிகாசாரியர், சில்லரை ரகஸ்யங்கள் (முதற்பாகம்), (தஞ்சை, 1972), ப 371.
26. பெரி. திரு. 1. 7. 1, 2, 6.
27. பெரி. திரு. 2. 1. 5, 7.
28. பெரி. திரு. 2. 3. 1, 6.
29. பெரி. திரு. 2. 5. 8.
30. பெரி. திரு 2. 6. 2.
31. பெரிய திருமடல். அடி. 113, 114, 115, 116 116—117, 117, 117—118, 118, 119, 119, 122—123, 123, 124, 124, 125—126, 126, 127.
32. குறுந். பா. 7, 6.
33. பி. சுவாமி சித்பவானந்தர், கடவுளின் வடிவங்கள், ப 209,
34. கே. ராதாகிருஷ்ணன், குண்டூசி, தீபாவளிமலர் 88, சென்னை, ப 80.
35. பெரி. திரு. 7. 2. 1.
36. பெரி. திரு. 7. 2 1, 2, 3—7. 3 1,4, 5, 6, 7, 9.
37. பெரி. திரு. 3. 5. 5.

38. பெர். திரு. 5. 9. 1, 2, 3, 4.
39. பெரி. திரு 6. 10. 9.
40. குறுந். பா 12.
41. பெரி. திரு. 7. 4. 2, 1, 4, 6, 5, 9, 7, 3, 8.
42. பெரி. திரு. 3. 2 1, 9.
43. பெரி. திரு. 3. 3. 7.
44. பெரி. திரு. 4. 1. 4.
45. குறுந் பா. 19.
46. சிறிய திருமடல் கண். 68, 71, 74, 78
47. பெரி. திரு. 1. 9. 1, 2, 3, 4, 6. 7, 8, 9.
48. பெரி. திரு 1. 10. 8, 9.
49. பெரி. திரு 5. 8. 1, 2 8, 9—5 9. 5.
50. பெரி. திரு 6. 3. 4, 7.
51. பெரி. திரு 7. 1. 6, 7, 8, 9.
52. பெரி. திரு. 7. 3. 2, 4, 5, 6, 7, 9.
53. பெரி. திரு. 7. 6. 3—7. 7. 2, 3.
54. பெரி. திரு. 7. 7. 8.
55. பெரி. திரு. 7. 9. 3, 4, 9.
56. பெரி. திரு. 7. 9. 6.
57. பெரி. திரு 8 10. 2, 3, 5.
58. நெடுந். பா. 1, 5, 8.
59. குறுந் பா 3, 9. 10, 11.
60. திருவெழு 43—47
61. எஸ். கிருஷ்ணவேணி அம்மையார், செம்பொருள்; ப. 126.
62. பெரி. திரு. 3. 3. 3—3. 4. 2, 9.
63. பெரி திரு 4 1. 2. 3—6. 6. 3.—9. 4. 9.
64. திருவெழு அடி. 33—37.
65. குறுந் 8, 5. 6, 2 13.
66. குறுந். பா. 4 5
67. குறுந் பா. 16
68. குறுந் பா 17.
69 எஸ் கிருஷ்ணவேணி அம்மையார், செம்பொருள், ப. 66
70. பெரி. திரு. 7. 2, 3, 4. 5, 9.
71. பெரி. திரு. 11. 8. 1, 2, 3, 4, 5, 6.

# இயல்—3

# திருமங்கை ஆழ்வார் பாசுரங்களில் திருமால் அவதாரங்கள்

இவ்வியலில் சமயம், இந்துசமயம், அதன் ஒரு பிரிவான வைணவம், அவதாரங்கள், திருமங்கை பாசுரங்களில் இடம் பெறும் அவதாரங்கள் ஆகியன விளக்கப்பெறுகின்றன.

## 3 1-0 சமயம்

இங்கு சமயத்தோற்றம், சமயம்—சொல்பொருள் விளக்கம், பயன் ஆகியன பற்றிய செய்திகள் கூறப் பெற்றுள்ளன.

## 3-1-1 சமயத்தோற்றம்

இறைவன் உலகினைப் படைத்தான். உலகத்து உயிர் களை உருவாக்கினான். மனஉணர்வுடைய மனிதனைப் படைத்தான். உலகினை மனிதன் தன்வயங்கொண்டு படிபடியாக முன்னேறினான் சிந்திக்கும் திறத்திலும் தன்னை வளர்த்துக்கொண்டான். கடலின் கொந்தளிப்பு மழை, இடி, மின்னல், பூகம்பம், புயல் முதலிய இயற்கைச் செயல் களுக்குப் பயந்து நடுங்கிய மனிதன், தன்னைவிடப் பேராற்றல் கொண்ட சக்தியினை உணரத் தொடங்கினான். முதலில் பயத்தின் காரணமாக இயற்கையை வழிபட்ட மனிதன், காலப்போக்கில் இயற்கையின் தோற்றத்துக்குக் காரணமாக ஏதோ ஓர் ஆற்றல் உண்டென உணர்ந்து அதனை வழிபடத் தொடங்கினான். அந்த ஒன்றிற்குக் 'கடவுள்' என்று பெயரிட்டான். இந்தக் கடவுளை உணரவும் உணர்ந்து அதன்வழி மனித இனத்தைப் பக்குவப்படுத்தவும், சமயம் தோன்றியது.

## 3-1-2 சமயம்—சொல்பொருள் விளக்கம்

சமயம் என்பதற்கு எல்லை, மதம், உடன்படிக்கை, தீட்சை, மரபு என்று பல பொருள்களுண்டு.[1] சமயம் என்ற சொல் 'சமை' என்பதிலிருந்து தோன்றியிருத்தல் வேண்டும். 'சமை' என்பதற்கு 'ஒழுங்குபடுத்து' என்று பொருள் கொள்ளலாம் "ஒழுங்குபடுத்தப்பட்டு நன்முறையில் வளர்ச்சி அடைந்த தெய்வநம்பிக்கையே சமயமாகும்[2] எனவே, சமயமென்பது அவனருள் பெற்று, அவனடிச் சேர ஒழுங்குபடுத்துவது - பக்குவப்படுத்துவதாகும்

சமயம் என்னும் சொல்லைக் குறிக்கும் 'ரிலிஜன்' என்ற ஆங்கிலச்சொல் 'ரிலிஜெரி' அல்லது 'ரிலிகாரி' என்னும் சொல்லில் இருந்து பிறந்திருக்கலாம் என்றும், முதலது "திரும்பத் திரும்பப் படிக்கப்பட்டுச் சிந்திக்கப்பட்டது" என்ற பொருளையும், பின்னது "கட்டுவது" என்ற பொருளையும் தருவதாக ஆக்ஸ்போர்டு புதிய ஆங்கில அகராதி கூறுகிறது.[3]

நம்மைப் பிறக்கவைத்து, வாழவைத்து, ஆட்டுவிக்கும் ஆட்டுவானைப் பற்றி சிந்திப்பதே சமயத்தின் அடிப்படை நோக்கமாகும். மனிதனுக்கும் மனித நிலைக்கு மேற்பட்டதாக உள்ள ஆற்றலுக்கும் உள்ள தொடர்பு சமயத்தில் சிந்திக்கப்படுகிறது உலகினை வழிநடத்தும் திருவருள் ஒன்று உண்டு என நம்பிக்கை வைத்து அத் திருவருளின் குறிப்பை அறிய முயல அறிந்து அதன்வழி நடத்தல் சமயமாகும். அதாவது ஒரு பெருங்குழுவினரின் திண்ணமான நம்பிக்கையாகும்.[4]

மனித இனத்தில் தெய்வநம்பிக்கையில் ஏற்பட்ட வேறு வேறு போக்குகளினால் வெவ்வேறு சமயங்கள் தோன்றலாயின சமயம் என்பது பொதுப்பெயராய் நிற்க, தாம் வணங்கும் இறைவனுக்கேற்ப பெயர்களைத் தாங்கி பல்வேறு சமயங்கள் தோன்றின. ஆறுகள் பல ஒரே கடலில் கலப்பது போன்று பல சமயங்களின் நோக்கங்களும் 'கடவுள்' என்ற ஒன்றையே குறித்து, மனித சமுதாயத்தின் உய்வினை நோக்கியே விளங்குகின்றன.

### 3-1-3 சமயம்—பயன்

மனிதனைப் பண்பாடுடையவனாக ஆக்குவது சமய மாகும். மக்களை மாக்கள் தன்மையிலிருந்து விடுவித்து அவர்கள் வாழ்வாங்கு வாழ சமயம் பெரிதும் துணை புரிகிறது. மேலும் சமயம் மனிதன் இறையருள் பெற்று அவனடி சேர அவனைப் பக்குவப்படுத்துகிறது. நடை, உடை, பாவனை, பண்பாடுகளில் மக்கள் வேறுபடுகின்றனர். ஆனால் சமயம், மத அடிப்படையில் ஒன்றுபட்டு நிற்கின்றனர். "வேறுபாடுகளின் இடையே ஒருமைப்பாட்டைக் காட்டி எல்லா மக்களையும் ஒன்றாக்குவது சமயம் ஒன்றேதான்''[5]

### 3-2 இந்துசமயம்

'சிந்து' நதிக்கரையில் வாழ்ந்த மக்கள் பாரதத்திற்கு வருகை தந்த அயல்தேசத்தவர்களால் 'இந்து' என அழைக்கப் பட்டனர்; அவ்இந்துக்களின் சமயம் இந்துசமயமானது.[6] "பிற உயிர்கள் துன்பப்படுவது கண்டால் அந்தத் துன்பம் தனக்கு வந்ததாகக் கருதுபவன் இந்து''[7] ஆவான்.

### 3-3 வைணவம்

விஷ்ணுவை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயம் வைணவமாகும். காக்கும் கடவுளாக விளங்கும் திருமால் உலகினைப் படைப்பவராகவும், யுகமுடிவில் உயிர்களை ஒடுக்குபவராகவும் விளங்குகிறார் என்பது வைணவர்களின் கொள்கை. "திருமாலை வழிபடும் சமயத்தினர் வைணவ ராவர்"[8]

விஷ்ணு என்ற சொல் 'விஷல்வ்யாப்தௌ' என்ற தாதுவிலிருந்து வந்த சொல்லாகும். விஷ்ணு என்ற சொல்லுக்கு 'எங்கும் வியாபித்துள்ளவன்' என்று பொருள்.[9]

சங்க இலக்கியத்தில் (பரிபாடல், நற்றிணை) திருமால் பற்றிய கதைகளை நேரடியாக, உவமை வாயிலாக உணர்த்தும் பாடல்களால் உள்ளதால் வைணவம் சங்க காலத்தில் சிறந்த இடம் பெற்றிருந்தது என்பது தெளிவா

கிறது இவ்வாறு தொன்றுதொட்டு தமிழகத்தில் வைணவம் ஒரு சிறந்த இடம்பெற்று நிலவி இருந்தது. இவ்வைணவத்தில் திருமாலுக்குப் பல அவதாரங்கள் படைக்கப் பெற்றன. இந்து சமயத்தில் வைணவ சமயம் இறைவனுக்கு அவதார நிலையை உண்டாக்கி, தன் கொள்கைகளை உலகில் வலியுறுத்த முனைந்தது.

## 3-4-0 அவதாரங்கள்

ஈண்டு, அவதாரம்—விளக்கம், அவதார நோக்கம், திருமால் அவதாரங்கள் அவதார வகைகள் தசாவதாரங்கள், தசாவதாரங்கள் நோக்கமும் பொருத்தமும் ஆகியன பேசப்பெறுகின்றன.

## 3-4-1 அவதாரம்—விளக்கம்

'அவதார' என்ற வடமொழிச்சொல் தமிழில் 'அவதாரம்' என்று வழங்கப்படுகிறது. அவதாரி என்ற சொல்லை 'அவ' என்றும், 'த்ரி' என்றும் பிரித்து, 'அவ' என்பதற்கு 'இறங்குதல்' என்றும், 'த்ரி' என்பதற்கு 'கடந்து செல்லுதல்' என்றும் பொருள் கொள்ளலாம்.[10] அதாவது எம்பெருமான் தமது சௌலப்ய, வாத்ஸல்யா குணங்களினால் உயிர்களை உய்விக்க பூமிக்கு இறங்கி வருதல் அவதாரமாகும்.

அவதாரங்களைப் பற்றி வேதங்களிலும் குறிப்புக்கள் காணப்படுகின்றன. "இருக்குவேதம், உலகளந்த திருவிக்கிரம அவதாரத்தைக் குறிப்பிடுகின்றது என்றும், வேதப் பகுதியான சதபதிப்பிராமணம் மச்சம், வாமனம்' வராகம் ஆகிய அவதாரங்களைக் கூறுகின்றது என்றும், யசுர் ஆரண்யகம் கூர்மத்தையும் நாராயணவல்லி வராகத்தையும் இருக்கு, யசுர் மந்திரங்களில் சில நரசிங்கத்தையும் அறிமுகப்படுத்துகின்றன என்றும், யசுர்வேதம் இராமனையும் சாந்தோக்யம் கிருஷ்ணனையும் குறிப்பாகத் தெரிவிக்கின்றன என்றும், இனி வரப்போகும் அவதாரமாகிய கல்கியைப் பற்றிய குறிப்பு தைத்திரிய உபநிடதத்தில் உள்ளது என்றும் கூறுவர்.[11]

அதாவது பரத்தில் முழுமுதற்பொருளான பரவாசு தேவன் ஸங்கர்ஷணன், வாசுதேவன், பிரத்யும்நன், அநிருத்தனாகப் பிரிந்து உலகை நடத்துகின்றான். இந்நிலையை கடல்நீருக்கு ஒப்பிடலாம்.

**விபவம்**

விபவம் என்பது திருமால் உலகினை உய்விக்க செய்தருளிய பல அவதாரங்கள் ஆகும். இவ்வதாரங்கள் முப்பதுக்கும் மேற்பட்டுள.[19]

**அந்தர்யாமி**

எல்லா உயிர்களிலும் இறைவன் உறைந்து வாழினும், தன்னையே நினைந்து உருகும் பக்தரின் மனத்தில் கோயில் கொண்டு அவர்கட்கு அவன் காட்சி தரும் அரியநிலை அந்தர்யாமியமாகும். பூமிக்குள் சுரந்திருக்கும் நீரின்நிலை இந்நிலையாகும் என்பர்.

**அர்ச்சை**

தனது பக்தர்களின் விருப்பப்படி கல்லாலோ, மண்ணாலோ, செம்பாலோ அவர்கள் செய்துவைத்த உருவத்தில் இறைவன் வந்து தங்கி அருளும் நிலை அர்ச்சை நிலையாகும். இந்நிலையில் இறைவன் எல்லோரும், எப்போதும் தன்னைக் கண்டு வழிபடும் அளவுக்கு எளியனா கின்றான்.

முழுமுதற்கடவுளாக விஷ்ணுவை வணங்கும் வைணவத்தில் அவதாரம் முக்கிய இடம் பெறுகிறது. பிறவா யாக்கைப் பெரியோனை வணங்கும் சைவசமயத்தைத் தவிர பௌத்த, சமண, கிறித்துவ சமயங்களும் அவதாரக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருக்கின்றன.

### 3-4-2 அவதார நோக்கம்

இறைவன் உயிர்களின் மீதுள்ள கருணையாலும், தருமம் தலைசாயும் நேரத்தில் அதனை நிலைநிறுத்த வேண்டியும்,

உலகம் மேலும் மேலும் உயர்ந்து முழுநலம் அடையவும் அவதாரம் செய்கின்றான். "நல்லோரைக் காக்கவும், தீயோரைத் தண்டிக்கவும், தருமத்தை நிலை நாட்டவும் நான் யுகந்தோறும் பிறக்கிறேன்" என்று கீதை அவதார நோக்கத்தைத் தெளிவுறுத்துகிறது. காலத்தின் இயல்பிற்கும் மனிதனுடைய போக்கிற்கும் ஏற்றவாறு புதிய நெறிகளைக் காட்டி மக்களை உய்வித்தல் அவதார நோக்கம் எனலாம்.

## 3-3-4 திருமால் அவதாரம்

எம்பெருமானுடைய நிலைகள் ஐந்து. அவை பரம், வ்யூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை ஆகியன. இவ் வைந்தும் அவதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

### பரம்

நீளாதேவி, திருமகள், மண்மகளுடன் வைகுந்தத்தில் இருக்குமோர் அரியநிலை பரத்துவ நிலையாகும்.

### வ்யூகம்

வ்யூகம் என்பது பிரிந்து நிற்றலைக் குறிக்கும்.

## 3-4-4 அவதார வகைகள்

ஐந்து நிலைகளாக உள்ள இறைவன் (திருமால்) கொள்ளுகின்ற அவதாரங்கள் மூன்று வகைப்படும். அவை பூரண அவதாரம், ஆவேச அவதாரம், அம்சாவதாரம் ஆகியன.

### பூரண அவதாரம்

எம்பெருமான் தானே, தன் முழுசக்தியுடன் சோதி உருவை வைகுந்தத்தில் விட்டுவிட்டு இப்பூவுலகில் பிறவி எடுப்பது இவ்வவதாரமாகும். இராமன், கண்ணன் அவதாரங்களை இந்நிலையில் உள்ளடக்கலாம்.

### ஆவேச அவதாரம்

திருமால் ஓர் உருவில் தனது ஓரளவு சக்தியை மட்டும் ஒரு குறிக்கோளிற்காக ஓர் உருவில் தற்காலிகமாகப் புகச் செய்வது ஆவேச அவதாரமாகும். திருமாலின் பரசுராம அவதாரம் ஆவேச அவதாரம் ஆகும்

### அம்ச அவதாரம்

திருமாலின் அம்சங்களாகத் திகழும் சங்கு, சக்கரம், வில் முதலிய அவனது திவ்யாயுதங்கள் மானிடரை உய்விக்க எம்பெருமான் கட்டளைப்படி மனிதரிடையே தோன்றுவது அம்சாவதாரமாகும். இருடிசுகள், மனுக்கள், தேவர்கள், மனுவின் புத்திரர்கள் அனைவரும் திருமாலின் அம்ச அவதாரமாவார்கள். ஆழ்வார்கள் அனைவரையும் அம்சாவதாரமாகக் கொள்ளலாம். "ஸஜாதீயர்களைக் கொண்டே இந்த ஸம்ஸாரிகளைத் திருத்தி வசப்படுத்திக் கொள்ள வேணுமென்று துணிந்து இந்நிலவுகில் பல வ்யக்திகளிடத்திலே விசேஷ கடாக்ஷம் செய்தருளினான். அவர்களே ஆழ்வார்கள் ஆசாரியர்கள் எனப்படுகிறார்கள்[13] என்பர் வைணவப் பெரியோர் அண்ணங்கராசாரியர் அவர்கள்.

### 3-4-5 தசாவதாரங்கள்

திருமாலின் பத்து அவதாரங்களை மூன்று நிலைகளில் அடக்குவர். விலங்குநிலை ஒன்று. மற்றவை விலங்கும் மனிதனும் கலந்த ஒருநிலை. மனிதநிலை மற்றொன்று. திருமாலின் பத்து அவதாரங்களும் பரிணாமத்தின் முக்கியப் படிகளை உணர்த்துகின்றன. மீன், ஆமை, பன்றி வடிவங்கள் மனித இயற்கையினும் தாழ்ந்த விலங்கு தன்மையைக் குறிக்கின்றன. நரசிம்ம அவதாரம் விலங்குலகு மனித உலகுக்கு மாறுவதையும், வாமனாவதாரம், மனித இயற்கை முழுவளர்ச்சி அடையாதிருந்த நிலையையும் குறிக்கின்றன. பரசுராம அவதாரம் மனிதன் வளர்ச்சி அடையாத ஒரு

நிலையில், கொடிய விலங்குத் தன்மையதானப் பழிவாங்கும் நாகரிகம் அற்ற நிலையில் இருந்ததைக் குறிக்கின்றது. இராமாவதாரம் தூய நற்குணம் நிரம்பிய மக்கட்பண்பின் நிலையினை உணர்த்துகின்றது. இச்சைசெபான்றும் கொள்ளாமல் உலகிலுள்ள தீயசக்திகளுடன் போராடி மனிதன் தெய்வநிலைக்கு உயர்வதை கிருஷ்ணாவதாரம் உணர்த்துகின்றது. எல்லா உயிர்களிடமும் இரக்கம் வேண்டும் என்பதை, தீமையை, ஒழுங்கின்மையை வெட்டி வீழ்த்தப் போவதை வாளோடு தோன்றும் கல்கியவதாரம் உணர்த்துகின்றது.[14]

## 3-4-6 தசாவதார நோக்கமும், பொருத்தமும்

பொதுவாக இறைவனது அவதாரங்கள் உலக உயிர்களை உய்விக்கும் நோக்கமுடையனவாயினும், அவை தம்தம் நிலையில் சிறப்பும், பொருத்தமும் உடையனவாய் அமைந்து உள்ளன.

### மச்சஅவதாரம்

மச்சஅவதாரத்தின் நோக்கம் ஹயக்கிரீவனால் கவர்ந்துச் செல்லப்பட்டு கடலுக்கடியில் மறைக்கப்பட்ட வேதங்களை மீட்டு, உயிர்களுக்கு உணரவைத்து அவர்களை உய்வித்த லாகும். திருமால் அவ்வேதங்களை மீட்கும் செயல்புரிய நீருக்குள் வாழும் இயல்புடையதாய், விரைந்து செல்லும் ஆற்றலுடையதாய் விளங்கும் மீனாக அவதரித்தது பொருத்தமேயாகும்.

### கூர்மஅவதாரம்

மந்திரகிரிமலை மத்தாகிய நிலையில் கடலில் அமிழ்ந்து போகாது தாங்கும் நோக்கத்தில் அச்செயலுக்குப் பொருத்த மான கூர்ம அவதாரத்தினைத் திருமால் மேற்கொண்டார். இவ்வதாரத்தால் பரம்பொருள் உலக உயிர்காக்க இழிந்த பிறவி எடுக்கவும் பின்வாங்கவில்லை என்ற செய்தி தெரிகிறது.

## வராகஅவதாரம்

கடலுள் மூழ்கிக்கிடக்கும் பூமியை வெளிக்கொணரும் பொருட்டு, திருமால் இவ்வதாரம் செய்தார். கடலுள் மூழ்கியுள்ள பூமியைக் கிளர்ந்து எடுத்தலுக்கு ஏற்றதாக, கோடுகளுடைய வராகமாக அவர் அவதரித்தது சாலப் பொருத்தமே.

## நரசிம்ம அவதாரம்

"தன் பக்தரை எவ்வழியும் பரம்பொருள் காக்கும்" என்பதை உணர்த்துவதாய் நரசிம்ம அவதாரம் விளங்குகிறது. இரணியனின் வரத்திற்கப்பாற்பட்ட ஓர் உருவில் அவனை அழிக்க வேண்டித் திருமால் நரசிங்கமாக அவதரித்தார்.

## வாமன அவதாரம்

'யான், எனது' எனும் அகப்பற்று. புறப்பற்றுகளை நீக்கி, உயிர்கள் வாழ வேண்டும் என்பதை உணர்த்தும் நோக்க முடையது வாமன அவதாரமாகும். 'யகன்' என்னும் செருக்குற்ற, மாவலியை அடக்கு முகமாகத் திருமால் தன்னை மறைத்த நிலையில் வாமனனாக அவதாரம் செய்தார்.

## பரசுராம அவதாரம்

உலகத்தில் தீமையை ஒழித்து. உலக பாரத்தைக் குறைத்து உய்வித்தல் இவ்வவதாரத்தின் நோக்கமாகும். இச்செயலுக்கேற்றவாறு, கோபமும். ஆவேசமும் மிக்க பரசுராமராகத் திருமால் அவதரித்தார்.

## இராம அவதாரம்

தருமத்தை நிலைநாட்டுதலும், அபயம் புகுந்தவரை ஆதரித்தலும் இவ்வவதாரத்தின் நோக்கங்களாகும்.

### கிருஷ்ண அவதாரம்

சேவையே வாழ்க்கையின் இலட்சியம் என்பதை உணர்த்தும் நோக்கத்தை நிறைவு செய்யப் பொருத்தமானதாக கிருஷ்ணாவதாரம் அமைந்துள்ளது.

### கல்கி அவதாரம்

கல்கி அவதாரத்தில் திருமால் உலகத் தீமைகளை வெட்டி வீழ்த்தும் நோக்கத்திற்கேற்ப வாளோடு அவதரிக்கின்றான்.

## 3-5-0 திருமங்கை பாசுரங்களில் இடம்பெறும் திருமால் அவதாரங்கள்

திருமங்கையாழ்வார் பாசுரங்களில் விபவதாரங்களில் சிறப்பாக தசாவதாரங்கள் பத்தும், அன்னவதாரம், பரிமுக அவதாரங்களும் இடம் பெற்றுள்ளன. மேலும் இவ்வாழ்வார் சென்று தரிசித்து ஆழங்கால்பட்ட திருப்பிருதி முதற்கொண்டு திருக்கோட்டியூர் ஈறான வைணவத் திருத்தலங்களில் எழுந்தருளியுள்ள எம்பெருமானின் அர்ச்சை வடிவங்களும் இடம் பெறுகின்றன. திருப்பாற்கடலில் வாசுதேவன் ஸங்கர்ஷணன், அநிருத்தன், ப்ரத்யும்ணன் என நான்காகப் பிரிந்து காணப்படும் திருமாலின் வியூகநிலையையும், இவ்வாழ்வார் பாசுரங்களில் காணலாம் எம்பெருமானின் பரத்துவநிலையும் ஆழ்வார் பாசுரங்களில் பேசப்பெறுகிறது.

வைணவ சமயத்தில் திருமாலுக்குரிய ஐந்து நிலைகளாகிய பரம், வியூகம், விபவம் அந்தர்யாமி, அர்ச்சை ஆகியவை திருமங்கையாழ்வார் பாசுரங்களில் அமைந்துள்ளமையைப் பொறித்துக் காட்ட இவ்வியல் முயல்கிறது. இந்நான்கில் வைணவத்தில் சிறப்பாகக் கருதப்படும் விபவம், அர்ச்சை நிலைகள் மிளிர்கின்றமையை ஈண்டு விளங்கக் காணலாம்.

### 3-5-1-0 விபவ அவதாரங்கள்

திருமங்கை பாசுரங்களில் விபவ அவதாரங்களுள் தசாவதாரங்கள் சிறப்பானதொரு இடம் பெற, அன்னம், பரிமுக அவதாரங்களும் இடம்பெறுகின்றன.

### 3-5-1-1 மச்சாவதாரம்

ஹயக்கிரீவனால் கவர்ந்துச் செல்லப்பட்டு, கடலுக்கடியில் மறைக்கப்பட்ட வேதங்களை மீட்பது மச்சாவதாரமாகும்.

இவ்வவதாரம் பற்றி ஆழ்வார் திருமங்கை,

''வானோர் அளவும் முதுமுந்நீர்
வளர்ந்த காலம் வலியுருவில்
மீனாய் வந்து வியந்துய்யக்
கொண்ட தண்தா மரைக்கண்ணன்''

"நிலையிட மெங்கு மின்றி நெடுவெள்ளம் உம்பர்
வளநாடு மூட இமையோர்
'தலையிட மற்றெ மக்கோர் சரணில்லை' என்ன
அரணாவன் என்னும் அருளால்
அலைகடல் நீர்கு ழம்ப அகடாட ஓடி
அகல்வா னுரிஞ்ச முதுகில்
மலைகளை மீது கொண்டு வருமீனை மாலை
மறவா திறைஞ்செ னனமே!"
''அன்னத்தை மீனை அரியை அருமறையை"[15]

எனப் பலவாறு பாடிப் பரவசமுறுகிறார்.

### 3-5-1-2 கூர்மஅவதாரம்

பாற்கடல் கடைகையில்—மந்திரகிரிமலை மத்தாகிய நிலையில் கடலில் அமிழ்ந்து போகாது தாங்கும் நோக்கத்தில் நிகழ்ந்தது இவ்வவதாரமாகும்.

ஆழ்வார் தனது பக்தி கலந்த கவிதைத்திறத்தால் இறைவன் பாற்கடலைக் கடையும்போது ஆமையாக அவதரித்து, காத்தருளியமையை அப்படியே தன்கண்முன் நிகழ்வதாகக் கண்டு களிக்கிறார். நமக்கும் அப்படியே அக்காட்சியைக் கண்முன் காட்டிச் செல்கிறார்.

''செருமிகு வாளெ யிற்ற அரவொன்று சுற்றித்
திசைமண்ணும் விண்ணு முடனே
வெருவர வெள்ளை வெள்ளம் முழுதும் குழம்ப,
இமையோர்கள் நின்று கடைய
பருவரை யொன்று நின்று முதுகிற் பரந்து
சுழலக் கிடந்து துயிலும்
அருவரை யன்ன தன்மை அடலாமை யான
திருமால் நமக்கொ ரரணே."

"மலங்கு விலங்கு நெடுவெள்ளம்
மறுக, அங்கோர் வரைநட்டு
இலங்கு சோதி யாரமுதம்
எய்து மளவோர் ஆமையாய்
விலங்குல் திரியத் தடங்கடலுள்
சமந்து கிடந்த வித்தகனை
கலங்கல் முந்நீர்க் கண்ணபுரத்து
அடியேன் கண்டு கொண்டேனே"

"நீணாகம்சுற்றி நெடுவரைநட்டு ஆழ்கடலைப்
பேணான் கடைந்தமுதம் கொண்டுகந்த பெம்மானை"

"பெருவடிவில் கடலமுதம் கொண்ட காலம்"

"அலைகடலைக் கடைந்தடைத்த அம்மான்"

''ஆராத பேரில் அசுரர்களும் தானுமாய்
காரார் வரைநட்டு நாகம் கயிறாக
பேராமல் தாங்கிக் கடைந்தான்''

"மன்னும் வடமலையை மத்தாக மாசுணத்தால்
மின்னும் இருசுடரும் விண்ணும் பிறங்கொளியும்
தன்னின் உடனே சுழல மலைதிரித்து ஆங்கு
இன்அமுதம் வானவரை யூட்டி அவருடைய
மன்னும் துயர்கடிந்த வள்ளலை"[16]

## 3-5-1-3 வராக அவதாரம்

பூமியினைப் பாய்போல் சுருட்டி கடலுக்குள் ஒளித்து வைத்திருந்த இரண்யகசிபுவை அழித்து, பூமியினைத் தன் கோரப்பற்களால் திருமால் வெளிக் கொணர்வது வராக அவதாரமாகும்.

வராகம் என்ற வடமொழிச்சொல்லை, அறிஞர் அக்ரவாலா 'வர', 'அக' எனப் பிரித்து குற்றல் விதியைக் குறிப்பதாகப் பொருள் கொள்கிறார்.[17] ஏனம், பன்றி, கேழல் ஆகியன வராகம் என்பதன் தமிழ்ப் பெயர்களாகும்.

திருவேங்கடமலையில் இறைவனாகிய திருமால் ஆதியில் வராகமூர்த்தியாகவே எழுந்தருளியதாகச் செய்தி உண்டு. பின்னர் தான் திருவேங்கடவனாக அருள் செய்ததாகக் கூறுவர்.[18]

இவ்வவதாரம் பற்றிய ஆழ்வார் திருமங்கையாரின் பாசுரங்கள் எண்ணி எண்ணி பக்தி வெள்ளத்தில் உயிர்களை மூழ்கச் செய்து பரவசப்படுத்திவிடுகின்றன என்றால் அது மிகையாகாது.

"ஏனம்முன் ஆகி இருநில மிடந்தன்"

"வெம்பும் சினத்துப் புனக்கேழ லொன்றாய்
விரிநீர் முதுவெள்ளம் உள்புக் கழுந்த
வம்புண் பொழில்சூழ் உலகன் றெடுத்தான்"

"சிலம்பினிடைச் சிறுபரல்போல் பெரிய மேரு
திருக்குளம்பில் கணகணப்பத் திருஆ காரம்
குலுங்கநில மடந்தைதனை யிடந்து புல்கிக்
கோட்டிடைவைத் தருளியஎங் கோமான் கண்டீர்"

"வாரா கமதாகி யிம்மண்ணை யிடந்தாய் "

"பண்டுமுன் ஏன மாகியன் றொருகால்
பாரிடந் தெயிற்றினில் கொண்டு"

"......கேழலாய் உலகை
இடந்த நம்பி"

"இடந்தான் வையம் கேழலாகி"

"புள்ளாய் ஏனமுமாய்ப் புகுந்து"

"ஆதிவ ராகமுன் னானாய்"

"சிலம்புமுதல் கலனணிந்தோர் செங்கண் குன்றம்
திகழ்ந்ததெனத் திருவுருவம் பன்றி யாகி
இலங்குபுவி மடந்தைதனை யிடந்து புல்கி
எயிற்றிடைவைத் தருளியஎம் ஈசன்"

"பாரைப் பிளந்த பரமன்"

"வென்றிசேர் திண்மை விலங்கல்மா மேனி
வெள்ளெயிற் றொள்ளெரித் தறுகண்
பன்றியாய் அன்று பார்மகள் பயலை
தீர்த்தவன்"

"தீதறு திங்கள் பொங்கி சுடரும்பர் உம்பர்
உலகேழி னோடு முடனே
மாதிர மண்சு மந்து வடகுன்று நின்ற
மலையாறும் ஏழு கடலும்
பாதமர் சூழ்கு ளம்பி னகமண்ட லத்தி
னொருபா லொடுங்க வளர்சேர்
ஆதிமுன் ஏன மாகி அரணாய மூர்த்தி"[19]

இவ்வாறே பெரியதிருமடல், குறுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, திருநெடுந்தாண்டகம் முதலிய ஆழ்வாரின் பிற—பெரிய திருமொழி அல்லாத பக்திபடைப்புக்களிலும் இவ்வவதாரம் பற்றிய செய்திகள் காணப்பெறுகின்றன [10]

### 3-5-1-4 நரசிம்ம அவதாரம்

மால் தனது பக்தன் பிரகலாதனுக்காக—அசுரன் இரணியனை அழித்து, தருமத்தைக் காத்தது இவ்வவதார மாகும். பாதி நரனாகவும், மறுபாதி சிம்மமாகவும் கூடிய உருவத்துடன் உக்கிர மூர்த்தியாய் இறைவன் வெளிப்பட்டு இரணியனை வதைத்ததால் இவ்வவதாரத்திற்கு இப்பெயர் வழங்கப்பெறுகின்றது

அசுரன் இரணியன்—மால் பக்தன் பிரகலாதனது தந்தை. தனது மகனுக்குச் சொல்லொணாத் துயரங்களைத் தருகிறான். ஆனால் பிரகலாதனின் பக்தித் திறத்தால் தந்தையால் விளைந்த துயரங்கள்—துன்பங்கள் செயலற்றுப் போய்விட்டன. ஒருநாள் தந்தைக்கும் மகனுக்குமிடையில் சூடான வாதம். 'எங்கும் நாராயணன் இருக்கிறான்' எனத் தனது பக்திச்சீர் விளங்க உறுதிபட பேசிய மகனிடம், 'அவன் இத்தூணிலும் இருக்கிறான்' என்ற அவனது உறுதி வாக்கினை—உடைத்தெறியும் முயற்சியில் அசுரன் தூணைப் பிளக்கிறான்; ஹரி நரசிங்கனாக ருத்ரமூர்த்தியாய் தூணிலிருந்து வெளிப்படுகிறான்; தனது வள்ளுகிரால் அசுரனது மார்பினைப் பிளந்து உயிரைப் பருகுகின்றான்; தனது பக்தனின் வாக்கினைக் காப்பாற்றுகிறான் பக்தனுக்கருளி மகிழ்கிறான்.

எம்பிரான் நரசிங்க உருவினனாய், தூணிலிருந்து வெளிப் படுகிறான். அப்போதை அவனது திருஉருவின் நிலையை ஆழ்வார், "பிறைபோன்று வளைந்திருக்கும் பற்கள்; விழிகளிலோ அனல் பறக்கிறது; அவனது வாயோ பேழ் வாயாய் அச்சமூட்டுகிறது" என்று வருணித்துப் பாடுகிறார்.

"பள்ளியில் ஓதி வந்ததன் சிறுவன்
வாயில்ஓர் ஆயிர நாமம்
ஒள்ளிய வாகிப் போதஆங் கதனுக்
கொன்றுமோர் பொறுப்பில னாகி
பிள்ளையைச் சீறி வெகுண்டுதூண் புடைப்ப,
பிறையெயிற் றனல்விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்க மாகிய தேவைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே"

"பிறையெயிற்றன்"

"பைங்கண் இரண்டெரி கான்ற நீண்ட எயிற்றோடு பேழ்வாய்
சிங்க உருவில் வருவான்"[21]

நரசிங்கனது இத்தகைய கோரஉருவினைக் கண்டவர்கள் அனைவரும் அச்சம் கொண்டனராம். ஞாலம் அஞ்சுகிறது; மூவுலகும் பிறவும் அஞ்சுகின்றன. திசைகள் நடுங்குகின்றன. தேவர்களோடு தானவர்கள் திகைக்கின்றனர்[22] என்கின்றார் ஆழ்வார் திருமங்கை.

மேலும் அவனது நரசிம்ம உருவினைக் கண்ட பிரம்மனும், சிவனும் வியக்கின்றனர்; மூவுலகினர் அவ்வுருவின் திண்மையைக் கண்டு—கடல்போல் முழங்கி அவனது அவதாரத் திருவுருவைக் கண்குளிரக் காணப்பெற்றமையால் உளம் குளிர்ந்து அவனை வணங்குகின்றனராம்.[23]

மால் நரசிங்கனாய் வந்து இரணியனைக் கொன்று தனது பக்தன் பிரகலாதனுக்குத் திருவருள் தந்து அருள்பாலித் தமையை ஆழ்வார்,

"...குலமகற் கின்னருள்
கொடுத்தவன்"

"...தன் மகனுக்
கருள்செய்தான்"[24]

என்று பாடி பரவசமுறுகிறார்.

இறைவன் தனது பக்தர்க்குத் தீங்கிழைப்பவரை வதைத்தல் மூலம் தனது பக்தர்க்குத் திருவருள் செய்தவனாகிறான் என்கிறார். இறைவனது இயற்கை இயல்பே இது என்பதுபோல் பேசிச் செல்கிறார் தனைப் பழித்தாலும்—தாயைப் பழித்தாரை விடாத தனித்தன்மை இறைவனுக்கு உண்டு எனக் கூறாது கூறிச் செல்கிறார். (தாய்—தன் பக்தர்கள்)

மால், தனது பக்தன் பிரகலாதனுக்கு அசுரன் இரணியன் தந்து வந்த துன்பங்களை எல்லாம் தொலைத்துக் கொண்டிருந்தான்; பக்தனுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைப் பக்தனின் தந்தை அரக்கன் என்பதால் ஓரளவு பொறுத்துக் கொண்டு இருந்தான். ஆனால் பிள்ளைப் பாசம் சிறிதுமின்றி, பேயாட்டம் போட்டுக் கொண்டிருந்த இரணியன், தனது பக்தனையே கேலிப் பொருளாக்கி, பக்தனின் உள்ளத்தில் கனன்று கொண்டிருக்கும் தெய்வத்தின் தன்மையினை—மூலத்தை—நம்பிக்கையின்றி –நகைப்புடன் ஆராய முயன்று—அதனால் பக்தனின் ஆன்மாவினையே நோகச் செய்து—பக்தனின் வாக்கினைப் பொய்யாக்கி – அவனை அவமானித்திட முயலுகையில் இறைவன் மேலும் தரியாதவனாக, பொறுக்காதவனாகத் தூணில் இருந்து வெளிப்படுகிறான்; அசுரனை ஒறுக்கிறான். இதனை ஆழ்வார்,

"..........தரியாதன் றிரணியனைப்
பிளந்தவனை"[25]

எனப் பாடி மகிழ்கிறார்.

நரசிங்கன், அசுரனது மார்வகம் பிளந்து உயிரைக் கவர்கிறான். அவனை வதைத்தழிக்கிறான். பொன்மலை ஒன்று பிளந்து அருவியொன்று இழிவதுபோல் இரணியனது மார்பிலிருந்து வழியும் குருதி பாய்கிறதாம்.[26] நரசிங்கன் கருநிறத்தனாயிருக்க, இரணியனோ பொன்மேனியன்; மலை போன்றவனாயிருந்தான் என்கிறார் ஆழ்வார்,

இரணியனது தீமை அதிகமாக—அதர்மம் தழைத்தோங்க தேவர்கள் அனைவரும் தம்மைக் காத்தருளுமாறு நாராயணனைச் சரணடைந்தனர். அவர்களது சரணா கதியை ஏற்று, அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்ட இறைவன் நரசிங்கனாய் அவதரித்தான் என்கிறார்.

"தளர்ந்திட் டிமையோர் சரண்தா வெனத்தான் சரணாய்"[37]

கிணற்றில் விழுந்த தன் குழவியைக் காக்க தாயும் கிணற்றில் குதித்ததைப்போல—வல்லவனுக்கு வல்லவன் வையகத்திலுண்டு என்பதற்கு இணங்க—தனது பக்தன் பிரகலாதனுக்காகத் தூணிலிருந்து வெளிப்பட்டு, தர்மத்தை நிலைநிறுத்த—இரணியனுடன்—பெருவலியுடன், அவனது கடுந்தவத்தால் கோரிபெற்ற வரங்கள் யாவும் பயனற்று போக—தகுந்த ரூபத்துடன், தகுந்தகால, நேர, கருவியுடன் தனது செயலைச் செவ்வனே செய்து முடிக்கிறான் பரம் பொருள், ஈண்டு இரணியனை,

"பருவரைத்தோள் இரணியன்"[38]

என ஆழ்வார் கேலி பேசி நகைக்கின்றார்; பரம்பொருளின் எல்லையற்ற கல்யாண திருக்குணங்களை எண்ணிப் பார்க் கிறார்.

திருக்குறுந்தாண்டகம் பெரியதிருமடல், சிறிய திருமடல் ஆகிய ஆழ்வார் படைப்புக்களிலும் இவ்வதாரம் பற்றிய குறிப்புக்கள் ஆங்காங்கு காணப்பெறுகின்றன.[39]

நரசிம்மம் இரணியனோடு போரிடுகிறது; அவனது ஆகத்தை தனது கூர்மையான திருநகங்களால் கீண்டு, அவனது குடலை மாலையாகத் தனது மார்பிலிட்டு, ஆர்ப்பரித்து எழுகின்றது. இக்காட்சியை, ஆழ்வார் படிப்போர் உள்ளம், உடல் புல்லரிக்குமாறு கீழ்வருமாறு பாடிப் பரவசப்படு கிறார்.

''போரார் நெடுவேலோன் பொன்பெயரோன் ஆகத்தை
கூரார்ந்த வள்ளுகிரால் கீண்டு—குடல்மாலை
சீரார் திருமார்பின் மேல்கட்டி செங்குருதி
சோரக் கிடந்தானைக் குங்குமத் தோள்கொட்டி
ஆரா எழுந்தான் அரியுருவாய்''[30]

இவ்வாறு தூணிலிருந்து உக்ரமாய் வெளிவந்த நரசிம்மம் இரணியனது மார்பினைப் பிளந்து இரத்தம் குடித்து, இரத்த வெறியில் உலகை அழிக்க ஒருப்பட, தேவர்கள் வேண்டிய வாறு தாயார் லட்சுமிதேவி நரசிம்மத்தை வேண்ட, நரசிம்மம் தன் கோபநிலை மாறி, சாந்தமுற்று மாயவனாகிய விஷ்ணுவாய் காட்சி தந்தது என்பர் வைணவர். ஆனால் சைவர்கள் சிவனைத் தேவர்கள் வேண்ட, அவன் நரசிம்மத்தின் கொட்டமடக்கியதாய்க் கூறுவர்.[31]

### 3-5-1-5 வாமன அவதாரம்

'யான்' என்று இறுமாந்திருந்த மாவலியின் செருக்கை அழிக்க மால் குறள் வடிவினாக அவதரித்து அவனிடம் மூவடிமண் இரந்து பெற்று, ஓங்கி வளர்ந்து, திருவிக்கிரம வடிவுடன், ஓரடியால் வான் முழுதையும், மற்றொரு அடியால் பூமியையும் அளந்து, தன் மூன்றாம் அடியை மாவலியின் சிரசின்மீது வைத்து அவனை ஆட்கொண்டு அருளியது வாமன அவதாரமாகும்.

வாமனன் என்ற சொல் 'குறுகியவன்', 'அழகியவன்' என்ற பொருள்களை உணர்த்துகிறது.[32]

திருமங்கை பாசுரங்களில் வாமனவதாரம் பற்றிய குறிப்புக்கள் ஆங்காங்குக் காணப்பெறுகின்றன.[33]

"சான்றாக,
தூய வரியுருவிற்
குறளாய்ச் சென்று, மா வலியை
ஏயா னிரப்ப மூவடிமண்

இன்றேதா என் றுலகேழும்
 தாயான்"

"வன்கை யான்அவ ணர்க்கு நாயகன்
 வேள்வியில்சென்று, மாணியாய்
மண்கை யால்இரந் தான்"

"...குறளாய் நிலமீ ரடியாலே"

"...மண்குகன்
 ஆன அந்தணறு"

"குற ளாகிநி மிர்ந்தவன்"

"வந்து குறளுரு வாய்நிமிர்ந்து
 மாவலி வேள்வியில் மண்ணளந்த
அந்தணர்"

"இலகிய நீண்முடி மாவலிதன்
 பெருவேள்வியில் மாணுரு வாய்முனாள்
சலமொடு மாநிலங் கொண்டவன்"[84]

எம்பிரான் ஸ்வாமித்துவம் முதலான திருக்கல்யாண குணத்தினன்; முழுமுதற் பொருளானவன்; சிவன் முதலான தேவர்கட்கும் காரணகாரியன்; அறிவதற்கரியன். இத்தனை மேலான மால்—அவனைக் காண்பதற்கு வழியிலாதவர்கள் அவனை மிகவும் எளிதாகக் காணுமாறு—இன்றேனும் இவனை இந்த ரூபத்திலாவது கண்டோமே என மிகவும் மகிழ்கின்றனர். மாவலி விஷ்ணு பக்தன் பிரகலாதன் வழியினனானாலும், அவனது அரக்கக்குணமும், அனைத்தையும் தனதாக்கிக்கொள்ளும் பேராசைத் தன்மையும் அழியுமாறு மால் சின்னஞ்சிறு வாமனனாக வந்து அவனை ஆட்கொண்டதால் மாவலியின் செயல்களால் பாதிக்கப்பட்ட இந்திரன் முதலிய தேவர்கள் அவனது உருவைக்கண்டு, அவனது செயலைக் கண்டு மிக்கு மகிழ்ந்தனராம். இதனை ஆழ்வார் திருமங்கையார்,

"கண்டவர்தம் மனம்மகிழ மாவலிதன் வேள்விப்
களவில்மிகு சிறுகுறளாய் மூவடியென் றிரந்திட்டு
அண்டமும்இவ்வ லைகடலும் அவனிகளும் எல்லாம்
அளந்தபிரான் அமருமிடம்"[35]

எனத் தனைமறந்து பாடுகிறார்

இறைவன் அன்பெனும் பிடிக்கும் அகப்படும் மலை, பக்திக்கு அடங்கும் பேரலை. தனக்குத் தீங்கிழைத்தாலும், தனது அடியார்க்குத் தீங்கிழைத்தால் பொறுக்காதவனாய், நரசிங்கனாய், தனது அடியவன் பிரகலாதனின் வார்த்தைக் காக தூணில் வெளிப்பட்டு பகைவன் இரணியனை அழித்தான். பகைவர்களைப் பந்தாடும் பரந்தாமனின் பக்தியால் கட்டுண்டு விடுகின்றனர். பிரகலாதாழ்வார் வழிவந்த மாவலியும் மால் பக்தனாயிருக்க எம்பிரானுக்கு இக்கட்டான நிலை. தருமத்தைக் காக்கவேண்டும்; அதர்மத்தை ஒடுக்க வேண்டும் எனும் அடிப்படையில் நிகழும் அவதாரம் ஈண்டு மாவலியின் ரூபத்தில் மாயவனை மயங்க வைக்கிறது; குழப்புகிறது. தான் பெற்ற பிள்ளையை ஒறுக்கும் நிலை வந்தால் அத்தாயின் உணர்வுகளின் நிலை என்னவோ அப்படிப்பட்டதொரு நிலை.

ஆக, இறைவன் இதுவரை இல்லாது தனது கள்ளத் தனத்தைத் தனது செயலுக்குத் துணைக்கழைத்துக்கொண்டு செயலாற்ற முனைகிறான். தனது திவ்ய சொரூபம் மறைத்து, குள்ள வாமனனாக வருகிறான். கள்ளமாய் வந்து கபடமாம் மூவடிமண் மாவலியிடம் கேட்கிறான். தனது பக்தனின் பக்திக்குப் பயந்து தனது ஸ்வாமித்துவம் தடுமாற, மாவலிடம் இரக்கிறான், இதனை, இறைவனின் இத்தகைய கள்ளத் தனத்தை ஆழ்வார்,

"கள்ளத்தால் மாவலியை மூவடிமண் கொண்டளந்தான்"[36]
"...மாவலியை வஞ்சித்து
தன்னுலகம் ஆக்குவித்த தாளானை"[37]

எனப் பாடிக் களிக்கிறார்.

ஆழ்வாரின் திருவெழுகூற்றிருக்கை, பெரியதிருமடல், சிறியதிருமடல், நெடுந்தாண்டகம், பாசுர வரிகளிலும் இவ்வவதாரம் பற்றிய குறிப்புக்களை ஆங்காங்குக் காணலாம்.[38]

### 3-5-1-6 பரசுராம அவதாரம்

பரசுராமர் தன் மழுவினால் இருபத்தோரு அரச வம்சத்தினரை அழித்தமையை ஆழ்வார் ஆங்காங்குப் பாடிச் செல்கிறார்.[39]

பரசுராமர் இருபத்தொரு அரச வம்சத்தினரைத் தனது மழுவாயுதத்தால் அழித்து, அவர்தம் குருதிப்புனலுள் குளித்து, அரச வம்சத்தின்மீது தனக்கிருந்த கோபம் தவிர்த்தார் என்கிறார் ஆழ்வார்.

> ''மழுவினால் அவனி அரசைமூ வெழுகால்
> மணிமுடி பொடிபடுத்து உதிரக்
> குழுவுவார் புனலுள் குளித்துவெங் கோபம்
> தவிர்ந்தவன்"[40]

பரசுராமர் கார்த்தவீரியார்ச்சுனனை அழித்தமையைப் பெரிய திருமொழியில் இருவேறு இடங்களில் குறித்துச் செல்கிறார் ஆழ்வார்.[41]

பரசுராமரின் கையில் உள்ள மழுவானது இருபத்தொரு அரச வம்சத்தவரைக் கொன்றது; வெற்றியைத் தவிர ஏதுமறியாது என்பதால், ஆழ்வார் அதனை,

> ''...கொலையார்மழு"
> ''வென்றி மாமழு"[42]

என்று குறிக்கிறார்.

சடைமுடி தரித்தவராய், கையில் மழுவேந்தி தலைவனாய் விளங்கும் திருவுருவினன் பரசுராமர் என்கிறார்.

''வளர்மதி பொதியும் சடை'மழுவாளியொ டொருபால் ளாகிய தலைவன்''[43]

பெரியதிருமொழியில் ஆங்காங்கும், நெடுந்தாண்டகத் திலும் ஆழ்வார் இவ்வவதாரம் பற்றிப் பேசிச் செல்கிறார்.[44]

### 3-5-1-7 இராமாவதாரம்

ஆழ்வார் பாசுரங்களுள் விபவ அவதாரத்துள் இராம, கிருஷ்ண அவதாரங்களை அதிகமாகவும், வாமன, நரசிம்ம, வராக அவதாரங்கள் அவற்றுக்கு அடுத்துக் குறைவாகவும் குறிப்பிடப்பெற்றுள. திருமங்கை ஆழ்வாரும் இதற்கு விதிவிலக்கல்லர் முன்னவை பூரண அவதாரங்களாய் மக்களிடையே தோன்றி அதிக கால அளவு பழகின. இதனால் இறைவனின் மங்கள குணங்களை மக்கள் அனுபவிப்பதற்கு வாய்ப்புகள் மிக்கிருந்தன ஆகவே, ஆழ்வார்களும் அதிகமாக இவ் அவதாரங்களில் ஈடுபட்டு பேசுகின்றனர்.[45]

ஆழ்வார் பூரண அவதாரமான இராம அவதாரத்தில் மிகவும் ஆழங்கால்படுகிறார். இராமனது வாழ்க்கை நிகழ்ச்சி களில் அப்படியே ஆழ்ந்து அவற்றை அப்படியே நம் கண்முன் படம் பிடித்துக் காட்டுகிறார். இராம அவதார நிகழ்ச்சிகள் முழுமையும் தமது பாசுரங்களில் பாடி மகிழ்கிறார் இராம அவதார நிகழ்ச்சிகளைப் பரக்கப் பேசிவரும் ஆழ்வார், தோல்வியுற்ற அரக்கர் அபயம் வேண்டுதலாகிய பொங்கத்தம் பொங்கோ' என்று முடிவுறும்—அரக்கர் பேசும் பாசுரமாக வரும் பத்தாம் பத்து இரண்டாம் திருமொழிப் பாசுரங் களிலுலும், தோல்வியுற்ற அரக்கர் அபயம் வேண்டி ஆடும் கூத்தாகிய குழமணிதூரமானதாய் வரும் பெரிய திருமொழி பத்தாம்பத்து மூன்றாம் திருமொழிப் பாசுரங்களிலும் இராம அவதாரம் பேசப்பெறுகின்றது.

மால் இராமனாக அவதரித்து இராவணனை அழித்து தர்மத்தை நிலை நிறுத்தியதை ஆழ்வார், பெரிய திருமொழி முதலான அவர்தம் படைப்புகளில் ஆங்காங்குப் பேசிச் செல்கிறார்.

"அம்பினா லரக்கர் வெருக்கொள நெருக்கி
அவருயிர் செகுத்தாம் மண்ணல்"[46]

மேலும், கலையும் கரியும் பரிமாவும் முதலான படைக் கலங்களோடு கானகம் கடந்துபோய், தனது கரத்தில் இருந்த வில்லொடு அம்பும் துணையாக மலைகொண்டு கடலில் அணைகட்டி இலங்கை மாநகருக்கு ஏகி, வாளரக்கர் தலைவனாய் இராவணனது சிரங்களை அறுத்தெறிந்தான்[47] என இராமனது திருஅவதார செயலில் தனை மறந்து ஆழங்கால்படுகிறார் ஆழ்வார்.

இராமபிரான் இராவணனை வதைத்தது[48] தனது தேவி சீதையின்பொருட்டே என்கிறார்.

"மின்னின் நுண்ணிடை மடக்கொடி காரணம்,
விலங்கலின் மிசையிலங்கை
மன்னன் நீண்முடி பொடிசெய்த மைந்தன்"
"விரைக மழ்ந்தமென் கருங்குழல் காரணம்,
வில்லிறுத்து"[49]

இராமன் அரக்கன் இராவணனது சிரங்களை 'புற்று அரிந்ததுபோல்' எளிதாக அறுத்தெறிந்தான் என அவனது வீரச்சிறப்பைப் பேசுகிறார். மேலும் இராமன் இராவணனை அழித்து விடணனுக்கு அரசளித்துத் தருமத்தைத் தழைக்கச் செய்தமையை,

"கம்ப மாகடல் அடைத்திலங் கைக்குமன்
கதிர்முடி யவைபத்தும்
அம்பி னாலறுத்து அரசவன் தம்பிக்கு
அளித்தவன்"
"உருத்தெழு வாலி மார்பில்
ஒருகணை யுருவ வோட்டி
கருத்து டைத்தம்பிக் கின்பக்
கதிர்முடி யரச ளித்தாய்"

"முனைமுகத் தரக்கன் மாள
முடிகள்பத் தறுத்து வீழ்த்து ஆங்
கனையவற் கிளைய வற்கே
அரசளித் தருளி னானே"

"அனையவற் கிளைய வற்கே
அரசளித் தருளி னானே"

"அலைநீ ரிலங்கைத் தசக்கிரிவற்
கிளையோற் கரசை யருளிமுன்
கலைமாச் சிலையால் எய்தான்"[50]

எனும் பாசுரவரிகள் உணர்த்துகின்றன.

## இராமன் முடிதுறந்து சீதையோடு காடேகியது

இராமபிரான் கைகேயி சூழ்ச்சியால் தந்தை தசரதன் கட்டளைப்படி அரசபோகம் துறந்து வைதேகி, இலக்குவன் துணையாய் கானகம் ஏகியதை ஆழ்வார் திருமங்கை

"கலையும் கரியும் பரிமாவும்
திரியும் கானம் கடந்துபோய்
சிலையும் கணையும் துணையாகச்
சென்றான்"

"கூனு லாவிய மடந்தைதன் கொடுஞ்சொலின்
திறத்திளங் கொடியோடும்
கானு லாவிய கருமுகில் திருநிறத்
தவன்"

"வில்லேர் நுதல்வேல் நெடுங்கண் ணியும்நீயும்
கலலோர் கடுங்கானம் திரிந்த களிறே."

"மானமரும் மென்னோக்கி வைதேவி யின்துணையா
கானமரும் கல்லதர்போய்க் காடுறைந்தான்"[51]

என்றும் இறைவன் கற்கள் நிறைந்துகிடக்க, அவன் பாதங்களை நோகச் செய்யும் அதர்வழி நடந்து காடுறைந்தானே என்றும் கலங்கிய நெஞ்சோடு கண்களில் நீர்சோரப் பாடுகிறார்.

## ஏழு மராமரம் செற்றது

இராமனின் வீரத்தின்மேல் ஐயப்பட்ட சுக்ரீவனுக்குத் தன் வீரத்தை உணர்த்த இராமபிரான் வெவ்வேறு திக்குகளில் இருந்த ஏழு மராமரங்களை ஒரே வில்லினால் சாய்த்துவிட்டார் என்பது நிகழ்ச்சி. இந்நிகழ்வை ஆழ்வார்.

**"...ம ராமரம்**
**ஏழும் எய்த வலத்தினான்"**

**"ஏழு மாமரம் துளைபடச் சிலைவளைத்**
**திலங்கையை மலங்குவித்த**
**ஆழி யான்"**

**"வரிந்திட்ட வில்லால் மரமேழு மெய்து"**

**"இடையன் எறிந்த மரமேயொத் திராமே"**[2]

என்று கூறிப் பாடுவர்.

## தாடகையை அழித்தது

இராமபிரான் தாடகை முதலான அரக்கர் குலத்தோரை அழித்து விசுவாமித்திரன் யாகம் முடித்தமையை,

**"வல்லி யிடையாள் பொருட்டாக**
**மதில்நீர் இலங்கை யார்கோவை**
**அல்லல் செய்து வெஞ்சமத்துள்**
**ஆற்றல் மிகுத்த ஆற்றலான்**
**வல்லாள் அரக்கர் குலப்பாவை**
**வாட, முனிதன் வேள்வியை**
**கல்விச் சிலையால் காத்தான்"**

**"சூர்மையி லாய பேய்முலை சுவைத்துச்**
**சுடுசரம் அடுசிலைத் துரந்து**
**நீர்மையி லாத தாடகை மாள**
**நினைந்தவர் மனம்கொண்ட கோயில்"[53]**

எனும் பாசுர வரிகளால் அறியலாம்.

**சீதையை மணந்தது**

விசுவாமித்திரனது யாகம் பூர்த்தி அடைய உதவி அருள் கிறார் இராமபிரான். பின் முனிவருடன் மிதிலைக்குச் செல்கின்றார். சிவதனுசை வளைத்து, சீதையை மணக்கிறார், இந்நிகழ்வை,

**"வாராரும் இளங்கொங்கை மைதிலியை மணம்புணர்வான்**
**காரார்திண் சிலையிறுத்த தனிக்காளை"**
**"வில்லிறுத்து மெல்லியல்தோள் தோய்ந்தாய்"[54]**

என்னும் பாசுர வரிகளில் பாடிச்செல்கிறார் ஆழ்வார் திருமங்கையாழ்வார்.

**மாரீசனை வதைத்தது**

பொன்மான் ஒன்று வந்து சீதையை மயக்குகின்றது; அதனழகில் மயங்கிய சீதை கணவனிடம் அதைப் பிடித்து அளிக்குமாறு வேண்டுகிறாள்; இராமனும் முயல்கிறான்; மானாகி மாயங்காட்டி வந்த மாரீசன் இராமனை வெகு தூரம் இழுத்துச் சென்றுவிடுகிறான்; திட்டப்படி இராவணன் சீதையை அபகரித்துச் செல்கிறான். மாயமானின் வஞ்சத் தைப் புரிந்துகொண்ட இராமன் தனது வில்வால் மான் உருவத்தில் வந்த மாரீசனை அழிக்கிறான். இதனை,

**"கானிடை யுருவைச் சுடுசரத் துரந்து**
**கண்டுமுன் கொடுந்தொழி லுரவோன்**
**ஊனுடை யகலத் தடுகணை குளிப்ப**
**உயிர்கவர்ந் துகந்தாம் மொருவன்"**

"மான்முனிந் தொருநாள் வரிசிலை வளைத்த
மன்னவன்"

"துள்ளா மருமான் விழவாளி
துரந்தான்"[85]

என்று பக்தியோடு பாடிப்பாடி மகிழ்கின்றார் ஆழ்வார்.

**வாலிவதம்**

சுக்ரீவனுக்காக இறைவன் வாலியை வதைத்ததைத் தமது திருமொழிகளில் ஆங்காங்கே காட்டிச் செல்கிறார்.[86]

**சூர்ப்பனகை மூக்கறுத்தது**

பஞ்சவடியில் சீதையோடும் இலக்குவனோடும் வாழும் இராமனது திவ்ய அழகில் மயங்கிய இராவணன் தங்கை அரக்கி சூர்ப்பனகை அழகிய பெண்ணாய்—அவனிடம் சென்று தனை மணக்க வேண்ட, இராமன் தனது நிலை கூறி தம்பி யைக் காட்டுகிறான். இலக்குவனிடம் சென்று தனை மணக்கும்படி இரக்க செவியோடு, மூக்கினை அறுத்து அவளை அங்கபங்கம் செய்தனுப்புகிறான் இளையவன். இந்நிகழ்வைத் திருமங்கை தனது படைப்புகளில் சில இடங்களில் குறிப் பிட்டுச் செல்கிறார்.[87] அதற்கு,

"...அரக்கர்குலப் பாவைதன்னை
வெஞ்சின மூக்கரிந்த விறலோன்"[88]

போன்ற பாசுர வரிகளைக் காட்டாகக் கூறலாம்.

ஈண்டு இளையவனது செயலை இராமனது மேல் ஏற்றிக் கூறல் அவனது வலக்கை தானாய் இளையவன் விளங்கிய காரணத்தினால் என்றால் அது மிகையாகாது.

**தூதனுப்பல்**

இராமன் அங்கதனைத்தூ தனுப்பிய நிகழ்வை ஆழ்வார்,
"முன், ஓர் தூது வாரைத்தின் வாயில் மொழிந்து"[89]

எனக் குறித்துச் செல்கிறார்.

## இராமன் குகனுக்கருளல்—அனுமனுடன் உணவு உண்ணல்

இராமபிரான் தனது வனவாசத்தில் வேடுவர் தலைவன் குகனைச் சந்திக்கிறான்; அவனது அன்புக்குக் கட்டுப்படு கிறான் அவனையும் தனது தம்பிகளுள் ஒருவனாக ஏற்கிறான். பரம்பொருள் தனது மேன்மை—ஜீவாத்மாவின் கீழ்மை தெரியாதவாறு ஈண்டு கலக்கிறது. இதனை ஆழ்வாரது பெரியதிருமொழி ஐந்தாம்பத்து எட்டாம்திருமொழி முதல் பாசுரம் அழகாக காட்டிச்செல்கிறது

அயோத்தி மீளும் சமயம், இராமபிரான் முனிவர் ஒருவரது விருப்பத்திற்கிணங்க, அவரது ஆசிரமத்தில் தனைச் சேர்ந்தவர்களோடு விருந்துண்ணப் போகிறான். பரதனிடம் இராமனது வருகையைச் சொல்லி அவரது ஆத்மார்த்தியைத் தடுக்க அனுப்பப்பட்ட அனுமன் சென்ற காரியம் முடித்துத் திரும்பிவர, அவனோடு தனது எளிமைத்துவம் இலங்க ஒரே இலையில்—அனுமனோடு உண்டு முடிக்கிறான். இதுவும் இராம அவதாரத்தில் நிகழும் ஓர் நிகழ்ச்சியாகும். ஆழ்வார் இதனை, ஐந்தாம்பத்து எட்டாம் திருமொழி இரண்டாம் பாசுரத்தில் சிறப்புறப் பாடிச் செல்கிறார்.

இவ்வாறு இராம அவதாரத்தில் ஆழ்வார் பெரிதும் ஆழங்கால்பட்டு பக்தி மீதூர பாசுரங்கள் படைத்துச் செல்கிறார்.

### 3.5.1.8. கிருஷ்ணாவதாரம்

திருமாலின் அவதாரங்களுள் ஒன்பதாவது அவதாரம் கிருஷ்ண அவதாரம் ஆகும் இவ்வவதாரம் கம்சன் முதலான அரக்கர்களை அழித்து பகவத்கீதையினைத் தந்து மானிடரை உய்விக்கும் சிறந்த அவதாரமாகும்.

கிருஷ்ணன் என்பது வடமொழிச் சொல்லாகும். இச் சொல்லுக்குக் கருநிறமுடையவன் என்பது பொருள்.

சீவாத்மாக்களுக்குக் கண்ணாக இருந்து உய்விப்பவனாத லால் எம்பெருமான் "கண்ணன்" என்றழைக்கப்படுகிறான்,

கண்ணன் என்பதற்கு "கருமை நிறமுடையவன்" என்றும் பொருள்கொள்ளலாம்.[60] உடலுக்கு ஒளி அளிப்பது கண். உயிருக்கு ஒளி தருவது ஞானம். உலக உயிர்களுக்கு எல்லாம் ஞானஒளி தருகிற கண்ணாக இருப்பவனே கண்ணன் ஆனான்.[61]

"ஸ்ரீகிருஷ்ணன் ஒரே அவதாரத்தின் அநேகவிதமான லீலைகளைச் செய்து நடித்திருக்கிறான். மிகவும் சேஷ்டை செய்யும் குழந்தை. பிறகு, மாடுமேய்க்கும் பையன், குழலூதி கூத்தாடும் கலைஞன். இவற்றை அபலிக்கும் ரஸிகன், மல்யுத்தத்தில் சேர்ந்தவன், காளைமாடுகளை அடக்கிக் கட்டுபவன், ராஜதந்திரநிபுணன், தூது செல்பவன். ஸாரதி, துரௌபதி போல் தீர்க்கமுடியாத கஷ்டத்தில் சிக்கிக் கொண்டவர்களைக் காக்கும் ஆபத்பாந்தவன், குசேலர் போன்றவர்களை ரக்ஷிக்கும் பக்தவத்ஸலன், பீஷ்மருக்கு முக்தியை அளிதவன்' பீஷ்மருக்கு மாத்திரமன்று தன்னையே கொல்லும்படியான அம்பைப் பிரயோகித்த வேடனுக்கும் முக்தி கொடுப்பவன்—இப்படி எல்லாம் லீலை செய்திருக்கான்" என்பர் காஞ்சிகாமகோடி பீடாதிபதி அவர்கள்.

பற்பல போக்கு கொண்ட மக்கள் எல்லாரையும் தனது லீலைகளால் தனித்தனியே ஆசிர்வதித்துத் தன்னுடைய கருணைக்கும் அதன் மூலம் ஞானத்துக்கும் பாத்திரமாக்கிக் கடைத்தேற வைத்த ஸ்ரீகிருஷ்ண அவதாரமே பரிபூர்ண அவதாரம் என்று மேலும் கூறுகிறார்[62]

கிருஷ்ண அவதார நிகழ்ச்சிகளில் திருமங்கை ஆழ்வார் பெரிதும் ஆழங்கால்படுகிறார்; என்றோ நடந்த அந்நிகழ்ச்சி களை அன்று நடப்பதுபோல் தனது பக்தி கலந்த கவித் திறத்தால் தன் கண்முன் கண்டு அனுபவிக்கிறார்; பாடிப் பரவசப்படுகிறார்.

திருமங்கை தாய் யசோதையாகி, கண்ணனை அம்மம் உண்ண அழைக்கும் பத்தாம்பத்து நான்காம் திருமொழியிலும்,

சப்பாணி கொட்டச் சொல்லும் பத்தாம்பத்து ஐந்தாம் திருமொழியிலும் மற்ற அவதாரங்களின் மேன்மையோடு கிருஷ்ணாவதாரத்தின் எளிமையை அனுபவிக்கும் ஆறாம் திருமொழியிலும், கண்ணனது செய்திையைக் குறித்து யசோதை பணித்தலும், ஆய்ச்சியர் முறையிடுதலுமாகிய ஏழாம் திருமொழியிலும், ஆய்ச்சியின் ஊடல்திறமாய் அமையும் எட்டாம் திருமொழியிலும் விசேஷமாக கண்ணவதாரத்தில் ஈடுபடுகிறார் ஆழ்வார். ஆழ்வார் பாசுரங்களில் அனைத்து அவதாரங்களிலும் கண்ணவதாரத்திற்கு மிக்குஇடம் அளிக்கப் பெற்றுள்ளது.

தேவகியின் வயிற்றுப்பிள்ளையால் தனக்கழிவு என அறிகிறான் கம்சன்; சகோதரியையும், வசுதேவனையும் சிறையில் அடைக்கிறான்; அவர்கள் பெறும் பிள்ளைகளை அழித்தொழிக்கிறான். அச்சூழலில், மால் தருமத்தைக் காக்க—அதர்மத்தை அழித்தொழிக்க அவர்களுக்கு மகனாக வந்து பிறக்கிறான். தெய்வமே வந்து மகனாகப் பரிவுடன் பிறக்க அவ்வேளையில் இரும்பு விலங்குகளால் பிணிக்கப் பட்டு, தளைப்பட்டிருந்த வசுதேவனும், தேவகியும் தளை கழலப் பெற்றனர்; பிறவித் தளைகளும் கழலப்பெற்றனர்; பெற்றதன் பயனைப் பெற்றனர் என கண்ணன் பிறந்த வேளையினை—அப்போது ஏற்பட்ட அற்புதங்களைப் பாடி பரவசப்படுகிறார் ஆழ்வார்.

**"தந்தை தளைகழலத் தோன்றிப்போய் ஆயப்பாடி**
**நந்தன் குலமதலை யால்வளர்ந்தான்"**
**"பெற்றார் தளைகழலப் பேர்ந்தங் கயலிடத்து"[63]**

கண்ணன் அடியவர்களைக் கூடி சூழ்ந்திருந்த மாய இருளை அகற்றி ஒளியூட்டிட, நள்ளிருளில்—சிறையில்—தந்தை காலில் தளை கழலல் போன்ற அற்புதங்கள் நிகழுமாறு வந்து பிறந்தான் என்று மேலும் பாடிச் செல்கிறார்.

"தந்தை காலில் பெருவிலங்கு
தான் அவிழ நள்ளிருட்கண்
வந்த எந்தை"
"தந்தைமன முந்துதுயர் நந்த இருள் வந்தவிறல்
நந்தன் மதலை"[64]

பூதகிவதம்

கண்ணனைக் கொல்வதற்காகக் கம்சனால் ஏவப் பட்டவள் பூதகி. கண்ணனாகிய குழந்தைக்கு முலைப்பால் தருவதன் மூலம் அவனைக் கொல்ல சதி செய்திருந்தாள். கண்ணனோ பாலோடு அவளது உயிரையும் உறிஞ்சி அவளை விண்ணுலகிற்கு அனுப்புகிறான். கண்ணனின் அவதார லீலைகளுள் இதுவுமொன்று இந்நிகழ்ச்சியை ஆழ்வார்,

"பேயிடைக் கிருந்து வந்தமற் றவள்தன்
பெருமுலை சுவைத்திட"

"இ ரங்கவன் பேய்முலை
பிள்ளை யாயுயி ருண்ட வெந்தை"

"வஞ்சனை செய்யத் தாயுரு வாகி
வந்தபேய் அலறிமண் சேர
நஞ்சமர் முலையூ டுயிர்செக வுண்ட
நாதனை"

"...அன்றுபேய்ச்சி
விடம்பருகு வித்தகனை"

"பேய்த்தாயை முலையுண்ட பிள்ளைதன்னை"

"ஊணாகப் பேய்முலைநஞ் சுண்டான்"

"பஞ்சிச் சிறுகூழை யுருவாகி மருவாத
வஞ்சப்பெண் நஞ்சுண்ட அண்ணல்"[65]

என்று கூறுவர்.

இவ்வாறே, இந்நிகழ்வைத் தமது பாசுரங்களில் பல இடங்களில் ஆழ்வார் பேசிப்பேசி மகிழ்வுறுகிறார்.[66]

## கண்ணன் கம்சனால் ஏவப்பட்ட அனைத்து தீயசக்திகளையும் அழித்தல்

தன்னைக் கொல்ல கம்சனால் ஏவப்பட்ட சக்திகள் அனைத்தையும் கண்ணன் அழித்து ஒழிக்கிறான். சகடாக வந்த அசுரனை அழித்தது. தேனுகாசுரனை வதைத்தது, கன்றினால் விளவெறிந்தது, இரண்டையும் அழித்தது, புள்ளாய் வந்தவன் வாய்பிளந்தது, பரியாய் வந்தவனின் உயிரை எடுத்தது குவலயாபீடமெனும் யானையை அழித்தது, மல்லர்களை வதைத்து ஒழித்தது ஆகிய கண்ணனது பிள்ளைமை லீலைகளில் ஆழங்கால்பட்டு அந்நிகழ்ச்சிகளைச் சுவைபட தமது பாசுரங்களில் ஆங்காங்குச் சொல்லிச் செல்கிறார்.[67]

## கண்ணன் மருதம் சாய்த்தலும், மாடு மேய்த்தலும்

குழந்தை கண்ணனின் தொல்லை அதிகமாகி விடுகிறது தாய் யசோதைக்கு வீட்டிலுள்ள வெண்ணெய், நெய், தயிரோடு ஊரார் வீட்டிலும் அவற்றைக் களவாடும் நிலை தீவிரமாகியது. இதனால் கோபமுற்று செய்வது அறியாது திகைத்த யசோதை, தனது மகனை அடிக்கவும் இயலாது, அணைக்கவும் ஆகாது தவிக்கிறாள்; அவனது செயலுக்குக் கோபிக்கிறாள்; இச்சிறு வயிறுக்கு 'இவன் உண்டது எல்லாம் என் செயுமோ?' எனக் கவலை கொள்கிறாள். கோபமுடன் தன் பிள்ளையைத் தனது தோட்டத்து உரலோடு அவனது திருமேனி நோகாவண்ணம் கட்டிப்போடுகிறாள். அன்பெனும் பிடிக்குள் அகப்படும் மலை தான் வந்த வேலையை முடிக்கும் முயற்சியில் உரலோடு நகர்கிறது; உரல் இரு மருத மரங்களுக் கிடையில் அகப்பட்டுக்கொள்ள. எல்லாமறிந்து அறியாதிருந்த அக் கள்ளக்குழந்தை மேலும் அவ்வுரலை இழுக்க அம்மருத மரங்கள் வேரோடு சாய்கின்றன; இறைவனது திருவருளால்

மரங்களாய் நின்ற தேவர்கள் சாபம் தீர்ந்தனர். தனது ஸ்வாமித்துவத்தை மறைத்து, ஏதுமறியா மழலையாக— சௌலப்ய நெறியினனாய் நிகழ்த்தும் இறைவனது லீலையில் ஆழ்வார் தனைமறந்து ஆழங்கால் படுகிறார்: பரவசப்பட்டுப் பாடிக் களிக்கிறார்.

## காளியனை அடக்கி அருளியது

யமுனை நதிக்கரையில் நீர் அருந்தும் மடுவில் தன் குடும்பத்துடன் வாழ்ந்து வந்த காளிங்கன் என்னும் நச்சுப் பாம்பின் ஆணவத்தை அடக்கி அனைத்து உயிர்களையும் மகிழ்வித்தான் கண்ணன். கண்ணனின் கட்டளைப்படி காளிங்கன் தன் குடும்பத்துடன் கடலில் சென்று வாழலா யிற்று. இச்செய்தி ஆழ்வார் பாசுரங்களில் ஆங்காங்குப் பேசப்பெறுகிறது[68]. அதற்கு,

> "பல்ல வம்திகழ் பூங்கடம் பேறிஅக்
> காளியன் பணஅரங்கில்
> ஒல்லை வந்துறப் பாய்ந்தரு நடஞ்செய்த
> உம்பர்கோமான்"[69]

என்ற பாசுரவரிகளைக் காட்டாகக் கூறலாம்.

## குன்றினால் குடை கவித்தது

ஆண்டுதோறும் மழை நன்கு பொழிந்து உயிர்கள் சிறப்புடன் வாழ ஆயர்கள் இந்திரனுக்கு வேள்வி செய்து வந்தனர். அதைத் தடுத்து, கோவர்த்தனமலைக்கே ஆயர் களை விழா எடுக்கும்படி செய்தான் கண்ணபெருமான். இதனால் கோபமுற்ற இந்திரன் ஊழிக்கால வெள்ளமென மழையைப் பொழியச் செய்து, கண்ணனுடன் ஆயர்களைப் பழிவாங்க நினைத்தான். ஆனால் கண்ணனோ கோவர்த்தன மலையையே குடையாகப் பிடித்து, ஆயர்களைக் காத்தான். இந்நிகழ்வை ஆழ்வார்,

"கோகுலங்கள் தளராமல் குன்றமேந்திக்
காத்தானை"

"இந்திர னுக்கென் றாயர்கள் எடுத்த
எழில்விழ வில்பழ நடைசெய்
மந்திர விதியில் பூசனை பெறாது
மழைபொழிந் திடத்தளர்ந்து ஆயர்
எந்தம்மோ டினஆ நிரைதள ராமல்
எம்பெரு மான்அருள் என்ன
அந்தமில் வரையால் மழைதடுத் தானை"

"......நண்ணார்முன்
கடுத்தார்த் தெழுந்த பெருமழையைக்
கல்லொன் றேந்தி யினநிரைக்காத்
தடுத்தான்"

"கன்றி மாரி பொழிந் திடக்கடிது
ஆநி ரைக்கிடர் நீக்குவான்
சென்று குன்றம் எடுத்த வன்"

"மஞ்சுயர் மாமணிக் குன்றமேந்தி
மாமழை காத்தொரு"

"......அடல்மழைக்கு
நிரைக லங்கிட வரைகுடை யெடுத்தவன்"

"மழைமா முதுகுன் றெடுத்து"

"...ஆயர் ஆமரைக் கன்றிடர் தீர்ப்பான்
கூடிய மாமழை காத்த கூத்தன்"

"...வருமழை காப்பான்
உய்யப் பருவரை தாங்கி யாநிரை காத்தான்"

"...வரையெடுத்த
தோளானை!"

"குன்றதனால் மழைதடுத்து"[10]

என்ற பாசுரங்களில் குறிப்பிட்டுள்ளார் மேலும் இவ்வாறே ஆங்காங்கே இந்நிகழ்வை ஆழ்வார் பாடிச் செல்கிறார்.[11]

## ஏறடர்த்தது

நப்பின்னை பிராட்டியை மணப்பதற்காகக் கண்ணன் முரட்டுத்தனமாக வலிமை பொருந்திய ஏழு எருதுகளை வென்று அடக்கினான் கண்ணவதார நிகழ்ச்சிகளுள் இதுவும் ஒன்று மிக்க கோபத்துடன் கூடியதான இடிபோன்ற முழக்கத்தையுடைய ஏழுகாளைகளை அடர்த்தவன்[12] தனது எதிர்வந்த ஆனேழ் விடைகளைச் செற்ற அணிவரைத் தோளன்[13] என்று இந்நிகழ்வை மேலும் பேசுகிறார் ஆழ்வார். கண்ணனின் இல்லிலையை ஆழ்வார் தம் பாசுரங்களில் அடிக்கடி மெய்மறந்து பாடுவதைக் காணலாம்[14]

இவ்வாறே சம்காரரூபினனாய் கம்சனை வதைத்தது. உரலோடு கட்டுண்டது, வெண்ணையுண்டு தாம்பால் கட்டுண்டது, குருந்தொசித்தது, கோபியரை மயக்கியது, குரு சாந்தீபன் மகனை மீட்டது, குடக்கூத்தாடியது, மரக்கூத் தாடியது, பாணாசுரனை வதைத்தது, காண்டவ வனமெரித்தது, துச்சாதனனால் சபையில் திரௌபதியின் துகில் உரியப்படும்போது அவளது மானத்தைக் காத்தது, துரியோதனன் தனை அழிக்க வஞ்சகமாய் வைத்திருந்த பிலத்தில் விஸ்வரூபம் எடுத்து பிலத்தில் இருந்த மல்லர்களை அழித்தது, பாண்டவர்க்காய்த் தூதுபோனது, அருச்சுனன் சபதம் நிறைவேற கதிரையே தமது ஆழியால் மறைத்தது, பார்த்தனுக்குத் தேர் ஓட்டியது, மதுகைடவரை வதைத்தது, பாண்டவர்க்குத் துணையாயிருந்து பூமிபாரம் தீர்த்தது, பாரத யுத்தத்தில் சங்கினில் வாய் வைத்து வெற்றி முழுதாய் வந்து சேரும்படிக்கு முழக்கம் செய்து அருளியது[15] எனக் கண்ணன் பிறந்தது முதல் அவனது வாழ்வில் நிகழ்ந்த அவனது நிகழ்ச்சிகளின் லீலைகளில் ஆழ்வார் தனை மறந்து

ஆழங்கால்பட்டு, அவற்றைத் தமது பாசுரங்களில் ஆங்காங்குப் பேசிச் சென்று கிருஷ்ண அவதாரத்தில் உள்ள தனது தனி ஈடுபாட்டைப் புலப்படுத்திக் கொள்கிறார், மகாபாரதத்தின் நாயகனின் மகத்துவத்தில் மயங்குகிறார்.

இவ்வாறு கிருஷ்ண அவதாரத்தில் ஆழ்வார் மிகவும் ஆழங்கால்படுகிறார்.

### 3-5-1-9 கல்கி அவதாரம்

கண்ணனாக அவதரித்த இறைவன் அவ்வவதாரம் முடித்து, தன் சோதிக்கு எழுந்தருள பூவுலகில் கலியின் ஆட்சி தொடங்குகிறது. கொடுமைகள் அதிகரித்து அதர்மம் தலை விரித்தாட, நிலமங்கை மாலை சரணமுறுகிறாள். இறைவன் கல்கி எனும் பெயர் தாங்கி மீண்டும் வந்து அவதரிக்கிறான்.

எதிர்காலத்தில் " வடதிசையில் சம்பளம் என்ற கிராமத்தில் விஷ்ணுசயஸ், சுமதி என்பவர்கட்கு, பிறக்கும் மழலையாய், கருவில் பன்னிரண்டாண்டு காலம் உறைந்து, வைகாசி வளர்பிறையில் துவாதசி அன்று அவதரித்து, கல்கி எனப் பெயர் பெறுவார். பரசுராமனிடம் குருகுலவாசம் பெற்றுத் தருமத்தைக் காக்க புறப்பட்டு, கலியுகத் தோற் கடித்து உலகிலுள்ள தீயோரைக் கொன்று அறத்தை நிலைநாட்டுவார்; கிருதயுகத்தைத் தோற்றுவிப்பார். இக் கல்கி பதரிகாச்ரமத்திற்குத் திருஆழி, திருச்சங்கு திருமேனியோடு எழுந்தருளுவார்; பின் தமது திருவடி திருச்சோதிக்கு எழுந்தருளுவார்.[76]

ஆழ்வார்,

**"மீனோ டாமை கேழலரி**
**குறளாய் முன்னும் இராமனாய்த்**
**தானாய், பின்னும் இராமனாய்த்**
**தாமோ தரனாய்க் கற்கியும்**
**ஆனான் தன்னை"[77]**

என இவ்வவதாரம் பற்றிக் குறிப்பிட்டுக் காட்டுவர்.

### 3-5-1-10 அன்னவதாரம்

மால் அன்னமாயிருந்து வேதம் உரைத்தது அன்னவதாரமாகும்.

எழில் வேதம் மறைகிறது; ஏழுலகங்களும் இருள்மண்டி விடுகின்றன. என்னது வந்தது என தேவர்கள் திகைக்கின்றனர்: இறைவனாகிய பரம்பொருள் இவ்விருள் நிலையை மாற்றி, அனைவரும் மனம் மகிழ அன்னமாய் இருந்து அற நூல் உரைக்கின்றான்.

ஆழ்வார் திருமங்கை இவ்வவதாரம் பற்றி தமது பாசுரங்களில் ஆங்காங்குப் பாடிப் பரவசப்படுகிறார்.[78]

"முன்னுல கங்க ளேழும் இருள்மண்டி யுண்ண
முதலோடு வீடு மறியாது
'என்னிது வந்த தென்ன இமையோர் திசைப்ப
எழில்வேத மின்றி மறைய
பின்னையும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கி
இருள்தீர்த்திவ் வைய மகிழ
அன்னம தாயி ருந்தங் கறநூல் உரைத்த"[79]

### 3-5-1-11 பரிமுக அவதாரம்

லட்சுமிபதியாம் பரம்பொருள் பரிமுகஅவதாரம் எடுத்தமையைப் பற்றிய குறிப்புக்கள் ஆழ்வார் திருமங்கையாரின பாசுரங்களில் ஆங்காங்குக் காணப்பெறுகிறது.

"வசையில் நான்மறை கெடுத்தஅம் மலரயற்
கழுவி, முன் பரிமுகமாய்
இசைகொள் வேதநூல் என்றிவை பயந்தவன்"

"முன்னிவ்உல கேழுமிருள் மண்டி யுண்ண
முனிவரொடு தானவர்கள் திசைப்ப வந்து
பன்னுகலை நால்வேதப் பொருளை யெல்லாம்
பரிமுகமாய் அருளியஎம் பரமன்"[80]

### 3-5·2 அர்ச்சையவதாரம்

விரும்பினவர் விரும்பியபடிக்குக் கோயில்களிலும், வீடுகளிலும் காணப்படும் எம்பிரானின் திருவுருவங்கள் அர்ச்சைநிலை வடிவங்களாகும். திருமங்கையாழ்வார் மொத்தம் எண்பத்தாறு திவ்யதேசங்களில் எழுந்து அருளி யிருக்கும் மூர்த்திகளிடத்தில் மிகவும் ஆழங்கால்படுகிறார். ஆதலால் ஆழ்வார் பாசுரங்களில் எண்பத்தாறு திவ்ய தேசத்துத் திருத்தலமூர்த்திகளின் திருவுருவங்கள் இடம் பெற்ற நிலையில் அர்ச்சாவதாரம் விளங்குகிறது

எம்பெருமான் தன் நிலையிலிருந்து இறங்கி. திருவரங் கனாக—திருவேங்கடவனாகப் பல வடிவங்களில் எழுந்தருளி உலகினை உய்விக்கச் செய்தால் இவ்வர்ச்சைநிலை வடிவங் களையும் அவதாரமாகக் கொள்ளலாம்.

### 3-5-3 வியூக நிலை

திருப்பாற்கடலுள் தேவியர் மூவருடன் வாசுதேவன். சங்கர்ஷணன். பிரத்யும்நன்; அநிருத்தனாய் திருமால் எழுந்தருளி இருக்கும் வியூக நிலையும் அவதாரமாகவே கொள்ளப்படுகிறது இந்நிலையினை,

''கரைசெய் மாக்கடல் கிடந்தவன்''

"பணங்க ளாயிர முடையநல் லரவணைப்
பள்ளிகொள் பரமா''

' சங்கு தங்கு தடங்க டல்துயில்
கொண்ட தாமரைக் கண்ணினன்''

"பள்ளி யாவது பாற்கடல்''

"கொண்டரவத் திரையுலவு குரைகடல்மேல் குலவரைபோல்
பண்டரவின் அணைக்கிடந்து''

"பைய வணையான்''

“நாகணையாய்”[81]

என்று பலவாறு பரவசப்பட்டு மெய்மறக்கிறார். மேலும் இவர்தம் படைப்புகளில் ஆங்காங்கு இவ்வியூக நிலையைப் பாடி மனங்குளிர்வதைக் காணலாம்.[82]

### 3-5-4 பரத்துவநிலை

நித்யசூரிகள் அனுபவிக்கும்படிக்கு வைகுந்தம் என்னும் திருநாடுதனில் பரவாசுதேவனாய் முழுமுதற்பொருள் எழுந்தருளி இருக்கும் நிலை பரத்துவ நிலையாம். எம்பிரானின் அவதார நிலையில் இதுவுமொன்றாகும். ஆழ்வார் இதனை ஓரிடத்தில் மட்டும்,

“அண்டமாய் எண்திசைக்கும்
ஆதியாய் நீதி யான
பண்டமாய் பரம சோதி!”[83]

என ஆழங்கால்பட்டு பேசி உள்ளார்.

இவ்வாறு திருமங்கை ஆழ்வார் பாசுரங்களில் திருமால் அவதாரங்கள் சுவைததும்பப் பேசப்பெறுகின்றன.

## குறிப்பெண் விளக்கம்


1. கழகப்புலவர் குழுவினர் (தொ ஆ), கழகத் தமிழ் அகராதி மூன்றாம் பதிப்பு, (சென்னை, 1974). ப. 424.
2. பி ஜெயா, ‘மனிதனும் சமயமும்’. இளவேனில். முதற் பதிப்பு, (சென்னை, 1972) ப. 939-940.
3. ந. தர்மாரெட்டி, திருவள்ளுவர் வேமனர் ஓர் ஒப்பாய்வு, முதற்பதிப்பு, (திருப்பதி, 1984) ப. 163.
4. மேற்படி ப. 163.
5. அ.ச. ஞானசம்பந்தன், ‘தமிழும் சமயமும்’ உலகத் தமிழ் மாநாடு விழாமலர், (சென்னை, 1968), ச-1.

6. எச் வைத்தியநாதன், வழிபாடும் சமயமும் முதற் பதிப்பு, (சென்னை, 1968), ப. 11.
7. அரங்க சீனிவாசன், வைணவத் தத்துவ ஞான அடிப்படைகள், ப 10.
8. சழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழ் அகராதி, ப. 880.
9. கீழாத்தூர் ஸ்ரீநிவாஸாச்சாரியர், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம், ப. 21.
10. சொ. சற்குணம், சங்ககால இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் ஸ்ரீ திருமாலின் தசாவதாரங்கள் ஓர் ஆய்வு. நவ. 1982, ப. 10.
11. அரங்கசீனிவாசன், வைணவ தத்துவஞான அடிப்படைகள், ப. 28—29.
12. சில பிராமணங்கள் முப்பத்தெட்டு என்றும் சில முப்பத்தொன்பது என்றும் கூறுகின்றன—ஸ்ரீராம தேசிகாசார்யர், சில்லரை ரஹஸ்யங்கள், (முதற்பாகம்) ப. 538.
13. பி.பி. அண்ணங்கராசாரியார், ஆழ்வார்கள் வைபவம், ப. 3.
14. கலைக்களஞ்சியம், தொகுதி—1, முதற்பதிப்பு, (சென்னை—1954) ப. 227.
15. பெரி. திரு. 11. 4. 1. பெரியதிருமடல். அடி 121.
16. பெரி. திரு. 11. 4. 2; 8 8. 2; 11. 7. 1.
நெடுந். பா 3; பா 29 சிறிய திருமடல் அடி 46—47
பெரிய திருமடல். அடி 104—106.
17. சொ. சற்குணம் சங்ககால இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் திருமாலின் தசாவதாரங்கள்—ஓர் ஆய்வு, ப. 58—59.
18. எஸ். நடராஜன், தசாவதார தத்துவங்கள், முதற் பதிப்பு, (சென்னை, 1979), ப. 37.
19. பெரி. திரு. 1.4.1; 3.2.3; 4.4 8; 4.7.8; 4.10 10; 6.10.1.2; 7.2 1 7 7; 7.8.4; 8.4.6; 9.1.4; 11.4.3.

20. பெரிய திருமடல் அடி 103—104.
குறுந். பா. 4; திருவெழு, அடி 22. நெடுந் பா. 20.
21. பெரி. திரு. 2 3. ; 2 5 3; 3 3 3;
22. பெரி. திரு. 1.7 1; 1.7.7; 3 9.2;
23. பெரி. திரு. 2.8.1;
24. பெரி திரு 3.1.4., 3 10.4.
25. பெரி திரு. .6.4.
26. பெரி. திரு. 5.7 5
27. பெரி. திரு. 10.6.4
28. பெரி. திரு. 6.6 4.
29. குறுந். பா. 2. பெரிய திருமடல் 98—102.
சிறிய திருமடல். 42—44.
30. சிறிய திருமடல் அடி 42—44.
31. எஸ் வையாபுரிப்பிள்ளை. 'அவதாரங்களும் தென்னாட்டுத் தொடர்பும்', அகராதி—நினைவுகள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, முதற்பதிப்பு, 1959.
32. சொ. சற்குணம், சங்ககால இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் திருமாலின் தசாவதாரங்கள்—ஓர் ஆய்வு. ப. 105—106.
33. பெரி. திரு. 3.4 1; 3 1.5; 3.6.5; 3.1.0.5,1.
பெரி. திரு. 4 2.6; 4 4.7; 4.6.2; 4.9.3; 4.10;
பெரி. திரு. 5.1.1.2; 5.4.3; 5 6 4.
பெரி. திரு 6.1.1; 6.6.3; 6.7.3; 6. 0.1,2;
பெரி. திரு. 7.2.5; 7.8 6; பெரி. திரு. 8-4 7;
பெரி. திரு 9 2 5; 9.4.2; 9.7.3; 9.8 3; 9 9.5; 9.10 5;
பெரி. திரு. 10.4.5; 10.6.5.4; 10.9.7.
பெரி. திரு. 11 3.1.6; 11.4.5; 11.5.10.9; 11.7.2.
34. பெரி. திரு. 1.5.6.; 1.8.5; 1.10.4; 2. .; 2.4.2
2.3.2., 2.9.7.
35. பெரி. திரு. 3.10.5.

36. பெரி திரு. 11.5.10.

37. பெரிய திருமடல் அடி 106—112.

38. திருவெழு. அடி 6—9.
பெரிய திருமடல். அடி 106—112.
சிறிய திருமடல் அடி 44—46, 25.
நெடுந். பா 5, 20, 28.

39. பெரி. திரு. 5.3.1; 5.6.2; 9.1.6; 11.4.6.

40. பெரி. திரு. 9.1.6.

41. பெரி. திரு. 10.6.6; 10.9.7.

42. பெரி. திரு. 7.6 2; 5.3.1.

43. பெரி. திரு. 7. 9. 4.

44. நெடுந். பா. 7.

45. ந. சுப்புரெட்டியார், சில நோக்கில்—நாலாயிரம், ப. 61-62

46. பெரி. திரு. 1.1.6.

47. பெரி. திரு. 1.5.1,

48. பெரி. திரு. 7.8.7.

49. பெரி. திரு. 3.1.7.8.

50. பெரி. திரு. 4.2.1; 4.6 3; 4.6.4; 4.2.1; 4.6.4; 8.6.7.

51. பெரி. திரு 1.5.1; 3.1.6; 7.1.5; 11.5.1.

52. பெரி. திரு. 1.8.5; 8.5.5; 10.6.9; 11.8.6.

53. பெரி. திரு. 9.8.4; 8.6.3.

54. பெரி. திரு. 4.1.8; நெடுந். பா. 13.

55. பெரி. திரு. 1 4.2; 1.4.8; 6.7.3.

56. பெரி. திரு. 1.2.1; 3.4.6; 4.6.3; 10.9.8.

57. பெரி. திரு. 3 9.4; பெரிய திருமடல் 133-147;
சிறியதிருமடல் அடி 38-40.

58. பெரி. திரு. 3.7.3.

59. பெரி. திரு. 2.2.3.

60. பெரு. திரு. 7.1; 7.2; 7.3.

61. காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், 'கண்ணன் பிறந்தான்', குண்டூசி (சென்னை, 1988) ப. 112.

62. மேற்படி ப. 112

63. பெரி. திரு. 11.5.2. 10 5.4.

64. பெரி. திரு. 7.5.1. 5.10.7.

65. பெரி. திரு. 1.4.5; 1.8.2; 2.3 3; 2 5 3; 2.5.4; 2-5.7; 2.6.7.

66. பெரி. திரு. 3.8.5.6; 3.10.7.9; 4.4.2; 4 5.2; 4 8.2; 4.10.1; 5.4 6; 5.5.4; 5.7 9; 6.5.6; 6-6.7; 7.4.1; 7.6.5; 7.8.5; 7.10 4,8; 9.7.5; 9.8.4; 10.4.1.7; 10.5.5; 10.9.1; 11.1.4; 11.2.2; 11.4.9.

67. சகடழித்தது. 2.5.5; 2.10.7; 5.4.7; 5.6.4; 7.8.9; 8.6.9; 9.8.7; 10 5.9; 10.7 9; 10.8.3.
தேனுகாசுரனை வதைத்தது. 3.10.7; 9.8.7;
கன்றினால் விளவெறிந்தது. 3.8.5. 3.9.7; 3.10.8; 7.4.3; 7.10.8; 8.6.9; 9.8.6; 9.10.7;
புள்வாய் கீண்டது. 4 5.4; 5.9.5; 7.1.4; 10.5;
பரிபாய் வந்தவனுயிர் எடுத்தது. 3.2 8; 5.1.3; 7.3.5; 5.10.7; நெடுந். பா. 13

குவலயாபீடவதம்.
பெரி. திரு. 2.5.1; 2.5.6; 2.3.1; 2 8.3; 3 8.4; 2.10.7; 3.6.6.3; 10.3; 4.1.9; 4 2.4; 4 3.7; 4.5.4; 4.6.7; 4 7.4. 4.8.1; 4.8.2; 6.10-3; 7.8.8; 7.8.9; 8.1.4; 3 3.2; 8.5.4; 8.6.6; 8.6.8; 9 2.6; 9.4.8; 9.9.7; 9.10.8; 10.1.9; 10.7: 14. 11.2.2; 11.4.10;
சிறியதிருமடல் அடி 75, நெடுந். பா. 25.

மல்லர்களை வதைத்தது.
2.10.7; 3.3.1; 4.2.4; 4.3.7; 4.6.6; 5.4.7; 6.3.9; 6.7.5; 7.8.9; 8.6.8; 10.10.5.

68. பெரி. திரு. 3.3.4; 3.7.7; 4.6 1 5; 4.10.3; 5.1.10; 6.7.5; 6.10.2; 10 7.12; 10 8.8;
சிறிய திருமடல் அடி 27—38.

69. பெரி. திரு. 4.2.2;

70. பெரி. திரு. 1.5.5: 1 8.8; 2 8.4; 3 1,8; 3 2.8; 3.3.1.6; 3.6.5; 3.10.8.

71. பெரி. திரு. 4.2.3; 4.5 1; 4.7.3; வ 5.1 7; 10.7.7; 10 9.2; 10.10.3; 11.1.1; 11 2 1; 11.8.10.
பெரிய திருமடல் அடி 139—140.

72. பெரி. திரு. 1.2.3; 1.4 6;

73. பெரி. திரு. 1.10.7;

74. பெரி. திரு. 2 9 9; 2.10 7; 3 3 5; 3 4 4; 4 4 4; 4 5.3; 5.1 6; 5.2.2; 5 9 8; 5 5 4; 6.5 5; 6,10.5; 7.7.7; 7.8 8; 8.3.3; 8 6 9 119 2.10; 11 7.0.

75. பின்னிணைப்பு-1ல் காண்க.

76. ந. சுப்புரெட்டியார், வைணவ உரை வளம், முதற் பதிப்பு. (சென்னை, 1985). ப. 1992—104.

77. பெரி. திரு. 8.8.10;

78. பெரி. திரு. 5.1.9; 5 3 8; 55.6.1; 5.7.3
பெரிய திருமடல் அடி 121;

79. பெரி. திரு. 11.4 8;

80. பெரி. திரு. 5.3.2; 7.8 2;

81. பெரி. திரு. 1.2.5; 1.2;6; 1.81.2; 3.6.7; 5.9.1;

82. பெரி திரு. 5.4.2; 5.7.6. 7.3.6; 9.1.1; 9.8.8; 9.9.1; 11.8.7; நெடுந். பா. 9, 12, 15. பெரிய திருமடல் அடி 118. திருவெழு. அடி 25—28.

83. குறுந் - பா. 11.

## இயல்—4

# திருமங்கை ஆழ்வார் பாசுரங்களில் வைணவத் திருத்தலங்கள்

### 4.0. திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இடம்பெறும் வைணவத் திருத்தலங்கள்

*இவ்வியலில் தலம், ஆலயம், மூர்த்தி, தீர்த்தம்— விளக்கம், திருமாலுக்கு உரிய வைணவத் திருத்தலங்கள். திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இடம்பெறும் வைணவத் திருத்தலங்கள் ஆகிய செய்திகள் விளக்கமுறுகின்றன.*

### 4-1-0 தலம், ஆலயம், மூர்த்தி, தீர்த்தம்—விளக்கம்,
### 4-1-1 திருத்தலம்

*இறைவன் எங்கும் எதிலும் நிறைந்தவன். ஆயினும் மனிதப்பிறவியில் ஊனக்கண்களின் காட்சி அளவிற்காக மூர்த்தி நிலையில் குறிப்பிட்ட சில இடங்களில் எழுந்தருளி யுள்ளான் அவை யாவும் திருத்தலங்கள் எனப் பெயர் பெறுகின்றன. ஆயினும் சிறப்பாக ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்ட எம்பெருமானின் தலங்கள் திவ்ய தேசங்கள் எனப் பெயர் பெறுகின்றன.*

*திருத்தலங்களை ஸ்வயம்வ்யக்தம், ஸைத்தம், ஆர்ஷம், திவ்யம், மாநுஷம் என ஐந்து வகையாகப் பிரிப்பர். பிறர் ஸம்பந்தமின்றி எம்பெருமான் தானே வந்து அவதரித்த தலம் "ஸ்வயம்வ்யக்தம்" எனப்படும். ஸித்தர்களால் ஸ்தாபிக்கப் பட்டது "ஸைத்தம்" ஆகும். முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது "ஆர்ஷம்". தேவர்களால் அமைக்கப்பட்டது "திவயம்". மானிடரால் நிர்மானம் செய்யப்பட்டது*

"மாநுஷம்" ஆகும்.[1] இவற்றுள் ஸ்வயம்வ்யக்தமே மிகவும் சிறந்ததாம். ஸ்ரீரங்கம் ஸ்ரீமுஷ்ணம், திருவேங்கடம், ஸாளக்ராமம், நைமிஸம், தோதாத்ரி (வானமாமலை), புஷ்கரம், பத்ரி ஆகிய எட்டு க்ஷேத்திரங்கள் ஸ்வயம்வ்யக்த க்ஷேத்திரங்களாகும்.[2] திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகளுள் மாநுஷ மொழிந்த மற்றைய மூவகை அர்ச்சையினைச் சேர்ந்தவை என்றும், மூவகை அர்ச்சையிற் சேர்ந்த திருப்பதிகளுள்ளும் சில ஆழ்வார்களது மங்களாசாசனம் பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகளிற் சேர்ந்தனவாகாமல், புராண ஸ்தலங்களென்றும் சிறப்பித்துக் கூறப்படுகின்றன.[3]

தலவழிபாடும், இறைவழிபாட்டுக்கு ஒப்பானதாகவே கருதப்படுகின்றது. தலயாத்திரை செய்வது, இறையருள் பெறுவது அனைத்துச் சமயங்களில் காணப்பெறும் பொது நெறியாகத் திகழ்கின்றன. அதே நேரத்தில் இறை அருள் பெறுவதற்குத் தலயாத்திரை போவதால் மட்டும் பயனில்லை; உலகப் பொருள்கள்மேல் பற்றற்ற, தூய்மையான மனமும் தேவை என்பதை இந்துசமயம் வலியுறுத்துகின்றது.[4]

## 4-1-2 ஆலயம்

ஆலயம் என்பது எம்பிரான் எழுந்தருளி இருக்கும் புனித இடமாகும். ஆலயம் என்பதை ஆ+லயம் எனப் பிரித்து ஆன்மாக்கள் தம்மை மறந்து ஒன்றிவிடும் புனிதமான இடம் எனப் பொருள்கொள்ளலாம். இறைவன் மூர்த்தி நிலையில் தங்கி இருக்கும் ஆலயங்கள் உள்ள இடங்கள் திருத்தலங்களாகச் சிறப்புப் பெற்றன. இந்த ஆலயங்கள் பண்டு முதல் இன்றுவரை மனிதனின் மனஅமைதிக்கு இருப்பிடங்களாக இருந்துவருகின்றன.

திருத்தலங்களில் உள்ள ஆலயங்களில் மூர்த்தி, தீர்த்தம் ஆகியன காணப்படுகின்றன.

## 4-1-3 மூர்த்தி

மூர்த்தி என்பது இறைவனின் பல்வேறு உலகக் காட்சி வடிவங்களாகும். மேலும் அது சமூகம் இறைவனுக்குத் தம்தம்

நோக்கில் அமைத்துக்கொண்ட வடிவமாகும். எப்பொருளால் இறைவன் திருவுருவை அமைத்து வழிபட்டாலும் அப்பொருளில் இறைவனின் ஆற்றல் வந்து தங்கும் என்பது தத்துவக்கருத்தாகும்.[5] மக்கள் இறைவனுக்குப் பல்வேறு உருவம் கொடுத்து வணங்கினர் இவற்றுள் வைணவர் இறைவனுக்குத் "திருமால்" என்ற பெயர் சூட்டி, சங்கு, சக்கரத்தோடு கூடிய வடிவம் அளித்து வழிபட்டனர். இவ்வாறே மற்ற சமயத்தாரும் அவரவர் எண்ணத்தின் அடிப்படையில் இறைவனுக்குப் பல்வேறு வடிவம் கொடுத்தனர்.

## 4-1-4 தீர்த்தம்

தீர்த்தம் என்பது இறைவனின் திருக்கோயில்களில் காணப்படும் நீர்நிலைகளாகும். தெய்வத்திற்கு எவ்வளவு ஆற்றல் உண்டோ அவ்வளவு ஆற்றல் தீர்த்தங்களுக்கும் உண்டு என்பது இந்துமத நம்பிக்கையாகும்.[6] இந்தீர்த்தங் கள் புண்ணிய நீர்நிலைகள் எனப்போற்றி வழங்கப்படு கின்றன. மேலும் இறைவனை வழிபடுபவரை அதற்குத் தகுதியாகச் செய்யும் சிறப்பினை இவை பெறுகின்றன

## 4-2 திருமாலுக்குரிய திருத்தலங்கள்

திருத்தலங்கள் திருமாலுக்குரியன மொத்தம் நூற்று எட்டாகும்.

**"ஈரிருபதாஞ்சோழ மீரொன்பதாம் பாண்டி**
**மோர்பதின்மூன்றாமலைநா டோரிரண்டஞ் சீர்நடுநா**
**டாறோடீரெட்டுத் தொண்டயன் வடநாடாறிரண்டு**
**கூறுதிரு நாடொன்றாக் கொள்"[7]**

சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பது பாண்டி நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டு. மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்று. நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டு. தொண்டை நாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டு. வடநாட்டுத்

திருப்பதிகள் பதின்மூன்று ஆக வைணவத் திருத்தலங்கள் நூற்று எட்டாகும்.

## 4-3-0 திருமங்கை பாசுரங்களின் வைணவத் திருத்தலங்கள்

ஆழ்வார் திருமங்கை, ஆழ்வார்களிலேயே அதிக அளவுக்குத் திருத்தல தரிசனம் பெற்று, அத்திருத்தல மூர்த்தி களைக் கண்ணாரக் கண்டு பக்திப் பரவசத்தில் அவர்களிடத்து ஆழங்கால்பட்டு—அவனையும், அவனது திருத்தலங்களையும் மனங்குளிர வாயார பாடிக்களித்தவர். இவர் சென்ற கண்ட திருத்தலங்கள் மொத்தம் என்பத்தாறாகும் மானிடர் செல்வதற்கு மிகவும் அரியதாயுள்ள திருத்தலங்களையும் இவர் நேரில் சென்று கண்டாற்போல் பாடியுள்ளார். தனது பக்திக் கவித்திறத்தால் அவற்றைப் பற்றிய தமது கேள்வி ஞானத்தால்—ஆழ்வார் அவ்வாறு பாடி இருக்க வாய்ப்பிருக் கிறது. அவற்றின் சிறப்பு பற்றியும் ஆழ்வாரால் அவை பாடப்பட்ட நிலைகளையும் ஈண்டு நோக்கலாம். அவ்வாறு நோக்கும்பொழுது ஆழ்வார் திருத்தலங்களை அமைத்த முறையிலேயே ஆய்வாளரும் இவ்வியலில் அமைத்துச் செல்கிறார்

## 4-3-1 திருப்பிருதி

ஹிருஷி கேசத்திலிருந்து பத்ரிநாத் செல்லும் வழியிலுள்ள ஜோஷிட்டம் என்ற இடமிது

இத்தலமூர்த்தி புஜங்கசயனம்—கிழக்கே திருமுக மண்டலத்துடன் திகழ்கிறான் தாயார் பரிமளவல்லி நாச்சி. இத்தலத்திலுள்ள தீர்த்தங்கள்—இந்திரதீர்த்தம், கோ வர்த்தன தீர்த்தம், மானஸரஸ் என்பன. விமானம்— கோவர்த்தன விமானம். பார்வதிதேவிக்கு இத்தலத்து இறைவனது திருக்காட்சி கிடைத்தது என்பர்.

இத்தலத்தைப் பற்றி பல்வேறு கருத்துக்கள் இடம்பெறு கின்றன இப்போது ஆதிசங்கரரால் கட்டப்பட்ட நரசிம்மர் ஆலயமும், வாசுதேவர் ஆலயமும் உள்ளன. இப்

பெருமாளையே ஆழ்வார் பாடியுள்ளார் என்பர். நந்தப் பிரயாகைத்தான் திருப்பிருதி என்றும் சிலர் கூறுவர். இது இரண்டுமில்லை. அது கங்கைக் கரையில் இல்லை. இமய மலையின் உட்புறப்பகுதிகளில் எங்கோ இருக்கிறது என்றும் பல்வேறு கருத்துக்கள் உள.

திருப்பிருதி என வழங்கப்படும் நந்தப்பிரயாகையில்—இந்நந்த பிரயாகையிலிருந்து ஆறுமைல் தூரத்தில் இராவணன் சிவனைக் குறித்து தவஞ்செய்து கைலாச மலையைத் தூக்கியதாகக் கூறுவர். ஆதிசங்கரர் இவ்விடத்தில் ஜியேஷ் பீடத்தை அமைத்து ஒரு முசுக்கட்டை மரத்தடியில் தவஞ்செய்து அருள்பெற்று, சங்கரபாஷ்யத்தை இயற்றினார் என்பர்.[8]

திருமங்கை ஆழ்வார் பத்துப் பாசுரங்களால் இத்தலத்தை —தலத்து மூர்த்தியைப் பாடுகிறார்.

### ஆழ்வார் பாசுரங்களில் திருப்பிருதி

பத்துப் பாசுரங்களால் இத்தலத்தை மங்களாசாசனம் செய்யும் ஆழ்வார், இத்தலத்தின் ஒருசில காட்சிகளைக் காட்டுமுகமாக அத்தலத்தின் குறிஞ்சி நிலத்தோற்றத்தைக் காட்டிச் செல்கிறார்.

ஆனைகள் மிக்கு காணப்படுகின்றன; ஆங்கிருந்த ஆண்களிறு ஒன்று இளமூங்கில் ஒன்றை வாங்கி அருகிலிருந்த தேனடையில் அதனைத் தோய்த்துத் தான் உண்ணாது தனது அருகிலிருக்கும் தனது துணைக்கு அளிக்கிறதாம்.[9] இத்தலத் திறைவனைப் போன்றே இத்தலத்தில் வாழும் விலங்குகளும் துணை சேர்ந்திருக்கும் இருப்பினை ஆழ்வார் குறிப்பாகக் காட்டுகிறார்.

ஓங்கி வளர்ந்துள்ள மாதவிக் கொடிகளின் மனம் எங்கும் கமழ்கின்றது. இம்மாதவிக் கொடிகள் ஆகாயத்தைத் தொடுமளவுக்கு ஓங்கி வளர்ந்துள்ளன. வான்மேசங்களின் உலாவரல் நிகழ—இவை தடையாக இக்கொடிகள் அம்

மேகங்களோடு பிணங்குகிறதாம்.[10] இப்படி ஒரு காட்சியை' உயர்வு நவிற்சியாக—இத்தலத்தின் குறிஞ்சி நிலவளச் சிறப்பைக் காட்டுமுகமாக ஆழ்வார் காட்டிச் செல்கிறார்.

பிண்டி மரத்தில் மலரும் மலர்களில் சென்று தேன் உண்ணாது வண்டுகள் அவை நெருப்பென அஞ்சி செல்லாது இருக்கின்றனவாம்[11]. விண்ணில் மேகங்கள் உலவுகின்றன: முழக்கம் செய்கின்றன. அம்முழக்கத்தினைக் கேட்ட பெரிய மாசுணம் களிறுதான் முழங்குகிறதோ என வரைபோல் பெயர்கிறதாம்.[12]

திருப்பிருதியில் இமையோர்கள் பிரமனோடு சென்று ஆங்கு எழுந்தருளியுள்ள மூர்த்தியினைத் தொழுகின்றனராம்.[13]

இவ்வாறு திருப்பிருதியின் குறிஞ்சிநிலவளக் காட்சியையும், அதன் உயர்பெருமையையும் ஆழ்வார் பாடிச் செல்கிறார்; இத்திருத்தலத்தில் ஈண்டு எழுந்தருளியுள்ள மூர்த்தியிடத்து ஆழங்கால்படுகிறார்.

## 4-3-2 திருவதரியாச்சிரமம் (பத்ரிநாத்)

இமயமலையில் இருக்கும் திருத்தலமிது. வடநாட்டுத் திருப்பதிகளுள் இதுவுமொன்று.

மூலவர்—பத்ரிநாராயணன். வீற்றுருந்த திருக்கோலத்தில் எழுந்தருளி இருக்கிறான்; கிழக்குநோக்கித் திருமுக மண்டலமுளது. தாயார்— அரவிந்தவல்லி. தீர்த்தம்— தப்தகுண்டம். தலவிருட்சம்—இலந்தைமரம். விமானம்— தப்த காஞ்சந விமானம். இத்தலத்திறை நரனுக்குத் திருக்காட்சி கொடுத்ததாய் வரலாறுண்டு.

பதரீ என்ற வடசொல் வதரியெனத் திரிந்தது. வடமொழியில் இலந்தை மரங்களுக்கு பதரீ என்று பெயர். அம்மரங்கள் அடர்ந்து கிடக்குமிடமாதலால் இத்தலத்திற்கு இப்பெயர் ஏற்பட்டது.

இத்திருத்தலம் திருவஷ்டாக்ஷர மந்திரத்தின் அவதார தலமாய் விளங்குகிறது விசாலபுரி என்றும் இதற்கு வேறு பெயருண்டு.

இத்திருத்தலத்தை மங்களாசாசனம் செய்தவர்கள் இருவர். அவர்கள் பெரியாழ்வார், திருமங்கையாழ்வார். அவர்கள் பாடிய இருபத்திரண்டு பாசுரங்கள் இத்திருத்தலத் திற்கென உள[14]

திருவதரியின் இயற்கை எழிலினை கீழ்வருமாறு நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறார் ஆழ்வார் திருமங்கையார்.

**"மதுவுண் வண்டு பண்கள் பாடும் வதரி"**

**"வெறிகொள் வண்டு பண்கள் பாடும் வதரி"**

**"வாளை பாயும் தண்த டஞ்சூழ் வதரி"[15]**

வானவர்கள் கற்பக மலர்களைக் கொணர்ந்து வந்து வணங்கும் தன்மையான் வதரியான். வதரியான் பிரம்மா முதலிய தேவர்குழாம் சென்றிறைஞ்சும் சிறப்பினன் என வதரியில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தியைப் பலவாறு ஏத்திச் சிறப்பிக்கிறார்.

கங்கையின் கரையிலுளது இத்திருத்தலம்; இக் கங்கைநதி, அரம்பையர்களின் துகில், ஆரங்களை வாரிவந்து மணிகள் கொழித்து ஒழியுமாறு இழிகிறது.[16]

இவ்வாறு திருபத்ரிகாச்ரமத்தின் சிறப்புகள்ஆழ்வாரால் அவர் மனம் குளிரச் சிறப்பித்துப் பேசப்பெறுகின்றன. இப்படிப் பதரிகாச்மத்தின் வளச்சிறப்பைக் கூறுமுகத்தால் ஆங்கு எழுந்தருளியுள்ள இறைவனைக் கற்போர் எண்ணு மாறும், எண்ணிப் பக்திக்கொள்ளுமாறும் அமையும்படி பாசுரங்கள் பாடப்பெற்றுள்ளன.

### 4-3-3 திருச்சாளக்கிரமம்

நேபாள நாட்டிலுள்ள வைணவத் திவ்யதேசமாகும் திருச்சாளக்கிரமம். மூலவர்—ஸ்ரீமூர்த்தி. நின்ற திருக்

கோலம்; வடக்கு நோக்கிய திருமுகமண்டலம். தாயார்—ஸ்ரீதேவிநாச்சாரியார். தீர்த்தம்—சக்ரதீர்த்தம். கண்டகிநதி; விமானம்—கனகவிமானம். பிரம்மா, ருத்திரன், கண்டகிக்கு இத்தலத்து மூர்த்தியின் திருக்காட்சி கிடைத்ததென்பர்.

இத்தலம் இருக்குமிடத்தைப் பற்றி வேறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. நேபாள தலைநகரான காட்மண்டுவிலிருந்து 170 மைல் தூரத்திலுள்ள முத்தீ நாராயண க்ஷேத்ரம் (முக்திநாத்) போகும் வழியில்—கண்டகி நதிக் கரையிலுளது என்பது ஒரு கருத்து. ஸாளக்ரமம் முத்தீ நாராயண க்ஷேத்ரமே என்பது மற்றோர் கருத்து. கண்டகி நதிக் கரையிலுள்ள "தாமோதரகுண்ட" என்னுமிடமே ஸாளக்ரமம் என்பாருமுளர்.[11]

பூவுலகில் பாவிகள் தொகை பெருகுவதை அறிந்து பிரம்மன் அதிர்ச்சியுற, அவரது உடலில் வியர்வை பெருக, அவ்வியர்வைத் துளிகள் யாவும் சேர்ந்து 'கண்டகி' எனும் பெண்குழந்தையாயின. வளர்ந்த அந்நங்கை தேவர்கட்குத் தாயாக வேண்டுமெனத் தவம்புரிய, தேவர்கள் அவள் தவத்திற்குப் பலவாறு இடையூறு செய்தனர். அவள் அவர்களைப் புழுக்களாய்ப் போகுமாறு சபிக்க, அவர்கள் அவளை உயிரற்ற பொருள் ஆகும்படி சபித்தனர். பிரம்ம தேவன் இதனை இறைவனிடம் முறையிட, இறைவன் இரு சாபங்களும் நிறைவேற வேண்டுவதே என்றும், பூவுலகில் சாளக்கிரமத் தலத்தின் அருகேயுள்ள சக்கர தீர்த்தத்தில் தான் எழுந்தருளப் போவதாகவும், தேவர்கள் புழுக்களாய்ப் பவளத்தைத் துளைப்பதைப்போல் சாளக்கிரமங்களைக் குடையவேண்டும்; கண்டகி, நதியாக மாறி அவர்கள் மீது பாயவேண்டும் என்றும் அருளியதாகச் செய்தி.

ஆழ்வார்களுள் பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் பாடிய பன்னிரண்டு பாசுரங்கள் இத்தலத்திற்கு உரியன ஆகும்.

ஆழ்வார் திருச்சாளக்கிரமத்தின் ஊரழகு, நீர்வளம், வயல்வளம், சோலைவளம் ஆகியவற்றைத் தனது பாசுரங்களில் பின்வருமாறு சுவைபடப் பாடி மகிழ்கிறார்.

அமைதியும் ஆனந்தமும் நிறைவும் கொண்ட மனநிலை அலையும்போது ஒருவன் முழுநிறைவைப் பெற்றவனாகிறான். அந்நிலையில் இறைவனுக்குத் தான் ஆட்பட்டுப் பக்தனாகிறான். திருமங்கையிடத்தும் இப்போக்கைக் காணலாம்.

**"தடஞ்சூழ்ந் தெங்கும் அழகாய
சாளக் கிராமம்"**

**"சலஞ்சூழ்ந் தழகாய
சாளக் கிராமம்"**

**"...வயல்சூழ்ந்த
சாளக் கிராமம்"** [18]

மேலும் இத்தலத்தில் வண்டுகள் ரீங்காரமிடும் பொழில்களை உள்ளன. வயல்களில் தாமரை மலர்கள் மலர்ந்து கிடக்கின்றன; கயல்மீன்களோ அங்குமிங்கும் பாய்ந்து ஆட்டம் போடுகின்றன எனப் பொழில்—வயல்வளத்தை காட்டும் காட்சிகளில் ஆழங்கால்படுகிறார்.

இமையோர்கள் வந்து வணங்கும் சிறப்பினையுடையன் திருச்சாளக்கிராமத்தான்[19] என அத்தலத்து மூர்த்தியை ஏத்திப் பாடுகிறார் ஆழ்வார்.

## 4-3-4 திருநைமிசாரண்யம்

வடநாட்டுத் திருப்பதிகளில் இத்திருத்தலமும் ஒன்று.

மூலவர்—தேவராஜன்; நின்ற திருக்கோலம்; கிழக்கு நோக்கித் திருமுகமண்டலம். தாயார்—புண்டரீகவல்லி. தீர்த்தம்—சக்ரதீர்த்தம், கோமுகிநதி, நேமி, திவ்ய விச்ராந்த தீர்த்தம், தலவிருட்சம் தபோவனம். விமானம்—ஸ்ரீ ஹரி விமானம். இத்தலத்து இறை இந்திரன், சுதர்மன், தேவரிஷி,

வேதவியாசர் முதலியோருக்குத் திருக்காட்சி தந்ததாகச் செய்தி உண்டு.[20]

ஆழ்வார்களுள் திருமங்கையாழ்வார் மட்டுமே மொத்தம் பத்துப் பாசுரங்களால் இத்தலத்தை மங்களாசாஸனம் செய்துள்ளார்.

இத்தலத்தில் இமையோர் நாதனாகிய இந்திரன் முதலானோர் வந்து வணங்கி வேண்டுகின்றனராம்.[21]

## 4-3-5 திருச்சிங்கவேள்குன்றம் (அஹோபிலம்)

வடநாட்டு வைணவத் திருப்பதிகளுள் இத்தலமும் ஒன்று.

இத்தலத்தில் அஹோபில நரசிம்மன், வராஹ நரசிம்மன், மாலோல நரசிம்மன், யோகாநந்த நரஸிம்ஹன், பாவந நரஸிம்ஹன், காரஞ்ச நரஸிம்ஹன், சக்ரவட நரசிம்ஹன், பார்கவ நரஸிம்ஹன், ஜ்வாலா நரசிம்ஹன் என்ற ஒன்பது நரஸிம்ஹர்களின் கோவில்கள் இருப்பதால் இத்தலம் நவந்ருஸிம்ஹ க்ஷேத்ரமென்றும் வழங்கப்படுகிறது

மூலவர்—ப்ரஹ்லாதவரதன், லக்ஷ்மீ நருஸிம்ஹன். வீற்றிருந்த திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம். தாயார்—அம்ருதவல்லி, செஞ்சுலக்ஷ்மி. தீர்த்தம்—இந்திர, ந்ருஸிம்ஹ, பாபநாச, பார்க்கவ, தீர்த்தங்கள். விமானம்—குகை விமானம்.

நரசிம்மன் இத்தலத்தில் வேண்டுவனவாய் வந்து செஞ்சுலட்சுமியை மணந்ததாகப் புராண வரலாறு.

கருடாழ்வார் இறைவனது நரசிம்ம அவதாரம் காண விரும்பி தவஞ்செய, இறைவன் அவருக்காக இங்கு நரசிம்மனாகக் காட்சி தந்து, இரணியனை அழித்தல், பிரகலாதனைக் காத்தலாகிய நிகழ்வுகளைக் காட்டி, ஒன்பதுவித திருக்கோலங்களில் அர்ச்சாவடிவினாவாகக் கோயில் கொண்டதாகப் புராண வரலாறுண்டு. கருடன் இருந்து தவஞ் செய்ததால் இம்மலை கருடாத்ரி, கருடாசல

மென வழங்கப்பெறுகிறது. இவ்வாறு பக்தர்க்கு அருளவந்த பரந்தாமன் இங்கேயே தங்கிவிட, அவரைப்பெற தாய் வேடர் (செஞ்சு) குலத்தில் பிறந்து இறைவனை மணந்ததாய்த் தலவரலாறு. இங்கு ஆதிசங்கரரைக் கபாலிகன் ஒருவன் கொலை முயற்சியில் இருந்து காத்தருளி யவர் இத்தலத்து இறைவன் எனத் தலவரலாறு மேலும் கூறுகிறது.[22]

பிரதாபருத்ரன் எனும் அரசன் இங்குச் சிவலிங்கப் பிரதிஷ்டைச் செய்ய விரும்ப நரசிம்மர் அவன் கனவில் தோன்றி, நான் ஏற்கனவே இங்குள்ளேன். நீ புதிதாய்ப் பிரதிஷ்டை செய்யாதே எனக்கூற, அம்மன்னன் வந்து பார்த்தபோது லிங்கமூர்த்தி ஒருபுறம் காட்சி தந்தார் என்பர்.[23]

திருமங்கையார் மட்டும் பத்துப் பாசுரங்களால் இத் தலத்து இறைவனைப் பாடிப் பரவசமுறுகிறார்.

சிங்கவேள் குன்றம் மானிடர் எளிதில் சென்றுவர இயலாதபடிக்குக் கடுமையானது; கொடுமையானது. தெய்வ மல்லால் மானிடர் செல்லவொண்ணாத[24] தன்மையினதான இத்திருத்தலத்தில் வாழும் வனவிலங்குகள் தமக்குத் தெரிந்த வழிகளில் முயன்று இத்தலத்து இறைவனை வழிபடு கின்றனவாம்.

ஆவிக்கும்—ஆனைக்கும் கொடூரமான யுத்தம் நிகழ் கிறது; இறுதியில் ஆனை மடிகிறது. வென்ற அவ்வாவி தனது பக்திப்பெருக்கோடு அவ்வானையினது கொம்பைக் கொண்டுவந்து, நரசிம்மனின் திருவடிகளில் இட்டு வணங்கு கிறது.[25] ஆங்குவாழ் வனவிங்குகளாலும் வணங்கப்படுபவன் சிங்கவேள்குன்ற நரசிம்மன் என இத்தல மூர்த்தியைச் சிறப்பிக்கிறார் ஆழ்வார்.

சிங்கவேள்குன்றின் கடுமையை—கொடுமையை ஆழ்வார் ஆங்கு நிகழும் ஒருசில காட்சிகளைக் காட்டி உணர்த்து கிறார்.

"ஓய்ந்த மாவும் உடைந்தகுன்றும் அன்றியும் நின்றழலால்
தேய்ந்த வேயும் அல்லதில்லாச் சிங்கவேள் குன்றமே"

"நின்ற செந்தீ மொண்டுசூறை நீள்விசும் பூடிரிய
சென்று காண்டற் கரியகோயில் சிங்கவேள் குன்றமே"

"நெரிந்த வேயின் முழை முழையுள் நின்று நீள்நெறி
வாயுழுவை
திரிந்த ஆனைச் சுவடுபார்க்கும் சிங்கவேள் குன்றமே"

"நெல்லி மல்கிக் கல்லுடைப்பப் புல்லிலை யார்த்து,
அதர்வாய்
சில்லு சில்லென் றொல்லறாத சிங்கவேள் குன்றமே"[20]

மகளிர் 'செல்வதற்கு அரியது' இத்தலம் என்கிறார் திருமங்கையார்.

"சென்று காண்டற் கரிய கோயில்"

"தினைத்த னையுஞ் செல்லவொண்ணாச் சிங்கவேள்
குன்றமே"

"தெய்வ மல்லால் செல்லவொண்ணா சிங்கவேள்
குன்றமே"[21]

இவ்வாறு ஆழ்வார் பாசுரங்களில் சிங்க வேள்குன்றத் திருத்தலம் சிறப்பிடம் பெறுகிறது.

## 4-3-6-0 திருவேங்கடம்

திருவேங்கடத் திருத்தலப் பெயர்க்காரணம், அமைப்பு, திருவேங்கடவன் திருத்தோற்றம், வைணவத்தலம் வேங்கடம், தலவரலாறு, ஆழ்வார் திருமங்கை பாசுரங்களில் வேங்கடம் ஆகிய செய்திகள் இங்கு விளக்கப்பெறுகின்றன.

## 4-3-6-1 பெயர்க்காரணம்

திருவேங்கடத்தில் திருமால் திருவேங்கடவனாக எழுந்தருளி காட்சி தருகிறான். ஸ்வயம்வ்யக்த திருத்தலங்களுள் இத்தலமும் ஒன்று.

வேங்கடம் என்ற சொல்லுக்கு இரு பொருள்கள் உள. ஒன்று வேம்—பாவங்கள், கடம்—எரித்தல். உயிர்களின் பாவங்களை எரித்து உய்விக்கும் திருத்தலம் என்பதாகும்.[28] மற்றொன்று வேம்—அழிவின்மை, கடம்—ஐசுவரியம். தன்னை அடைந்தாருக்கு அழிவற்ற ஐசுவரியங்களைத் தருவது என்பதாகும்.[29]

**சென்றுசேர் திருவேங்கிட மலை**
**தொழுதொழு, வேங்கடவனை**
**உன் வினைகள் நீங்கிவிடும்**[30]

என்ற நம்மாழ்வார் வாக்கும்,

**"வினைச்சுடரை நந்துவிக்கும்**
**வேங்கடமே வானோர்**
**மனச்சுடரைத்தூண்டும் மலை"**[31]

என்ற பொய்கையாழ்வார் வாக்கும் வேங்கடமென்பது பாவத்தை எரித்து, உய்விக்கும் திருத்தலம் என்பதையே உணர்த்துகின்றன. திருமலை என்பது நித்யசூரியன் விண்ணுலகத்திலிருந்து நேராக மலையிலுள்ள நாதனைத் தொழும் தலத்தினைக் குறிக்கின்றது[32] இராமாவதாரத்தின் போது சூர்ப்பனகையாக இருந்த உயிர், மறுபிறவியில் அந்தணனாகப் பிறந்து, மனைவியைப் பிரிந்தது முதலான எண்ணற்ற பாவங்களைச் செய்து திருவேங்கடம் அடைந்த நிலையில் தன் பாவங்கள் எரிந்த சாம்பலாக உய்ந்து மகிழ்ந்தது என்பது வரலாறு.[33] ஆதலால் வேங்கடம் என்பது உயிர்களின் எண்ணற்ற பாவங்களை நீக்கி அவ்வுயிர்கள் உய்ந்து மகிழ அனைத்து வளங்களையும் கொடுக்கும் திருத்தலம் எனத் தெரியலாம்.

மலைகளில் புனிதமும் புகழும் பெற்ற மலைகள் பல உள்ளன. ஆயினும் "திரு" என்ற அடைமொழியுடன் சிறப்பித்து வழங்கப்படுவது வேங்கடவனது திருமலையேயாகும்.[34]

### 4-3-6-2 அமைப்பு

திருவேங்கடம் ஆந்திரப் பிரதேசம், சித்தூர் மாவட்டத்தில் உள்ள சந்திரகிரி தாலுக்காவில் அமைந்துள்ளது. இத்தலம் திருமலை; திருச்சானூர், திருப்பதி என்று மூன்று பிரிவுகளாகத் திகழ்கிறது.

இத்திருவேங்கடமலை சேஷாத்ரி அஞ்சனாத்ரி, நாராயணாத்ரி விருஷாத்ரி, கருடாத்ரி, வேங்கடாத்ரி, திருமலை ஆகிய ஏழுமலைகளின் தொடராக அமைந்துள்ளது. மேலும் இத்திருமலை, முன்னூறு மைல் நீளமும் முப்பது மைல் அகலமும் கொண்டு விளங்குகிறது.

### 4-3-6-3 திருவேங்கடவனது தோற்றம்

திருவேங்கடமலையில் எம்பெருமான் திருவேங்கடவனாக நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளி உள்ளான். கிழக்கு நோக்கித் திருமுகமண்டலம் அமைந்துள்ளது. திருவேங்கடவனாகிய திருவழகன் சங்குசக்கரம் முதலிய பஞ்சாயுதங்களையும், தாழ்சடையையும், நீள்முடியையும், நாகாபரணம் என்னும் அணியையும், பொன்நாணையும் கொண்டு, அலர்மேல் மங்கை உறை மார்பனராகக் காட்சி தருகிறான். இதனைப் பேயாழ்வார்,

> **"தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்**
> **சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்**
> **திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு**
> **இரண்டுருவு மொன்றாய் இசைந்து"[35]**

என்று குறிப்பிட்டுள்ளார்.

திருமலையில் எழுந்தருளியுள்ள வேங்கடவனது திருக்கரங்களுள் ஒன்று அவனது பாதத்தை நோக்கியும், மற்றொன்று அவனது தொடையின் மீதும் அமைந்துள்ளது, சீவாத்மாக்களாகிய உயிர்களைத் தன் பாதத்தில் சரணடைந்து உய்யும்படி உணர்த்துவதாகவும், தன்னை அடைந்தார்க்கு ஈகவ

ஐசுவரியமும் தரும்பொருட்டு, "என்னை அடைவதற்கு உள்ள தடைகள் முழங்கால் அளவினது: அவற்றை எளிதில் கடந்து விடலாம்'' என்று உரைத்து ஊக்கப்படுத்துவதாகவும் அவனது இத்திருத்தோற்றம் அமைந்துள்ளது எனலாம்.

## 4-3-6-4 வைணவத் திருத்தலம் வேங்கடம்

வேங்கடவனைத் திருமால் என்றும், இத்தலத்தை விஷ்ணுதலம் என்றும் வைணவர் அறுதியிட்டுக் கூறுவர். இக்கருத்தையே வேதம், இதிகாசம், புராணம், ஸ்ரீபாஞ்ச ராத்ரம் திவ்வியப்பிரபந்தம் முதலிய கிரந்தங்கள் சிறப்பித்துக் கூறுகின்றன.[16]

தாழ்சடை, சூழரவு, ஒண்மழுவுடன் திருவேங்கடவன் காட்டி தருவதோடு, வில்வ அர்ச்சனையை ஏற்றுத் திகழ்கிறார். இதனால் திருமலைத் தெய்வம் "சிவபெருமான்" என்று சைவர்கள் கொண்டாடினர்.

எம்பெருமானின் கிரீடத்தில் சக்கரமும் காணப்படுவ தோடு கோவிலின் வெளிப்பிரகாரங்களிலும் விமான நிலையத் திலும், நான்கு மூலைகளிலும் காணப்படுகின்றன. சாரதா நவராத்திரியின்போது திருமலையில் பிரும்மோற்சவம் நிகழ்கிறது. எனவே திருமலைத் தெய்வம் சக்தியே என்பர் தேவிபக்தர்.

பொதுவாக மலைமேல் உறைந்து அருள்பவன் முருகன். திருவேங்கடவன் மலை மேல் நின்றவண்ணம் காட்சி தருவதோடு. பாலாஜி என்ற பெயரையும் தாங்கி நிற்கின்றான். இதனால் திருமலைத் தெய்வம் பாலசுப்பிரமணியாகிய முருகபக்தர்.

மேற்கூறிய தெய்வங்களின் அத்தனை அம்சங்களும் நிறையப்பெற்று, படைத்து, காத்து, அழிக்கும் முழுமுதற் பொருளாய்ச் சரணடைந்தோரை உய்விப்பவனாக வேங்கடவன் திருமலையில் காட்சி தருகின்றான். இராமாநுசர் திருவேங்கடவன் முன்பு சங்கு, சக்கரம் என்னும் வைணவச் சின்னங்களோடு சிவச்சின்னங்களான சூலம், உடுக்கை

ஆகியவற்றை வைக்க, வேங்கடவன் சங்கு சக்கரம் தாங்கிக் காட்சித் தந்து விளங்கினான். இதனால் இராமாநுஜர் "வேங்கடவன் திருமாலே" என நிறுவி திருமலையினை வைணவத் திருத்தலமாக ஏற்கச்செய்தார்.[37]

## 4-3-6.5 தலவரலாறு

நாராயணமுனிவர் என்னும் பிரம்மாவின் யோசனைப்படி திருவேங்கடத் தலத்தைத் தேர்ந்தெடுத்து தவம்செய்தார். திருமால் அவர்முன் தோன்றி, "வேண்டும் வரம்கேள்" என்றதற்கு உலகமக்கள் அனைவரும் யோகம் செய்து உன்னைக் காணும் வலிமையற்றவர்கள். ஆதலால் நீ இங்கேயே எழுந்தருளி அனைவர்க்கும் அருள்செய்ய வேண்டுமென வேண்டிக்கொண்டார் என்பது இத்தலம் பற்றிய வரலாறுகளில் ஒன்று.[38]

பிருகுமுனிவர் மும்மூர்த்திகளுள் முதல் மூர்த்தி யார் என்பதை அறியும்பொருட்டு பிரம்மா, சிவ, விஷ்ணு உலகங் களுக்கும் சென்றதாயும் திருமாலை மார்பில் உதைத்து, ஆணவம் அழியப்பெற்று திருமாலே முதல் மூர்த்தி என அறிந்ததாயும் புராணங்கள் கூறுகின்றன. தானுறைந்திருக்கும் திருமார்பில் பிருகுமுனிவர் உதைத்ததால் மகாலட்சுமி அதிக கோபம்கொண்டு வேதனையுடன் திருமாலைப் பிரிந்து பூஉலகம் சென்றுவிட திருமால் திருமலையில் ஒரு புளிய மரத்தின் கீழுள்ள புற்றில் இடம்கொண்டார். சிவனும், பிரம்மனும் கன்றாகவும், பசுவாகவும் மாற, திருமகள் இடைச்சியாக மாறிச் சந்திரகிரி மன்னனுக்குப் பசுவையும், கன்றையும் விற்றாள். அப்பசு நாளும் புற்றின் கீழ் எழுந்தருளியிருக்கும் எம்பிரானுக்குப் பால் நினைந்து ஊட்டியது. இச்செய்தி அறிந்த இடையன் கோடரியால் பசுவைத் தாக்க, எம்பெருமான் அதைத் தடுத்து பசுவைக் காத்தருளினார். குடிமகன் தவறு அரசனைச் சேரும் என்று கூறித் திருமால் சந்திரகிரி மன்னனைப் பிசாசாக மாறும்படி சபித்தார். அம்மன்னன் மறுபிறவியில் ஆகாசராச

னாகப் பிறக்க அவனது மகள் பத்மாவதியை ஸ்ரீநிவாசன் ஒரு கோடியே பதினான்கு இலட்சம் பொன் கடன்பெற்றுத் திருக்கல்யாணம் செய்து, திருச்சானூரில் பத்மாவதியும், திருமார்பில் திருமகளும் உறையும்படி, திருவேங்கடவன் ஆகக் காட்சி அளிக்கிறார். இது திருவேங்கடம் பற்றிய தல வரலாறாகும்.[39]

மூலவர் திருவேங்கடமுடையான்; நின்ற திருக்கோலம்; கிழக்கு நோக்கித் திருமுக மண்டலம்· தீர்த்தங்கள்—சேஷசல ஸ்வாமி புஷ்கரிணி, கோனேரிதீர்த்தம், வைகுண்ட தீர்த்தம், சக்ரதீர்த்தம், ஜபாலிநீர்த்தம், வருணதீர்த்தம், ஆகாசகங்கை, பாபவிநாசம், பாண்டவதீர்த்தம், குமாரதாரை, இராமகிருஷ்ண தீர்த்தம், தும்புருதீர்த்தம், சேஷதீர்த்தம், ஸாகஸந்தன தீர்த்தம், யுத்தகள தீர்த்தம், சீதம்ப தீர்த்தம், விமானம்—ஆனந்த விமானம். இத்தலத்தினது தெய்வத்திருக் காட்சி தொண்டைமான் சக்கரவர்த்திக்குக் கிடைத்ததாக வரலாறு.

இறைவன் இத்தலத்தில் மனமுகந்து ஆனந்தத்துடன் எழுந்தருளி இருப்பதால் இத்தலத்து விமானம் ஆனந்த விமானம் எனப் பெயர் பெற்றதாக தல வரலாறு கூறுகிறது· இத்தலத் திருக்கோயிலில் பிரம்மதேவன் உலக நன்மைக்காக இரண்டு திருவிளக்குகளைத் திருவேங்கடமுடையானுக்கு ஏற்றி வைத்தாகவும் அவை இன்று பிரகாசிப்பதாகவும் கூறுவர்.[40]

### 4-3-6-6. ஆழ்வார் திருமங்கை பாசுரங்களில் வேங்கடம்

திருவேங்கடத்திருத்தலதைப் பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகரர், திருமழிசை, திருப்பாணர், திருமங்கை, பொய்கை பூதம், பேய், நம்வாழ்வார் ஆகியோர் மங்களாசாசனம் செய்துள்ளனர். திருமங்கையார் நாற்பது பாசுரங்களில் இத்தலத்திறைவனைச் சேவிக்கிறார்.

திருமலையின் இயற்கை எழில், குறிஞ்சி நிலக் காட்சி ஆகியவற்றைத் தனது பாசுரங்களில் சுவைபடக் கூறிச் செல்கிறார் ஆழ்வார் திருமங்கை.

ஆழ்வார் தான் சென்று தரிசித்து பரவசமுற்ற திருமலையினது திவ்ய திருக்காட்சியினை அதன் இயற்கை அழகினை அப்படியே நமக்குத் தனது பக்தி கலந்த கவித்திறத்தால் படம் பிடித்துக் காட்டுகிறார்.

திருமலையானது திண்ணிய வரைகள் நாற்புறமும் சூழப் பெற்று விளங்குகின்றன. விண்ணைத் தொடும் நீள்சிகரங்களுடன் விளங்குகின்றன. உயர்ந்து விளங்கும் திருமலையின் குன்றுகளில் மேகங்கள் படிகின்றன; முழக்கமிடுகின்றன. மேகங்கள் உலாவருவதால் திருமலை எப்போதும் குளிர்ந்திருக்கிறதாம்.[41]

திருமலையில் சோலைகள் சூழ்ந்திருக்கின்றன; சோலைகளில் வாசமலர்கள் பூத்துக் குலுங்குகின்றன; மொட்டுக்கள் மலர்ந்த நிலையில் தேனானது பெருக்கெடுத்து வழிகின்றது. கமலமலர்கள் நிறைந்திருக்கும் சுனைகளுக்கு ஆங்குப் பஞ்சமில்லை. அச்சுனைகளில் செங்கயல்கள் திளைக்கின்றன.[42] கல்தேன் பாய்ந்தொழுகுதலால் அக்கமலச்சுனை நீரானது இனிக்கின்றது.

திருமலையின் சோலை அழகில் இயற்கை எழிலை ஆழ்வார் தனை மறந்து மிகவும் ஆழங்கால்படுகிறார்.

**"வேயேய் பூம்பொழில்சூழ் விரையார்திரு வேங்கடவா."**

**"தேனேய் பூம்பொழில்சூழ் திருவேங்கட மாமலை"**

**"வரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை"**

**"கோற்றேன் பாய்ந்தொழுகும்**
**குளிர்சோலைசூழ் வேங்கடவா!"**

**"கற்றேன் பாய்ந்தொழுகும்**
**கமலச்சுனை வேங்கடவா!"[43]**

திருமலையில் சிகரங்கள் விண்ணைத் தொடுமளவு உயர்ந்துள்ளன.[44] ஆங்கு ஓங்கி வளர்ந்துள்ள மூங்கில்கள் வெடித்து வெண்முத்துக்களை உதிர்க்கின்றன[45] இங்கு வாழும் வேடுவர்கள் இடும் அகிற்புகை ஓங்கி மேகத்தைத் தொடுகின்றன,[46] ஈண்டு களிறுகள் கவரிமான்கள் நிறைந்திருக்கச்[47] சோலையில் உலவும் வண்டுகளோ குறத்திகள் இசைக்கும் குறிஞ்சி இசைக்கு ஏற்ப தாமும் அவர்களோடு சேர்ந்து இசை பாடுகின்றன[48] தினைப்புனங்களில் மாதர்கள் காவலிருந்து வரும் பறவைகளை விரட்டிக் கொண்டு இருக்கின்றனர்[49] இவ்வாறு ஆழ்வார் திருமலையின் குறிஞ்சி நிலக்காட்சியை அப்படியே கண்முன் நிறுத்துகிறார்.

திருவேங்கடவனையும் திருமலையையும் ஒருசேர சிறப்பிக்கிறார் ஆழ்வார் திருமங்கை திருமலையினை— திருமலையானை வானவர்கள்— தானவர்கள் நின்று ஏத்துகின்றனர்; பிரம்மன், சிவன் முதலிய அமரர்கள் மனங்குளிர வந்து வணங்கி ஏத்துகின்றனர்· விண்ணோர்கள் வந்து தொழுகின்றனர்[50] இத்தகைய பெருமைக்குரியதான இத்திருமலை உலகுக்கே தேசமாய்த் திகழ்வது என்கிறார்[51]

## 4-3-7 திருஎவ்வுள்

தொண்டைநாட்டுத் திருப்பதிகளுள் இத்தலமும் ஒன்று

மூலவர்—வீரராகவப் பெருமாள்; புஜங்கசயனம்; கிழக்கு நோக்கித் திருமுகமண்டலம் அமைந்துள்ளது தாயார்—கனகவல்லி. தீர்த்தம்—ஹ்ருத்தாபநாசினி புஷ்கரிணி. விமானம்—விஜயகோடி விமானம். சாலிஹோத்ரீ முனிவருக்கு இத்தலத்து இறைவனது திருக்காட்சி கிடைத்ததாகச் சேதி.[52]

திருமால் சாலிஹோத்ர முனிவனுக்குப் பிரத்யக்ஷமாகி உறைவதற்கு உரிய உள் எவ்வுளென வினவியதால் இத்தலத்திற்கு ஏற்பட்டதாம்.[53]

மதுகைடவர்களைக் கொன்று வேதியரை—முனிவரைக் காத்த திருத்தலமிதுவாகும். திருமால் தனை வந்து பணி பவரின் எல்லா நோயையும் தீர்ப்பதால் இத்தலத்திறை வைத்யவீரராகவர் என்று அழைக்கப்படுகிறார்.

இத்தலத்திறைவன் இளம்ராஜகுமாரன் வடிவில், தருமசேனபுரத்து அரசன் மகளான வசுமதியைக் காதலித்து மக்கள் சம்மதத்தோடு அவளை மணந்ததாகவும், இத்தலத்து சந்நிதிக்கு எழுந்தருளி தனது தேவியுடன் மறைந்தான். ஸ்ரீராமன் அசுவமேத யாகம் செய்தபோது சுவர்ண சிதையாய் இருந்தவள் வசுமதி என்ற கனகவல்லித் தாயாராய்ப் பிறந்தாள் என்பது ஐதீஹம்.[54]

இத்தலத்திறையைப் பாடியவர்கள் இருவர். திருமங்கை யாரும், திருமழிசையாரும் மொத்தம் பன்னிரு பாசுரங்களால் இத்தலத்து இறைவனிடத்து ஆழங்கால்படுகின்றனர்.[55]

**திருமங்கை பாசுரங்களில் திருஎவ்வளூர்**

திருஎவ்வளூரின் வயல் வளத்தை ஆழ்வார் பின்வருமாறு பாடுகிறார்.

> **"நீலம் ஆர்வண்டுண்டுவாழும் நெய்தலந் தண்கழனி**
> **ஏலம் நாறும் பைம்புறவின் எவ்வுள் கிடந்தானே"**[56]

**4- 3- 8- திருவல்லிக்கேணி**

தொண்டைநாட்டுத் திருத்தலங்களுள் ஒன்று.

மூலவர்-வேங்கடகிருஷ்ணன், சங்கநாதன் உத்ஸவர்—பார்த்தசாரதி. தீர்த்தம்—கைரவினி ஸரஸ். விமானம்—ஆனந்தவிமானம், ப்ரணவ விமானம், புஷ்பக விமானம், சேஷவிமானம், தைவிக விமானம்

இத் தலத்தில் ருக்மினி தொண்டைமான், ஸுமதிராஜன், அர்ச்சுனன், ப்ருஹுமகரிஷி, மார்க்கண்டேயர், மதுமான் மஹரிஷி, அத்ரிமகரிஷி, அநிருத்தன், பிரத்யும்னன்,

பலராமன் முதலியோருக்குத் திருக்காட்சி தந்ததாக வரலாறு.[57]

ஒரு காலத்தில் இத்தலம் துளசிச் செடிகள் அடர்ந்த காடாய் இருந்ததால் பிருந்தாரண்ய க்ஷேத்ரம் எனப் பெயர் பெற்றது.

சிறு பிணக்கு காரணமாய்த் திருமகள் மாலைப் பிரிந்து இத்தலத்தில் குழந்தை வடிவோடு கிடக்க, பிருகுமுனிவர் அம் மழலையை எடுத்து வேதவல்லி எனத் திருநாமம் சாத்தி வளர்க்க, இறைவன் ராஜகுமாரனாய் எழுந்தருளி அவளைக் காதலித்து மணந்தான் என்பர்.[58]

ஸுமதி என்ற அரசனுக்காகத் திருமாலை வேங்கடவன ஈண்டு பார்த்தசரதியாய் நின்று அருள்கிறான் என்பர். குடும்பசமேதனாய் இத்தலத்தில் மட்டுமே இறைவன் எழுந் தருளியிருக்கிறான், கண்ணன் பார்த்தனுக்காகப் பீஷ்மர் எய்த அம்புகளை ஏற்று அருளியதைக் காட்டுமுகமாக, பார்த்தசாரதி மூர்த்தி வதனத்தில் வடுக்கள் காணப் பெறுகின்றன.[59]

திருமங்கை. பேய், திருமழிசை ஆகியோர் மொத்தம் பன்னிரு பாசுரங்களால் இத்தலத்து இறைவனிடம் ஆழங்கால் படுகின்றனர்.[60]

## திருமங்கை பாசுரங்களில் திருவல்லிக்கேணி

தேன்சிந்தும் குளிர்ந்த சோலைகளையுடையது திருவல்லிக்கேணி; ஆங்குக் கருங்குயில்கள் மயில்கள் இருந்து களிக்க அச்சோலைகளோ சூரியனது கதிர்கள் நுழைதல் இல்லாதபடிக்கு மிக்கு நெருக்கமாய் அமைந்தவை. மேலும் இத்தலம் மடங்கள் நிறைந்தது; இங்குள்ள மாதர்கள் தமக்கு ஒப்பு இல்லாதவர்களாய்[61] சிறந்தவர்களாயுளர் என இத்தலத்து சோலை எழில்—செல்வவளம் — மக்கள் மாண்பினை அழகுறப் பாடிச்செல்கிறார் ஆழ்வார்.

## 4-3-8 திருக்கடன்மல்லை

தொண்டைநாட்டுத் திருத்தலங்களுள் இத்தலமும் ஒன்று. இத்தலத்து இறைவனை ஸ்தலசயனப் பெருமாள் என்பர். சயனத்திருக்கோலம், புஜங்கசயனனாகக் காட்சி தருகிறான். கிழக்கு நோக்கிய திருமுகமண்டலம் வலது திருக்கரத்தால் திருமார்பின்மீது உபதேச முத்திரை வைத்தபடி காட்சி தருகிறான் தாய்—நிலமங்கை. தீர்த்தம் —புண்டரீக புஷ்பரிணி, கருடநதி. விமானம்—ககனாக்ருதி விமானம். புண்டரீகமுனிவனுக்கு இத்தலத்து இறையினது திருக்காட்சி கிடைத்ததாகச் செய்தி. இத்தலம் பூதத்தாழ் வாரின் பிறப்பிடமாகும்[62]

புண்டரீகமுனிவர் தாமரை மலர்களால் க்ஷீராப்திநாதனை அருச்சிக்க எண்ணி, மலர்களுடன் செல்லக் கடலானது வழியை அடைத்துக்கொண்டு இருந்ததால் பக்திபரவசத்தில், அவனைக் காலம் தாழ்த்தாது பூசிக்க வேண்டிய நிலையில் அக்கடல் நீரைத் தமது கைகளாலே இறைத்து அதனை வற்றச் செய்ய முயல, இறைவன் அதுகண்டு அந்தணன் வேடம்பூண்டு, அவரிடம் உணவுகேட்டுவர, அவரும் உணவு தேடிக்கொண்டு வருவதற்குள் அவன் தலசயனனாக அவர் வைத்திருந்த மலர்களைச் சாத்திக்கொண்டு காட்சி தந்தான்.[63] இங்கு இறைவன் வெறுந்தரையில் சயனித் துள்ளான்.

## 4-3-9 திருமங்கை பாசுரங்களில் திருக்கடன்மல்லை

"கடிபொழில்சூழ் கடல்மல்லை"[64]

என இத்தலத்தின் சோலை எழிலைப் பாடிப் பரவசமுறு கிறார் ஆழ்வார் திருமங்கை.

கழுநீர், கமலம் போன்ற மலர்கள் களைகளாக இத் தலத்து வயல்களில் பூத்து மணம் கமழ்கின்றன. உழவர்கள் வயலை ஏர்பூட்டி அம்மலர்களையும் சேர்த்தே உழுகின்றனர்; அவ்வுழவுக்குப் பிழைத்து கழுநீர் மாத்திரம் தனது மணத்தைப் பரப்புகின்றது.[65] இப்படிப்பட்டதோர் காட்சி

யைக் காட்டி இத்தலத்தின் வயல் வளச்சீரைக் காண்பிக்கிறார் ஆழ்வார் என்றால் அது மிகையாகாது.

மேலும் திருக்கடன்மல்லை கடலை உடையது; சிறந்த வாணிபத்துறைமுகம்; விசும்பில் கணங்கள் இயங்கும் சிறப்பினது எனப் பலவாறு இத்தலத்தைச் சிறப்பித்துப் பாடுகிறார் ஆழ்வார்.

**"...மருவினிய**
**தண்ணார்ந்த கடமல்லைத் தலசயனத் துறைவாரை"**
**"...முதுமுந்நீர்க் கடல்மல்லைத் தலசயனம்"**
**"புலன்கொள்நிதிக் குவையோடு புழைக்கைம்மா களிற்றினமும்**
**நலங்கொள்நவ மணிக்குவையும் சுமந்தெங்கும்**
**நான்றொசிந்து**
**கலங்கள்இயங் கும்மலைக் கடல்மல்லைத் தலசயனம்"**
**"......விசும்பில்**
**கணங்கள்இயங் கும்மல்லைக் கடல்மல்லைத் தலசயனம்"[6]**

## 4-3-10 பரமேச்சுர விண்ணகரம்

பெரிய காஞ்சியிலுள்ள திருக்கோயிலிது. மூலவர்—பரமபதநாதன்; வைகுந்தநாதன்; வீற்றிருக்கும் திருக்கோலம். மேற்கு நோக்கித் திருமுகமண்டலம், தாயார்—வைகுந்த வல்லி. தீர்த்தம்—ஐரம்மத தீர்த்தம். விமானம்—முகுந்த விமானம். பல்லவமன்னனுக்கு இத்தலத்து இறைவனது திருக்காட்சி கிடைத்ததென்பர்.

விதர்ப்பதேசத்தை அரசாண்ட விரோசனனுக்குப் பிள்ளைகள் இல்லாமல் இருக்க, அவன் காஞ்சி கைலாச நாதரைப் பூசிக்க, சிவனது அருளால் மாலினது த்வார பாலகர்கள் அவனுக்குப் பிள்ளைகளாய்ப் பிறக்கின்றனர். அவர்கள் பல்லவன், வில்லவனென மால் பக்தர்களாய் அசுவமேதயாகம் செய்ய, மால் அவர்களுக்கு வைகுந்தனாகக் காட்சி தந்தபடி—வீற்றிருந்த திருக்கோலத்துடன் இருந்தபடி, இன்றும் பக்தர்களுக்குச் சேவை சாதிப்பதாக ஐதீஹம்.

திருமங்கையார் மட்டுமே இத்தலத்தைப் பத்துப் பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார். பிற ஆழ்வார்கள் எவரும் இத்திருத்தலத்தைப் பாடவில்லை.[67]

**திருமங்கையாழ்வார் பாசுரங்களில் பரமேச்சுர விண்ணகரம்**

**"......பல்லவர் கோன்பணிந்த**
**பரமேச் சுரவிண் ணகரம்"**

எனப் பல்லவர்கோன் பணிந்த சிறப்பினைப் பெற்றது இத் தலம் என்கிறார். பல்லவமல்லனைப் பலவாறு உயர்த்திப் பேசி. அத்தகையோன் பணிந்த சிறப்பினை உடையது இத் தலமென அதன் பெருமை பேசுகிறார். சான்றாக,

**"தேர்மன்னு தென்னவ னைமுனையில்**
**செருவில்திறல் வாட்டிய திண்சிலையோன்**
**பார்மன்னு பல்லவர் கோன்பணிந்த**
**பரமேச் சுரவின் ணகரம்அதுவே"[68]**

என்ற பாசுர வரிகளைக் காட்டலாம்.

## 4-3-11 திருக்கோவலூர்

நடுநாட்டுத் திருப்பதிக்குள் இத்தலமும் ஒன்று.

மூலவர் திரிவிக்ரமன். திருவடியை உயரே தூக்கிய நிலை. நின்ற திருக்கோலம். கிழக்கு நோக்கித் திருமுகமண்டலம். தாயார் —பூங்கோவில்நாச்சி. தீர்த்தம்—பெண்ணையாறு, கிருஷ்ணதீர்த்தம், சக்ரதீர்த்தம், விமானம்—ஸ்ரீகாவிமானம். இத்தலத்லை பலிச்சக்ரவர்த்தி, மிருகண்டு, பிரும்மா, இந்திரன், சௌனகர், காச்யபர், காலவர், குசவஜன், முதலாழ்வர் மூலர் முதலியோர் தொழுதெழுந்து இவ் விறைவனது திருக்காட்சியைப் பெற்றதாய்ச் செய்தி உண்டு.[69]

கோபாலன் என்ற ஆயனார் எழுந்தருளி இருக்கும் திவ்யதலம் ஆதலால் இதற்குத் திருக்கோவலூர் எனத் திருநாமமாயிற்று. கோபால் என்ற வடசொல் 'கோவல்' எனத் திரிந்தது.

பூதத்தாழ்வார், பேயாழ்வார், பொய்கையாழ்வாராகிய முதலாழ்வார்கள் மூவரும் இங்கு ஓர் இரவில் இடைகழியில் சந்தித்து அவனதருளால் அவனையும் தாயையும் நேரில்— இருட்டில் நெருக்கியபடி கண்டு சேவித்து மூன்று தருவந்தாதிகளைப் பாடிய சிறப்பினது இத்தலமாகும்.

இத்தலம் பஞ்சகிருஷ்ணாரண்ய ஷேத்திரங்களுள் ஒன்று எனும் சிறப்பினை உடையது. கண்ணன் ஈண்டு நித்ய வாசனாய் எழுந்தருளி இருப்பதாய்க் கூறுவர்.

திருமங்கை, பொய்கை, பூதம், பேய், மணவாளமாமுனி ஆகிய வைணவ அடியார்கள் இத்தலத்தைப் பாடிப் பரவி உள்ளனர். இத்தலத்திற்கென மொத்தம் இருபத்தோரு பாசுரங்களுள.[10]

## திருமங்கை பாசுரங்களில் திருக்கோவலூர்

பெண்ணையாறு வளத்தை அள்ளித்தர, அந்தணர்கள் யாகங்கள் செய்ய, விளைவயல்கள் நிறைந்தது இத்தலம் என்கிறார்.[11]

திருக்கோவலூர் செல்வச் செழிப்புமிக்க மணிமாடங்கள் நிறைந்து தோன்றக்கூடியது; இசையேழும், ஆறங்கமும், ஐந்துவளர் வேள்வியும் நான்மறைகளும், மூன்று தீயும் சிந்தனை செய்து இருபொழுதும் சிறக்கும்படிக்குச் செல்வச் சிறப்பினது.[12] ஒழுக்கத்தன்மையினது இத்தலம் என்கிறார்.

மேலும் இவ்வாறே இத்தலத்தின் சோலையழகு, வயல்வளம், மக்கள்சீரினை ஆழ்வார் திருமங்கை சிறப்பித்துப் பாடிச்செல்கிறார்; பரவசமுறுகிறார்; நம்மையும் பரவசப் படுத்துகிறார்.

**"எழுந்தமலர்க் கருநீலம் இருந்தில் காட்ட**
**இரும்புன்னை முத்தரும்பிச் செம்பொன் காட்ட**
**செழுந்தடநீர்க் கமலம்தீ விதைபோல் காட்டும்**
**திருக்கோவ லூர்"**

"கோங்கரும்பு சுரபுன்னை குரவார் சோலைக்
குழாவரிவண் டிசைபாடும் பாடல் கேட்டு
தீங்கரும்பு கண்வளரும் கழனி சூழ்ந்த
திருக்கோவ லூர்"
"பேரேறொன் றுடையானும் அளகைக் கோனும்
புரந்தரனும் நான்முகனும் பொருந்தும் ஊர்போல்
சீரேறு மறையாளர் நிறைந்த செல்வத்
திருக் கோவ லூர்"[73]

## 4-3-12 தில்லைத்திருச்சித்ரக்கூடம்

தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள சிதம்பரம் தாலுக்காவில் தலைமைப் பட்டினமாக விளங்குவது தில்லை நகராம். இத்தலம் வடக்கில் வெள்ளாற்றையும், தெற்கில் திருநெல்வாயில், திருக்கழிப்பாலை, கொள்ளிடம் பேராற்றையும், கிழக்கில் திருவேட்களம், அண்ணாமலை நகரையும், மேற்கில் நாகச்சசியையும் எல்லைகளாகக் கொண்டு அமைந்து உள்ளது.

தில்லை என்ற ஒருவகை புதர்ச்செடிகள் நிறைந்த வளமான இடம் ஆதலின் இத்தலம் தில்லை என வழங்கப் பட்டது.[74]

புலியூர், பெரும்பற்றப்புலியூர், சிற்றம்பலம், புண்டரீக புரம், தனியூர், ஞானாகாசம், சிதம்பரம், பொன்னம்பலம் என்பன இத்தலத்திற்கு வழங்கப்படும் வேறு பெயர்களாவன. எம்பெருமானாகிய ஈசன் அம்பலத்தில் திருநடனமாடும் கூத்தனாகக் காட்சி அளிப்பதால் இத்தலம் சிதம்பரம் எனப் பெயர் பெற்றது மேலும் இத்தலம் புலிக்கால் முனியாகிய வியாக்கிரபாதர் தவம் கிடந்து ஈசனின் நடனம் கண்ட இடமாதலின் பெரும்பற்றப் புலியூர் என்றும், புலியூர் என்றும் வழங்கப்பெறுகின்றது.[75]

தில்லையம்பலத்திலுள்ள தீர்த்தங்கள் பன்னிரண்டு என்பர். அவை சிவகங்கை, பரமானந்ததீர்த்தம், அனந்த

தீர்த்தம் நாகசேரி, வியாகர பாததீர்த்தம், புலிமடு, சிவப்பிரியைத்தீர்த்தம், திருப்பாற்கடல், ஓமகுளம், ஆயிகுளம், ஞானப்பிரகாசர்குளம், முன்னீர்கடல் என்பன [76]

வியாக்ரபாதர் என்னும் முனிவர் தில்லைப் புதரிடையே ஒரு சுயம்புலிங்கத்தைக் கண்டு எடுத்துப் பூசித்து வர, வழிபாட்டிற்குரிய மலர்களின் தேனை வண்டுகள் சுவைக்கு முன்னே, தூய்மையான மலர்களால் அவனை வழிபட ஆசை கொண்டதாகவும், இறைவனாகிய ஈசன் திருவருளால் வழுக்காது மரத்திலேறித் தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள, புலிக்கால்களும், புலிக்கைகளும், புலிக்கண்களும் வரப்பெற்றார் எனவும், திருமால் கண்ட ஈசனின் ஆனந்த தாண்டவத்தைப் பதஞ்சலியின் வழி அறிந்த வியாக்கிரபாதர் அத்தாண்டவத்தைக் காண ஆசைகொண்டார் எனவும், இறைவனும் தமது தாண்டவத்தைத் தில்லையில் காண்பாய் என்று அருளி, தன்னை எதிர்த்த காளியினைத் தோற்கச் செய்து, தன் பக்தனின் ஆவலைத் தீர்த்தார் எனவும் செய்திகளுள.[77]

தில்லை அம்மனும் நடராசனுடன் தாண்டவம் ஆடியதால் தில்லைநகர் எனப் பெயர் வழங்கப்பெறுவதாய்ப் புராண வரலாறு கூறும்.[78]

## திருமங்கை பாசுரங்களில் தில்லைத்திருச்சித்ரக்கூடம்

சேடுயர் பூம்பொழில் சூழ்ந்தது இத்தலம்; அச்சோலைகளில் குயில்கள் பாடுகின்றன; மயில்கள் மகிழ்ந்தாடுகின்றன. மலர்களில் தேன் சோர வண்டுகள் ரீங்காரமிட்டவண்ணமிருக்கின்றன; ஆங்கிருந்த சுனைகளில் கயல்கள் களித்த வண்ணமுள்ளன.[79]

ஆழ்வார் இத்தலத்தின் பொழில் சீரை இவ்வாறு பேசுகிறார்.

"செம்பொன்னாலான மணிமாடங்கள் நிறைந்தது; யானைத்தந்தம், சந்தனம் முதலிய நறுமணப் பொருட்கள் அடித்துக்கொண்டு வந்து தள்ளும் தெய்வப்புனல் சூழ்ந்தது.[80]

ஈங்கு அந்தணர்கள் வேள்வி செய்தவண்ணம் இருக்கின்றனர்: அவ்வேள்வியில் உண்டான தீ ஓங்கியவண்ணம் ஒளிவீசுகிறது: இத்தலத்தின் இல்லங்களில் வளர்க்கப்படும் கிளிகளும் நான்மறைகளைப் பாடிய வண்ணமிருக்கின்றன[81] என இத்தலமக்களின் உயர்ந்த ஒழுக்கம், பக்தி, செல்வச் சிறப்பைக் காட்சிக்குக் கொண்டுவருகிறார் ஆழ்வார்.

தில்லைத் திருச்சித்ரகூடத்தின் வயல்வளத்தை—செல்வச் சீரை ஆழ்வார் ஒரு காட்சி காட்டி விளக்கிச் செல்லுகிறார். பெருநீரானது முத்தங்களைக் கொணர்ந்து வந்து வயல்களில் தள்ளிட அதற்குப் பயந்து ஆங்கிருந்த கயல்—மீன்களோ பாய்ந்து துள்ளுகின்றதாம்.[82]

இத்தலத்து இறைவனைப் பல்லவர்கோன் பொன், மணி, முத்தோடு வந்து பணிந்தான் என்றும், தேவர்கள் வந்து வணங்கும் சிறப்பினை உடைய திருத்தலமிது[83] என்றும் ஆழ்வார் இத்தலத்திறைவனையும், இத்தலத்தையும் ஒரு சேரச் சிறப்பித்துப் பாடுகின்றார்.

### 4-3-1-3 காழிச்சீராமவிண்ணகர் (சீர்காழி)

சோழநாட்டுத் திருத்தலங்களுள் ஒன்று.

மூலவர்—திருவிக்ரமன், தாடாளன், உலகளந்த திருவுருவம். நின்ற திருக்கோலம். கிழக்குநோக்கித் திருமுக மண்டலம். தயார்—லோகநாயகி. தீர்த்தம்—சங்கபுஷ்கரிணி, சக்ரதீர்த்தம். விமானம் புஷ்கலாவர்த்த விமானம். அஷ்கோண முனிவருக்கு இத்தலத்து இறைவனது திருக்காட்சி கிடைத்ததென்பர்.

பிரம்மாவுக்குத் தன் ஆயுளைப்பற்றிக் கர்வம் ஏற்பட்ட போது, ரோமசமுனிவர், "உன் ஆயுசும் என் ஒரு ரோமமும்"

சமம் என்று சொல்லி அவர் கர்வத்தை அடக்கின தலம் இதுவாம்.

சக்ரவர்த்தித் திருமகன் எழுந்தருளி இருத்தலால் ஸ்ரீராம விண்ணகரம் என்றும், காளி வாழும் தலம் ஆதலாய் காளி ஸ்ரீராமவிண்ணகரம் என்றும் திருப்பெயர்கள் வழங்கப்பட்டன.

திருமங்கை ஆழ்வார் ஞானசம்பந்தரை வாதில் வென்று அவருடைய வெற்றிவேலினைப் பரிசாகப் பெற்றதுடன், "கடியுண்ட நெடு வாளை" என்ற ஓர் அழகிய பாடலாலும் புகழ்பெற்று, "நாலுகவிப்பெருமாள்" என்ற விருதும் பெற்ற திருத்தலமிது என்பர்.[84]

திருமங்கையார் பத்துப்பாசுரங்களால் இத்தலத்திறைவனைப் பாடிப் பரவுகிறார்.

### திருமங்கை பாசுரங்களில் சீர்காழி

சீர்காழியில் நால்வேதம், ஐவேள்விகள், ஆறங்கங்கள், ஏழிசைகள் சிறக்கின்றன இங்கு மாடங்கள் மலைபோல் உயர்ந்துள; அம்மாடங்கள் வாழ்மாதர்களின் முகங்கள் கமலம் போல் ஒளிர்கின்றன; அவர்கள் முக அழகைக் கண்ட திங்கள் வெட்கிக் கண்ணீர் சிந்தி மறைகின்றதாம்.[85]

இவ்வாறு சீர்காழியின் செல்வச்சீர்—மாதரழகைப் பாடுகிறார் ஆழ்வார்.

இத்தலத்து வயல்களில் உழவர்கள் உழுதலால் உதிர்ந்த முத்தினைக் குருகானது தனது சினை என சூழ்ந்திருக்க, தேன் சிந்தும் தாமரை மலர்களோடு, கயல்களும் ஆங்கு வாழுகின்றனவாம். வயல்களில் களை பறிக்க வந்த கடைச்சிமார்கள் அவ்வயல்களிலுள்ள நெய்தல், குவளை மலர்களைத் தமது கண்களாய் நினைந்து, குமுதமலர்களைத் தமது வாயாய் எண்ணி களைகளாயுள்ள அவற்றைப் பறிக்காமலேயே விட்டுவிடுகின்றனராம்.[86] இவ்வாறு

இத்தலத்தின் வயல்வளச் சிறப்பினைப் பாடும் ஆழ்வார், மேலும் இத்தலத்தின் வளச்சிப்யைப் பாடிச் செல்கிறார்.

"......அளில்கள்தூவ
நெட்டிலைய கருங்கமுகின் செங்காய் வீழ
நீள்பலவின் தாழ்சினையில் நெருங்கு பீனத்
தெட்டபழம் சிதைந்து மதுச் சொரியும் காழிச்
சீராம விண்ணகரே"

"......கழுநீர் கூடித்
துறைதங்கு கமலத்துத் துயின்று, கைதைத்
தோடாரும் பொதிசோற்றுச் சுண்ணம் நண்ணி
சிறைவண்டு களிபாடும் வயல்சூழ் காழிச்
சீராம விண்ணகரே"[87]

## 4-3-1-4. திருவயிந்திரபுரம்

நடுநாட்டுத் திருப்பதிகளும் ஒன்று.

மூலவர்—தெய்வநாயகன். நின்ற திருக்கோலம். கிழக்கு நோக்கி திருமுகமண்டலம். தீர்த்தம்—கருடநதி, சந்திர தீர்த்தம், சேஷதீர்த்தம், விமானம்—சந்திரவிமானம், சத்தஸத்வவிமானம். சந்திரன், கருடன் ஆகியோர் இத்தலத்திறையினது திருக்காட்சி பெற்றதாகக் கருத்துண்டு.[88]

ஆதிசேஷன் நிர்மாணித்த திருத்தலமாதலால் திருவஹிந்திரபுரம் என்று பெயர் ஏற்பட்டது என்பர் மேலும் கருடன் விரஜா தீர்த்தத்தையும் (கருடநதி), ஆதிசேஷன் பாதாளகங்கை தீர்த்தத்தையும் (சேஷதீர்த்தத்தையும்) கொண்டுவந்து பரமனுக்குச் சமர்ப்பித்தனர் என்பர் [89]

வடகலை வைஷ்ணவ ஆசாரியரான ஸ்வாமிதேசிகனார் இங்கே தவம் செய்து கருடனது அருளையும், ஹயக்ரீவன் அருளையும் பெற்றதாக வரலாறு. இங்குத் தேசிகனார் நாற்பது வருடகாலம் வாழ்ந்ததாகக் கூறுவர்.[90]

திருமங்கை இத்தலத்தை மொத்தம் பத்துப் பாசுரங் களால் ஆராதிக்கிறார்.

## திருமங்கை பாசுரங்களில் திருவயிந்திரபுரம்

திருவயிந்திரபுரத்தில் மதிளானது வானுலவு மதியைத் தொடும் அளவு உயர்ந்து விளங்குகிறது; திரையலைகள் யானைமருப்பு, அகில் ஆகியவற்றைக் கொணர்ந்துவந்து வயல்களில் வந்து புகுகின்றன. இங்குக் கரும்பினது ஆலை களில் இருந்து எழும் புகையானது ஓங்கி ஆகாயத்தைத் தொடுகின்றது [91]

இவ்வாறு திருவயிந்திரபுரத்தின் மதிள்சீர், செல்வச்சீர் ஆகியவற்றை ஆழ்வார் காட்டிச் செல்கிறார்.

ஆழ்வார் மேலும் இத்தலத்தினது வளச்சிறப்பை— சோலை எழிலை—வயல்வளங்களை—ஒருசிலக் காட்சிகளைக் காட்டிச் சிறப்பாக விளக்கிச் செல்கிறார்.

இத்தலம் தேன்நிறைந்த மலர்கள் நிறைந்திருக்கப் பெற்ற சோலைகளை உடையது; வரைச் சாரலில் மாதவி, சண்பகம், முல்லைக்கொடிகள், தாமரை முதலான மலர்க்குவியல்கள் குவிந்திருக்கின்றன; வரைச்சாரல்களின் மாதவிப்பந்தலில் தன் பெடை வர—கமலத்தேன் உண்டு களித்து தென்னென வண்டினங்கள் முரல்கின்றன; குரங்குகள், பொன்போன்ற மலர்திகழும் வேங்கை, கோங்கு, செண்பகக் கொம்புகளில் குதிபோட்டு ஆடிக்களித்து, பசி ஏற்பட இரையைத் தேடி ஆங்கு அருகே உள்ள தேன்கலந்த பாலக்கனிகளை நுகர் கின்றன; அன்னங்கள் தாமரைப் படுக்கையில் தமது பெடையோடு இனிது அமர்ந்திருக்கின்றன; செந்நெல்லோ கவரி வீசியவண்ணமிருக்கின்றது.[92]

### 4-3-1-5 திருவாலி (திருநகரி)

மூலவர்— லஷ்மிநரசிம்மர், வயலாளிமணவாளன், வீற்றிருந்த திருக்கோலம். மேற்கே திருமுக மண்டலம்.

தாயார்—அம்ருதவல்லி. விமானம்— அஷ்டாக்ஷரவிமானம். தீர்த்தம்—இலாக்ஷணிபுஷ்கரிணி. திருமங்கை ஆழ்வாருக்கு இத்தலத்து இறைவனது திருக்காட்சி கிடைத்ததாம்.[93]

திவ்யப்பிரபந்தத்தில் பாடப்பெற்றுள்ள வயலாளி மணவாளன் எழுந்தருளி இருப்பது திருநகரியில் ஆதலால் இவ்விரண்டும் சேர்ந்தே ஒரு திவ்யதேசமாகக் கொள்ளப் படுகின்றன.[94]

### திருநகரி

மூலவர்—வேதராஜன் எனப்படும் வயலாளிமணவாளன். வீற்றிருந்த திருக்கோலம். மேற்குநோக்கித் திருமுகமண்டலம். தாய்—அம்ருதவல்லி.

திருமங்கையார் அவதரித்த பெருமை உடையது இத்தலம். இங்கு இருந்து சுமார் அரைமைல் தூரம் உள்ள வேதராஜபுரம் என்னும் இடத்தில் திருமங்கை ஆழ்வார் இறைவனை வழிப்பறிச் செய்ய, பெருமாள் திருமந்திர உபதேசம் செய்தார் என்பர், இச்செய்தியை உணர்த்தும் வேடுபறி உத்ஸவம் இங்கே நடக்கின்றது.[95]

குலசேகரர், திருமங்கை ஆழ்வார்கள் சேர்ந்து நாற்பத்தி இரண்டு பாசுரங்கள் பாடியுள்ளனர்.[96]

### திருமங்கை பாசுரங்களில் திருவாலி

திருவாலி சோலைகள் மிக்கது; அச்சோலைகளில் மயில் கள் நடமாடிக் களிக்கின்றன. சோலைகளிலுள்ள செண்பக மலர்களில் நுழைந்து தேனுண்ட வண்டு தெங்கின் தாதினை அளைக்கின்றது புன்னை, செருந்தி, பனைகள் கலந்திருக்கும் வண்பொழில்களில் அன்னங்கள் இருந்து அணிசெய்கின்றன.[97]

இவ்வாறு திருவாலியின் சோலை—வயல் வளத்தைப் பாடுகின்ற ஆழ்வார். மேலும்,

"அள்ளலம் பூங்கழனி யணியாலி"

"வண் டமர் கானல்மல்கும் வயலாலி"

"தண்பணை சூழ் வயலாலி"

"...தடஞ் சூழ்புறவில்
போதுவண் டாடுசெம்மல் புனலாலி"

"புன்னையும் அன்னமும்சூழ் புனலாலி"

"வாவியந் தண்பணைசூழ் வயலாலி"[98]

என அதன் வயல், சோலை; நீர்வளம் பற்றிப் பலவாறு பாடிப் பரவசமுறுகிறார்.

திருவாலியின் செல்வச் சிறப்பைத் திருவாலியின் வீதிகள் தேரானது செல்லும்படிக்கு நெடியதாயுளது; கரும்பாலைகளில் இருந்து எழும் புகை மழைமுகில் போல் எழுந்து விண்ணைத் தொடுகின்றது[99] எனச் சில காட்சிகளைக் காட்டிச் சுட்டுகிறார்.

## 4-3-16-0 நாங்கூர்

சோழநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று இத்தலம். ஆழ்வார், இத்தலத்தில் மணிமாடக்கோயில், திருவைகுந்த விண்ணகரம், அரிமேய விண்ணகரம், திருத்தேவனார்த்தொகை, திருவண் புருடோத்தமம், திருசெம்பொன்செய்கோயில், திருமணிக் கூடம், திருக்காவளம்பாடி, திருவெள்ளக்குளம் முதலிய திருக்கோயில்களுக்குச் சென்று கண்டு அவற்றில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளிடம் ஆழங்காப்படுகிறார். அவன் எழுந்தருளியுள்ள இத்தலத்தையும் அவனாகவே கண்டு தலத்தின் வளங்களை—சிறப்புக்களை—சீர்மைகளைப் பக்திப் பரவசம் பீதுாரப் பாடிக் களிக்கிறார்.

திருநாங்கூரின் இப்பதினோரு திவ்ய தேசங்களும் ருத்ரன் பூசிப்பதற்காக ஏற்பட்டவை என்பர்.[100]

## 4-3-16-1. நாங்கூரில் உள்ள பதினோரு திவ்விய தேசங்கள்

மூலவர்—நாராயணன். வீற்றிருந்த திருக்கோலம். கிழக்கு நோக்கித் திருமுகமண்டலம். தாயார்—புண்டரீகவல்லி தீர்த்தம்—இந்திரபுஷ்கரிணி. ருத்ரபுஷ்கரிணி. விமானம்—ப்ரணவ விமானம். இந்திரனுக்கும். ஏகாதச ருத்ரர்களுக்கும் இத்தலத்திறைவன் திருக்காட்சி தந்ததாகச் செய்தி உண்டு.[101]

அழகிய மாடமாளிகைகள் நிறைந்திருத்தலால் திருமணி மாடக்கோயில் என அழைக்கப்பட்டிருக்கலாம்.

தை அமாவாசைக்கு மாறுநாள் இத்தலத்தில் "கருட சேவை" நடக்கும். திருநாங்கூரைச் சேர்ந்த "திவ்யதேசத்துப் பெருமாள்களும்'' கருட வாகனங்களில் எழுந்தருளுவார்கள். திருநகரியில் இருந்து திருமங்கையாழ்வார் அவர் பத்தினி குமுதவல்லியுடன் அவர் ஆராதித்த பெருமாளும் பல்லக்கில் எல்லா திவ்யதேசங்களுக்கும் வயல்வழியில் இறங்கிப் பயிரை மிதித்துக்கொண்டு ஒவ்வொரு திவ்யதேசத்திலும் மங்களா சாஸனம் செய்து "திருவந்திக்காப்பு ஆகி, தை அமாவாசைக்கு மறுநாள் நாராயணப் பெருமாள் ஆலயவாசலில் பதினோரு திவ்யதேசப் பெருமாள்களும் கருடவாகனத்தில் எழுந்தருள, ஒவ்வொரு பெருமாளையும் ஆழ்வார் வந்து சேவிப்பார். பயிரை ஆழ்வார் மிதித்தால் பயிர் நன்றாக செழித்து வளரும் என்பது நம்பிக்கை.[102]

திருமங்கையார் இத்தலக்கோயில்மீது மொத்தம் பன்னிரண்டு பாசுரங்கள் பாடி பரவுகிறார்.

### நாங்கூர் வைகுந்த விண்ணகரம்

நாங்கூரிலுள்ள இன்னொரு கோயிலிது மூலவர்—வைகுந்தநாதன். தாமரைக் கண்ணுடையபிரான். கிழகே திருமுகமண்டலம், தாயார்—வைகுந்தவல்லி. தனிக்கோயிலில் தேவி கோயில் கொள்ளவில்லை. தீர்த்தம்—லட்சுமி புஷ்கரிணி, உதங்க புஷ்கரிணி, விரஜாதீர்த்தம். விமானம்—அனந்த ஸத்யவர்த்தந விமானம். உபரிசரவஸு, உதங்க

மகரிஷி ஆகியோருக்கு இவ்வாலயத்து இறைவனது திருக்காட்சி கிடைத் தரம்.

ஆழ்வார் மொத்தம் பத்துப் பாசுரங்களால் இவ்விறையை ஏத்தி இன்புறுகிறார்.

**நாங்கூர் அரிமேய விண்ணகரம்**

நாங்கூரிலுள்ள மற்றோர் திருஆலயமிது. மூலவர்—குடமாடு கூத்தன். தாயார்—அம்ருதகடவல்லி. தீர்த்தம்—கோடி தீர்த்தம், அம்ருததீர்த்தம் விமானம்—உச்சச்ருங்க விமானம் உதங்கமுனிவருக்கு இவ்வாலய இறைவன் திருக்காட்சி தந்தான்.

தி ரு ம ங் கை பத்துப்பாசுரங்களால் இவ்வாலய இறைவனிடம் அன்புமீதூரப் பாடியுள்ளார்.[103]

**திருத்தேவனார் தொகை**

திருநாங்கூர் திவ்யத்திருத்தலமிது.

மூலவர்—தெய்வநாயகன். நின்ற திருக்கோலம். கிழக்கு நோக்கி திருமுகமண்டலம். தாயார்—கடல்மகள் நாச்சி. தீர்த்தம்—சோபன புஷ்கரிணி, தேவரூபா புஷ்கரிணி. விமானம்—சோபனவிமானம். வசிட்டருக்கு இவ்வாலய இறைவன் திருக்காட்சி தந்ததாகக் கூறுவர்.[104]

திருமங்கையார் பத்துப் பாசுரங்களால் இவ்விறையை ஏத்துகிறார்.

**திருவண்புருடோத்தமம்**

மூலவர்—புருஷோத்தமன். நின்றதிருக்கோலம். கிழக்கு நோக்கித் திருமுகமண்டலம் தாயார்—புருஷோத்தமநாயகி. தீர்த்தம்—திருப்பாற்கடல்.

ஸ்ரீமணவாள மாமுனிகளும் பி ர தி வா தி ப ய ங் க ர ம் அண்ணன் அவர்களும் மங்களாசாஸனம் செய்த திருத்தலமிது.

திருமங்கை இவ்விறையைப் பத்துப் பாசுரங்களால் நினைந்துருகி ஏத்துகிறார்.[105]

## திருச்செம்பொன்செய்கோயில்

திருநாங்கூரிலுள்ள திவ்ய ஆலயங்களில் இதுவும் ஒன்று.

மூலவர்—பேரருளாவன். நின்ற திருக்கோலம். கிழக்கே திருமுகமண்டலம். தாயார்—அல்லிமாமலர் நாச்சி தீர்த்தம்—ஹேமபுஷ்கரிணி, கனகதீர்த்தம். விமானம்—கனக விமானம். ருத்ரனுக்குத் திருக்காட்சி தந்ததாக இத்தலத்திறையைப் பற்றிக் கூறுவர்.

இராவண வதத்திற்குப் பிறகு, இராமபிரான் இவ்விடத்தில் இருந்த த்ருடநேத்ரர் என்ற முனிவர் ஆசிரமத்தில் தங்கி அவர் சொல்லியபடி தங்கத்தில் பசு செய்து அங்கு நான்கு நாட்கள் தங்கி ஒரு பிராமணனுக்கு அதைத் தானம் செய்தான், அதைக் கொண்டு அப்பிராமணன் இக்கோயிலைக் கட்டியபடியால் செம்பொன்செய்கோயில் என்ற பெயர் ஏற்பட்டது. சிவபிரான் பிரம்மதோஷத்திலிருந்து விடுபட, "அசுவமேத யாகத்தை" செய்து வேண்ட இறைவன் தேவியரோடு அருள, ருத்ரன் பிரார்த்தித்தபடி மால் பதினோரு ரூபத்துடன் ருத்ரனுடன் நித்யவாசம் செய்து கொண்டு பக்தர்களின் துன்பத்தைத் தொலைத்துக் கொண்டிருக்கிறான்; அவர்தம் விருப்பத்தை நிறைவேற்றி அருள் செய்து கொண்டிருக்கிறான் என்பது வரலாறு.[106]

காஞ்சியில் காச்யபன் என்ற அந்தணனின் மூத்தமகன் முகுந்தன், தன் தகப்பனார் வறுமையைப் போக்க இத்தலத்திற்கு வந்து பெருமாள் உபதேசித்த அஷ்டாக்ஷரத்தை மூன்று நாட்களில் முப்பத்து இரண்டாயிரம் முறை ஜபித்துப் பெருமாளின் திருவருளால் செல்வம் பெற்றான் என்பர்.[107]

## திருமணிக்கூடம்

மூலவர்—வரதராஜப் பெருமாள் (மணிக்கூடநாயகன்). நின்றதிருக்கோலம். கிழக்கே திருமுகமண்டலம். தாயார்—

தீர்த்தம் — சந்திரபுஷ்கரிணி. விமானம் — கனகவிமானம். பெரிய திருவடி, சந்திரன் போன்றோர் இவ்விறைவனது திவ்யத்திருக்காட்சி கிடைக்கப்பெற்றனர். திருமங்கையார் இத்தலத்து இறையை மொத்தம் பத்துப் பாசுரங்களால் பாடியுள்ளார்.[108]

## திருவெள்ளக்குளம் (அண்ணன்கோயில்)

இதுவும் நாங்கூர் திருப்பதிகளுள் ஒன்று.

மூலவர்—ஸ்ரீநிவாசன், கண்ணன், நாராயணன், அண்ணன் பெருமாள். நின்ற திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம். தாயார்—அலர்மேல்மங்கை. தீர்த்தம் — திருவெள்ளக்குளம். விமானம் — தத்வத்யோதக விமானம். ருத்ரன், ச்வேதராஜன் ஆகியோர் இப்பெருமானின் திருக்காட்சியை நேரில் கண்டுமகிழ்ந்ததாகச் செய்தி உண்டு

இத்தலத்திற்குத் தென்திருப்பதி என்றும் பெயருண்டு.

சூரியவம்சத்தில் துந்துகுமாரன் என்ற அரசனுடைய குமாரன் சுவேதன் என்பவனுக்கு ஒன்பதாவது வயதில் ம்ருத்யு உண்டு என்பதை அறிந்து அவன் இந்தத் தலத்திற்கு வந்து ச்வேதபுஷ்கரிணியில் நீராடி மருத்தாசிரமத்திற்குச் சென்று மருத்தரின் உபதேசம் பெற்றுத் தடாகத்திற்குத் தென்கரையில் வில்வ மரத்தடியில் வடக்குமுகமாக அமர்ந்து ம்ருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜபம்செய்ய, பகவான் திருக்காட்சி தந்து அருளி, மார்க்கண்டேயனைப் போல் தீர்க்காயுசு அடையக்கடவாய் என்று வரமளித்ததாய்த் தலபுராணம் கூறுகிறது.

இத்தலத்தில் குமுதவல்லித்தாயார் குமுதமலருடன் ஓர் அந்தணனால் கண்டு எடுக்கப்பட்டு வளர்க்கப்பட திருமங்கையாரை மணந்ததாக புராண வரலாறு செப்புகிறது.

திருமங்கையார் இத்தலத்திறையைப் பத்துப் பாசுரங்களால் பாடியுள்ளார்.[109]

## 4-3-16-2 திருமங்கை பாசுரங்களில் நாங்கூர்

நாங்கூரின் இயற்கை எழிலினை—ஆழ்வார் தாம் கண்டவாறு அப்படியே படம்பிடித்துக் காட்டுவதைக் காணலாம். நாங்கூரின் சோலைவளம், மதிளமைப்பு, செல்வவளம், நீர்வளம், வயல்வளம், மதிள்சீர் ஆகியவற்றை ஆழ்வார் தமது பாசுரங்களில் பின்வருமாறு கூறிச் செல்கிறார்.

திருநாங்கூரின் பொழில்களில் காந்தாரம் இசை பாடுகின்றது; களிவண்டு மிழற்றி ஒளிசெய்கின்றது; மந்தார மலர்கள் மணம் வீசுகின்றன.[110]

"குழையாட வல்லிக் குலமாட, மாடே
குயில்கூவ, நீடு கொடிமாடம் மல்கு
மழையாடு சோலை மயிலாலும் நாங்கூர்"[111]

மேலும் இப்பதியின் பொழில்களில் மல்லிகை, செருந்தி, சண்பக மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. கயல்மீன்கள் சுனைகளில் விளையாடி மகிழ்ந்திருக்கின்றன.[112]

நாங்கூரில் பாக்குச் சோலைகளின் நடுவே தென்னை மரங்கள் ஓங்கி வளர்ந்திருக்கின்றன; அவற்றினின்று பெருத்த காய்கள் இற்றுக் குளங்களிலே வீழ்கின்றன. அவற்றின் கடுமையான ஓசையைக் கேட்டவாறே மீன்கள் 'தங்கள் உயிர்கொள்வதற்கு ஏதோ அபாயம் வந்துவிட்டது' என்று பிரமித்து வேறிடத்துத் துள்ளிக் குதித்தோடுகின்றன.[113]

சோலைகளில் குரங்குகள் மாம்பழங்களைப் புசித்து அச்சுவைத் திகட்ட, வேறொரு சுவைதேடி வாழைப் பழங்களைச் சுவைக்கத் தொடங்குகின்றன. அப்போது அவற்றில் ஏற்கனவே படிந்திருந்த வண்டுகள் அஞ்சிப் பறக்கின்றன.[114]

**"வம்பவிழும் செண்பகத்தின் மணங்கமழும் நாங்கூர்"**[11]
என மேலும் நாங்கூர்ப்பொழில் வளத்தைப் பற்றிப் பேசுகிறார்.

நாங்கூரின் மதிள்சீரை ஆழ்வார்,

**"செம்பொன்மதிள் பொழில்புடைசூழ்"**[116]
**"திடமான மதிள்களால் சூழப்பட்டது நாங்கூர்"**[117]

என்று பலவாறு பாடிக் களிக்கிறார்.

நாங்கூரில் ஒளிபொருந்திய இரத்தினங்களையும், சந்தன மரங்களையும், அகில்கட்டைகளையும், பொன்னையும், வெண்சாமரையையும் பொன்னிநதி தனது திரைகளாலே கொணர்ந்துவந்துசேர்க்கின்றது.[118]

இத்தலத்து கரும்பாலைகளில் புகை எப்போதும் எழுந்த வண்ணமாய் விண்பரவியுள்ளது.[119]

முழவின்ஒலி, வண்டுகள்ஒலி, மறையொலி, மடவார் சிலம்பொலி, கடலினது ஒலி ஆகியவற்றுடன் திகழ்வதாய் இத்தலம் விளங்குகிறது.[120]

நாங்கூரில் எல்லா வளங்களும் சிறக்க—நர்த்தனமாடும் சிலர்—பந்தடிப்பார் சிலருமாகக் களித்திருக்க, அதனால் எழும் அவர்களது கால்சிலம்புகளின் ஒலியும், கைவளைகளின் ஒலியும் ஓங்கி நகரின் பிற ஒலிகளைக் கீழ்ப்படுத்து கின்றனவாம்.[121]

நண்டுகள் உணவுக்காகத் தாமரைப் பூக்களிலே சென்று புகுவதுண்டு. அந்நண்டுகளின் வளைகளில் பாக்கின் பாளை களினின்று வெண்முத்துக்கள் இறைக்கப்பட்டு அவற்றின் வளைகள் மூடப்பட்டுள்ளன.[122]

மேலும் ஓங்கிய நிலையில் மாடங்கள் அழகிய சந்திரனைத் திரியவொட்டாதபடிக்குத் தடைசெய்கின்றன. இம்மாடங்கள் இந்திரனால் ஏற்படுத்தப்பட்டன; திண்ணிய

தாய், உயர்ந்ததாய் மலைகள் போன்று அவை விளங்கு கின்றனவாம்.

மேலும் சந்திரமண்டலத்து அளவு மாடங்கள்மீது த்வஜங்கள் நாட்டப்பட்டிருக்க அவை ஆகாசத்தைத் தழுவுகிற சூரியனுடைய கிரணங்களை மறைத்து நிழல் செய்கின்றன.[123]

நாங்கூரில் பரிமளம் கமழ்கின்ற பூக்களை அணிந்த கூந்தலை உடைய மாதர்கள் நீரில் படிந்து தீர்த்தமாடுகையில் தங்கள் கொங்கைத் தடங்களில் அணிந்திருந்த குங்குமக் குழம்புகளைத் தேய்த்து நீராடலால் அந்நீரானது சிவக்கின்றது [124]

நாங்கூரில் வீசும் தென்றல், வளம் சிறந்த பெரியவீதிகள் —கழனிகள்—மாடமாளிகைகள் என அனைத்து இடங்களி லுள்ள மணங்களை ஏந்திக் கொண்டு கண்டவிடமெங்கும் வீசித்திரிகிறது.[125]

திருநாங்கூரில் மீன்கள் துள்ளும் கழனிகள் நிறைந் துள்ளன இங்குச் செந்நெல் வயல்களில் செங்கமலம், செங்கழுநீர், மலர்கள் மலர்ந்து மணம் வீசுகின்றன. கயல், வாளைமீன்கள் அம்மலர்களோடு விளையாடி துள்ளித் திரிகின்றன. களைகளாய் மலிந்திருக்கும் இம்மலர்களில் இருந்து மதுவானது ததும்பி வெள்ளமாய்ப் பெருக வயல் உழும் உழவர்கள் மடையை அடைக்கின்றனர் [126]

நாங்கூர் வயல்களில் நெற்பயிர்கள் செழித்து வளர்ந்து உள்ளன; அந்நெற்கதிர்களின்மேல் கருநெய்தல் பூக்கள் வரிசை வரிசையாய்ப் படர்ந்து அணிசெய்கின்றன.[127]

நாங்கையில் செழித்து வளர்ந்துள்ள கோங்கு மரத்தின் அரும்புகளானவை அந்நகர் மாதர்களது தனங்களை நினைவுப் படுத்துகின்றன; ஆங்குப் பூத்துள்ள செவ்வாம்பல்களோ அவர்கள் செவ்விதழ்களை ஒத்துள; தாமரை மலர்களோ அவர் தம் வதனங்களைப் போலுள்ளதாம்.[128]

கண்டவிடமெங்கும் பொற்குவியல்களைக் கொண்டு வந்து தள்ளும் பொன்னிநதி பாய்வது; தாமரைப்பூவில் தேன்வெள்ளம் பெருக அது நீரோடு சேர அதனைப் பானம் பண்ணிக் கொழுத்த வாளைமீன்கள் களிப்போடு துள்ளிப் பாய, செங்கயல்கள் அதுகண்டு அஞ்சித் துள்ளி வேறிடம் பெயருதல் பெற்ற நீர்நிலைகள் உடையது இத்தலமாம்.[109]

மேலும் இத்தலத்து நீர்வளச் சிறப்பை ஆழ்வார்,

**"இளம்படிநற் கமுகுகுலைத் தெங்குகொடிச்**
**செங்கரும்பு கண்வளரக் கால்தடவும் புனலால்**
**வளங்கொண்ட பெருஞ்செல்வம் வளருமணி நாங்கூர்"[110]**

என்று பாடுகிறார்.

இவ்வாறு நாங்கூரின் வயல்—நீர் வளத்தினைச் சுவை படக் கூறுகிறார்.

இத்தலத்தின் மக்கள் சீரினைப் பேசவரும் ஆழ்வார், பின்வருமாறு சுவையாகப் பேசிச்செல்கிறார்,

இந்நாங்கூர் அந்தணர்கள் வாழ்வது; அழகில் சிறந்த மாதர்களைப் பெற்றது என்கிறார்,

இத்தலத்து மாதர்களுக்கு வாய்த்த விழிகளோ நெடிய அழகியவேல்போன்றவை; மொழிகளோ தேன் ஒத்தவை; ஆண்களைக் கவரும் புருவநெறிப்பு, கோங்கு மரத்தரும்புகளை ஒத்த தனங்கள். ஆம்பல்களை ஒத்த அதரங்கள். தாமரை மலர்களை ஒத்த திருவதனங்கள் என நங்கையரின் நளினத்தை நளினமாய்ப் பாடிச் செல்கிறார்.

நாங்கூர் ஏழிசையும், வேள்விகளும் இயற்றிக்கொண்டு, பிரம்மனை ஒத்தவராய், மிக்க பெருஞ்செல்வந்தராய் விளங்கும் அந்தணரைத் தன்வசம் பெற்றதாம்.

இவ்வந்தணர்கள் பகைவரை வென்றொழித்து வீரத்தில் சிறந்தவர்களாய் விளங்குகின்றனர். மறைகள் ஓதுவதில் வல்லவர்களாய் நற்கலைகளில் சிறந்தவர்களாய், பொறை-

யிலும், கொடையிலும் தேர்ந்தவர்களாய் விளங்குகின்றனர்.[131]

மேலும் இந்நாங்கூர் திருத்தலம் மறையோர் வணங்குவது; இமையோர் பரவுவது; நித்யசூரிகள் வந்து வணங்கும் பெருமை உடையது; முனிவர்களோடு தேவர்களும் வந்திறைஞ்சும் தன்மையது என[133] இதன் சிறப்புக்களை—பெருமைகளைப் பேசிச் செல்கிறார் ஆழ்வார் திருமங்கையார்.

## 4-3-17 திருவெள்ளியங்குடி

சோழநாட்டுத் தலங்களுள் இத்தலமும் ஒன்று

மூலவர்—கோலவல்லிராமன். புஜங்கசயனம் கிழக்கே திருமுக மண்டலம். தாயார்—மரகதவல்லி. தீர்த்தம்—சக்ரதீர்த்தம், பிரம்ம தீர்த்தம், இந்திரதீர்த்தம். தலவிருட்சம்—வாழைமரம், விமானம்—புஷ்கலாவர்த்தக விமானம். சுக்ரன், பிரம்மன், இந்திரன், பராசுரர், மயன், மார்க்கண்டேயர், பூமிதேவி ஆகியோர் இத்தலத்திறைவனது தில்யத் திருக்காட்சி பெற்றதாய்ச் செய்தி. சுக்கிரன் இத் தலத்தில் வந்து பேறு பெற்றதாய்க் கூறுவர்.[134]

திருமங்கையாழ்வார் இத் தலத்தானைப் பத்துப் பாசுரங்களால் பாடியுள்ளார்

## திருமங்கையார் பாசுரங்களில் திருவெள்ளியங்குடி

ஆழ்வார் திருவெள்ளியங்குடியின் செல்வச் சிறப்பைப் பின்வருமாறு காட்டிச் செல்கிறார். திருவெள்ளியங்குடியில் மாடங்கள் சூரிய மண்டலத்து அளவு ஓங்கி உயர்ந்திருக்கின்றன; அத்திருமாளிகைகளில் அழுந்துமாறு இருக்கும். இரவி தன் கதிர்களால் பகல்—இரவு வேறுபாடு காணாதபடிக்கு செய்தவண்ணமுள்ளது. மண்ணியாறு தனது திரைகளால் துறைகள்தோறும் நவரத்தினங்களைக் கொண்டு வந்து தள்ளுகிறது.[135]

இத்தலத்தின் வயல்வளம், சோலை எழில் முதலிய வற்றை விளக்கும் வகையில் ஆழ்வார் சில காட்சிகளைக் காட்டிச் செல்கிறார்,

காய்கள் நிறைந்து ஓங்கிக் கிடக்கின்ற பாக்குமரங்களும் வாழை மரங்களும் தென்னைமரங்களும் எங்குப் பார்த் தாலும் மலிந்திருக்கப் பெற்றுள்ளன. சோலைக் குயில்கள் இனிமையாக இசைபாடி களித்துக்கொண்டிருக்கின்றன.[136]

நீர்நிலங்களில் பயிர் செய்யப்பட்டு செழித்து வளர்ந் துள்ள வாழைகள் முற்றிப் பழுக்கின்றன. அந்தப் பழங்கள் இற்றுக் கீழ்விழ, மீன்கள் அவை மேல் விழுந்து உண்டு, செருக்கித் துள்ளி விளையாடுகின்றன.[137]

மேலும் இவ் வயல்களில் தாமரை மலர்கள் கரும்பு, செந்நெல் பயிர்கட்கிடையில் மலர, அம்மலரின்மீது அன்னம் அக்கரும்பு செந்நெல்லையே திரையாகக் கொண்டு தனது பெடையோடு கூடி மகிழ்கின்றது.[138]

இத் தலத்தின் வளச் சிறப்புக்களை மனங்குளிரப் பாடிய ஆழ்வார், இத் தலத்தில் குயில்கள் முதலிய பறவைகளும் அவனது திருநாமத்தையே இசைக்கின்றன[139] என ஆங்கு வாழும் உயிர்திணை உயிர்கள் மட்டுமன்றி, அஃறிணைப் பொருள்களும்—உயிர்களும் அவன்மீது மிகுந்த பக்தி ஈடுபாட்டோடு வாழ்கின்றன எனக் கூறுகிறார்.

## 4-3-18 புள்ளம்பூதங்குடி

சோழ நாட்டுத் திருப்பதிகளுள் இத்தலமும் ஒன்று.

மூலவர்—வல்வில் ராமன். புஜங்கசயனம். கிழக்கே திருமுக மண்டலம் தாயார்—பொற்றாமரையாள். தீர்த்தம்—ஜடாயுதீர்த்தம். விமானம்—சோபனவிமானம். சக்ர வர்த்தித் திருமகனுக்கும், க்ருத்ராஸகனுக்கும் இத் தலத்து இறையினது திருக்காட்சி கிடைத்தது.

இங்கு ராமபிரான், ஜடாயுவுக்கு மோட்சம் அளித்தபின் ச்ரமபரிஹாரம் செய்துகொள்ளும் நிலையில் கோவில்

கொண்டதாகக் கூறப்படுகிறது திருமங்கையார் இத் தலத்தைப் பத்துப்பாசுரங்களால் ஆராதிக்கிறார்[140]

### திருமங்கை பாசுரங்களில் புள்ளம்பூதங்குடி

இத்தலத்து சோலைகளில் கரும்பு வண்டுகள் ரீங்காரமிடு கின்றன; மயில்கள் நாட்டியமாடுகின்றன; வரிவண்டுகள் இசைபாடுகினறன.[141]

இத் தலம் மதிள்கள்—மாடமாளிகைகள் —மண்டபங் களைப் பெற்று அழகுடன் விளங்குகிறது ஈங்கு நவரத்னங் கள், முத்துக்கள், சாமரங்களைத் தள்ளிக்கொண்டு காவிரிநதி வந்து சேர்க்கிறது'[142]

தாழ்ந்திருக்கின்ற கழனிகளில் மீன்களானவை துள்ளித் திரிய, பறவைகள்தம் குஞ்சுகட்கு உணவாகச் சிறுமீன் களைப் பிடித்துக் கொடுக்கின்றன.

செறிந்த சோலைகளில் தேங்காய்கள் இற்று வீழ் கின்றன; அது கண்ட மீன்கள் ' நம்மை கொள்ளை கொள்ள ஏதோ ஒன்று வந்தது போலும்' என எண்ணித் துள்ளிச் சிதறுகின்றன. அதுகண்ட குருகுகள் இக்கயல்கள் 'நம்மை கொல்ல வருகின்றன' என மருண்டு சிதறி ஓடுகின்றன.[143]

இவ்வாறு இத்தலத்தின் சோலைவளம்—செல்வச்சிறப்பு —வயல்வளங்களை ஆழ்வார் சுவைபடப் பேசு கிறார்.

## 4-3-19 திருக்கூடலூர்

சோழ நாட்டுத் திருத்தலங்களில் இதுவுமொன்று.

மூலவர்—வையங்காத்தப் பெருமாள், உய்யவந்தார். கிழக்கே திருமுகமண்டலம் தாயார்—பத்மாஸினி, புஷ்ப வல்லி. தீர்த்தம்—சக்ரதீர்த்தம், காவிரிநதி. விமானம்— சுத்த ஸத்வ விமானம். நந்தகமுனிவருக்கு இவ்விறை திருக்காட்சி அளித்தான்.

இத்தலத்தில் தேவர்கள் நந்தக முனிவரோடு கூடிப் பெருமானைச் சேவித்து வந்தபடியால் இத்தலத்திற்குக் கூடலூர் எனும் பெயர் வழங்கப்படுகிறது. காவிரி இத்தலத் திற்கு வந்த பின்தான் தானிழந்த ஒளியைப் பெற்றதாகச் செய்தி.[144]

திருமங்கை மொத்தம் பத்துப் பாசுரங்களால் இவ்விறையை இறைஞ்சுகின்றார்.

## திருமங்கை பாசுரங்களில் கூடலூர்

கூடலூர் சோலைகளில் வண்டுகளோ இனிமையான தேனை உண்டு குறிஞ்சிப் பண்ணைப் பாடித் திரிகின்றன; நாரைகளோ கழனிகளிலுள்ள கயல் மீன்களை உண்ட வண்ணமாயுள. இத்தலத்திலுள்ள நீர்நிலைகளிலே கெண்டை மீன்கள் செருக்காலே துள்ளும்போது அவற்றின் உடல் மின்னல் போலிருக்க, அதனைக் கண்ட வான்மேகங்கள் தம்மிடத்து மின்னுகின்ற மின்னலின் ஒளியே அது என இடியோசை எழுப்புகின்றன. மீன்கள் இப்படித் துள்ளியபடி யிருக்க வண்டலிட்ட நுண்ணிய மணல்களில் மாம்பழங்கள் விழுந்து கேட்பார் அற்று கிடக்கின்றன. இது காண்பதற்குப் பழுக்கைக்குப் பதித்து வைத்தாற் போலுளதாம். முல்லைக் கொடிகளோ குருந்தைமரத்தை ஆதாரமாய்க்கொண்டு படர்ந்து இருக்கின்றன. படர்ந்த இலைகளை உடைய தென்னைமரங்கள் குளங்களின் கரையிலே நிற்க, அவற்றின் இளநீர் குலைகள் தாழ்ந்து நிற்கின்றன. அது குளங்களை இளநீராலே நிறைத்து இலைகளாலே மறைத்து வைத்தாற் போலுளதாம். இத்தலத்து வாய்க்காற் கரைகளில் தாழம் பூக்கள் மலர்ந்திருக்க, அதுகண்ட மீன்கள் அவற்றைக் குருகுகள் என அஞ்சி ஒளிகின்றனவாம்.[145] இவ்வாறு பல காட்சிகளைக் காட்டிக் கடலூரின் நீல, நீர், சோலை வளங் களை நமக்குக் காட்டுகிறார் ஆழ்வார் திருமங்கை.

## 4-3-20 திருவெள்ளறை

சோழநாட்டுத் திருப்பதிகளில் இதுவுமொன்று. மூலவர் புண்டரீகாக்ஷன். நின்ற திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம் தாயார்—செண்பகவல்லி, பங்கயச் செல்வி. தனிக்கோயில் நாச்சி சந்நிதி உண்டு தீர்த்தம்—மதிலுக்குள் ஏழு தீர்த்தங்கள் உள்ளன திவ்ய, கந்த ஹரபுஷ்கரிணிகள், குச, சக்ர, புஷ்கல, பதும, வான மணிகர்ணிகா ஆகியன. விமானம்—விமலாக்ருதிவிமானம். பெரிய திருவடிகள், சிபி, பூதேவி, மார்க்கண்டேயர், லட்சுமி, ப்ருஹ்மருத்ராதிகள் ஆகியோருக்கு இத்தலத்து இறைவனது திவ்யக்காட்சி கிடைக்க மகிழ்ந்தனராகச் செய்தி.[146]

இத்தலத்திற்கெனப் பல சிறப்புகள் உள்ளன. உய்யக் கொண்டார் அவதரித்தது, உடையவர் வைணவம் வளர்க்க வாசம் செய்தது, ஸ்வாமி தேசிகரும், மணவாள மாமுனிகளும் மங்களாசாசனம் செய்தது திருமங்கை, பெரியாழ்வார்கள் பாடியது முதலிய பெருமைகட்குரியதாம் இத்தலம்.

### திருமங்கைப் பாசுரங்களில் திருவெள்ளறை

திருவெள்ளறை தலத்தில் தென்றலானது மாந்தோப்பு களிலே நுழைந்தும் மல்லிகை, முல்லைப்பூக்களை மலரச் செய்தும் மிக்க பரிமளம் வீசி வந்துலாவுகிறது. மேலும் அத்தென்றல் குருக்கத்தி செடிகளிலே படிந்து அங்குள்ள பரிமளங்களை முகந்து எங்கும் வீசிய வண்ணமாய் இத்தலத்தில் சோலைகள் சூழ்ந்து நிறைந் துள்ளன, மீன்கள் துள்ளி விளையாடப்பெறும் தடாகங்களும், தாமரைமலர்கள் மணக்கின்ற பொய்கைகளும் மிக்குள. மாஞ்சோலையில் போய்ப் புகுந்து அங்குள்ள தளிர்களைத் தின்ற பெண்குயில் வாய் துவர்ப்படைந்து போக, அத் துவர்ப்பை வேறு ருசியாலே மாற்ற வேண்டி இனிய பலா பழத்திலே சென்று வாய்வைக்கின்றது பெரிய காட்டு முல்லைக்கொடிகளோ கரும்புகளின்மேல் ஏறிப் படர்ந்து

வெண்ணிறமான பூக்களைப் பூக்க, அவற்றை வண்டுகள் மொய்க்கும்போது அவற்றின் வாயிலே தேன் பெருகுகின்றது. தம்பதிகளான சோடி வண்டுகள் பூவிலே படுத்திருக்க, அவற்றுள் ஊடல் எழ - ஆண் வண்டு பேடைக்குத் தெரியாது ஓரிடத்தில் ஒளிய எண்ணி மகளிர் கூந்தலில் மறைகின்றது; சந்திரமண்டலத்தளவும் சென்று ஓங்கிய சிறந்த மாடங்களிலே சென்றணைகிறது.

வண்டுகள் தாமரை மலர்களில் இருந்து பெருகின மகரந்தத்தை உண்டு இனிய பண்களைப் பாடுகின்றன. கரும்பு வண்டுகளோ தென்ன தென்ன என இனிய இசைமீட்டு கின்றன. அசோக அழகிய மலர்களைத் தீயாக எண்ணி அஞ்சி அப்பால் செல்லும் இயல்பினதான வண்டுகள் சில சமயங்களில் அவ்வெண்ணமின்றி 'இவைமலர்களே' எனத் துணிந்து அவற்றில் மதுவுண்ண செல்கின்றன அது கண்ட பாமரக்குயில்கள் ஐயகோ! வண்டுகள் தீயில் அகப்பட்டனவே வருந்துகின்றன.[147]

இவ்வாறு இத்தலத்து சோலை எழில், நீர், நிலவளச்சிறப்பை பலகாட்சிகளைக் காட்டிப் பேசுகிறார் ஆழ்வார்.

### 4-3-21-0. அரங்கம்

ஸ்ரீவைணவத்திவ்ய தேசங்களில் முதன்மையானது இத்தலமாம். 'கோயில்' எனச் சிறப்புப் பெயருடன் விளங்கு வதும் இதுவாம்.

திருவரங்கம் விளக்கம், சிறப்புக்கள், ஆழ்வார் திருமங்கை பாசுரங்களில் திருவரங்கம் பெறுமிடம் ஆகியன ஈண்டுக்கூறப் பெறுகின்றன.

### 4-3-21-1. திருவரங்கம்

சோழநாட்டுத்தலங்களுள் முதன்மையானது திருவரங்கத் திருத்தலம். மூலவர்—ஸ்ரீரங்கநாதன், புஜங்கசயனம், தெற்கு

நோக்கித் திருமுக மண்டலம். தாயார்—ஸ்ரீரங்கநாயகி, தீர்த்தங்கள் அந்த்ர புஷ்கரிணி; காவிரி, கொள்ளிடம், தலவிருட்சம்—புன்னை. விமானம்— பி ர ண வ ா க் ரு தி. தர்மவர்மா ரவிதர்மன், சந்த்ரன், விபீடணன் முதலியோருக்கு இத்தலத்திறைவனது திருக்காட்சி கிடைத்தது என்பர்.[148]

இத்தலம் திருமால் திருவுள்ளம் உவந்து தங்கிய இடமாத லால் திருவரங்கம் எனப்பெயர் பெற்றது "திருமகனார் திருநிருத்தஞ் செய்யும் இடமாய் இருத்தலாலும், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருவுக்குக் கூத்துப் பலியிடமா யிருத்தலாலும், ஆற்றிடைக் குறையாதலாலும் திருவரங்கம் எனப் பெயர் பெற்றது.[149] திருவரங்கம் என்பதில் திரு என்பது சிறப்புகருதி வழங்கப்படும் சொல்லாகும். அரங்கத்திற்கு அடைமொழி ஆகும். அரங்கம் என்ற சொல்லுக்கு அம்பலம், சபை என்று பொருள். சைவர்களுக்குத் தில்லை விளங்குவது போல் வைணவர்களுக்கு அரங்கம் விளங்குகிறது. மேலும் இத்தலம் திருமாலின் திருப்பதிகள் நூற்று எட்டினுள் தலைமையானதாகும். சோழநாட்டுத்திருப்பதிகள் நாற்பதில் முக்கியமானது. பூலோக வைகுண்டம், போகமண்டபம் என்று சிறப்பித்து வழங்கக் கூடியது. ஸ்வயம்வ்யக்தசேத்திரம் எட்டினுள் ஒன்றாம்.

## 4-3-21-2 சிறப்புக்கள்

திருவரங்கநாதனை மதுரகவியாழ்வார் தவிர மற்றப் பதினொரு ஆழ்வார்களும் பாடி பரவியுள்ளனர்: நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தில் பாடப்பட்ட தலங்களுள் பாசுர எண்ணிக்கையில் முதலிடம் பெறுவது திருவரங்கமாகும் திருவரங்கம் பற்றிப் பெரியாழ்வார் முப்பத்தைந்து பாசுரங் களும், ஆண்டாள் பத்து பாசுரங்களும், திருமழிசையாழ்வார் பதினான்கு பாசுரங்களும், தொண்டரடிப் பொடியாழ்வார் ஐம்பத்தைந்து பாசுரங்களும், திருப்பாணாழ்வார் பத்து பாசுரங்களும், திருமங்கையாழ்வார் ஒரு பாசுரமும், பூதத்தாழ்வார் நான்கு பாசுரங்களும், பேயாழ்வார் இரண்டு

பாசுரங்களும், நம்மாழ்வார் பன்னிரண்டு பாசுரங்களும் பாடியுள்ளனர்.

திவ்வியகவிப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் திருவரங்கம் பற்றிப் பாடிச் சிறப்பித்த நூல்கள் பல. அவை திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்தந்தாதி, திருவரங்கத்து மாலை, ஸ்ரீரங்கநாயகர் ஊசல் ஆகியன. பெரியநம்பிகள், பட்டர் பெருமான், பிள்ளை லோகாச்சாரியார், வடக்குத் திருவீதிப்பிள்ளை ஆகியோர் இத்திருத்தலத்தில் பிறந்தவர்களாவர். கம்பன் தன் இராமகாதையை அரங்கேற்றிய பெருமையும் இத்தலத்திற்குண்டு இத்தலத்தின் சிறப்பினை —பெருமையைப் பேசக்கூடிய தகுதி நான்முகன் ஒருவனுக்கே உண்டு என்கிறது நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.[180]

தொண்டரடிப் பொடியாழ்வார் நந்தவன கைங்கர்யமும் திருமங்கையின் திருமதிள் கைங்கரியமும் பெற்றத் திருத்தலமிது.

இவ்வாலயத்தின் வடக்குப்பக்க பரமபத வாசலில் விரஜாநதி இருப்பதாக ஐதீஹம். கம்பராமாயண அரங்கேற்றத்தின்போது சிரக்கம்பம் செய்து ஆமோதித்த "மேட்டு அழகிய சிங்கர்'' என்னும் ஸ்ரீநரசிம்மமூர்த்தி இங்குக் கோவில் கொண்டுள்ளார்.[181]

## 4-3.21-3 திருமங்கை பாசுரங்களில் திருவரங்கம்

திருமங்கைப் பாசுராகளில் திருவரங்கத்தின் இயற்கை எழில், செல்வவளம் ஆகியன பின்வருமாறு சுவைபடக் கூறப்பெறுகின்றன.

காவிரி நதியினால் சூழப்பெற்றது; அழகிய சோலைகள் மிக்கது; அக்காவிரி நதியானது சந்தன மரங்கள், நவமணிகள், யானைத்தந்தங்கள், அகில் மரங்கள், மூங்கிலில் நின்றுதிர்ந்த முத்துக்கள், இரத்தினங்கள் முதலியவற்றைத் தள்ளிக் கொண்டும் 'வாழைச் சோலைகட்குள் புகுந்து அவற்றை

வேரோடு சாய்த்தும் பாய்ந்துசெல்கிறது. அவ்வாறு சோலை களில் புகுந்து வருதலால் மதுவோடு பெருகும் இந்நதியினை வண்டுகள் வந்து மொய்க்கின்றன. மேலும் இந்நதி மலர் களைக் கூந்தலில் சூடி, முலைகளில் குங்குமச் சேறு பூசியபடி விளங்கும் மாதர்கள் வந்து நீராடலால் குங்குமநிறத்தைத் தாங்கி ஓடும் தன்மையது. இவ்வாறு இந்நதி பாய்தலால் வளம்பெற்ற வயல்கள் திருவரங்கத்தில் மலிந்திருக்கின் றனவாம்.[182]

மேக மண்டலத்தை அளாவியிருக்கின்ற மாளிகை களையுடையது[183] அம்மாளிகைகளிலுண்டான அதிகமான அகிற்புகையும், சிறந்த வைதிக பிராமணர்கள் நடத்தும் யாகங்களில் உண்டான ஹோமதூபமும் சேர்ந்து பரிமளிக் கின்றன.[184]

திருவரங்கம் நல்ல செம்பொன்னோடு ஒத்த மதில்களால் சூழப்பெற்றது என[185] திருவரங்கம் மதிளை அரணாகப் பெற்றிருப்பதைக் கூறுகிறார்.

திருவரங்கம்—பிரமன் முதலிய விண்ணவராலும் மண்ணவராலும் வணங்கப்பெறுவது என மேலும் அதனைச் சிறப்பித்துப் பேசுகிறார் ஆழ்வார் திருமங்கை.[186]

## திருப்பேர்நகர்

சோழநாட்டுத் திருத்தலங்களுள் இத்தலமும் ஒன்றாகும்.

மூலவர்—அப்பக்குடத்தான், புஜங்கசயனம். அருகில் அமர்ந்திருக்கும் உபமன்யு முனிவருக்கு ஆசி கூறும் பெருமாளின் வலது திருக்கரம் ஒரு அப்பக்குடத்தையும் அணைத்திருக்கிறது. மேற்குநோக்கித் திருமுகமண்டலம் தாயார்—இந்திராதேவி, கமலவல்லி. தீர்த்தம்—இந்த்ர தீர்த்தம். கொள்ளிடம். விமானம்—இந்த்ரவிமானம். உபமன்யு பராசருக்கு இத்தலத்து இறைவனது திருக்காட்சி கிடைத்ததாம்.[187]

இத்தலத்தைப் பெரியாழ்வார், திருமங்கை, திருமழிசை, நம்மாழ்வார் ஆகியோர் மொத்தம் முப்பத்துமூன்று பாசுரங்களால் பாடியுள்ளனர்.

இத்தலத்து இறைஅடியார் ஒருவருக்கு அவர் விரும்பிய கண்ணனின் சிறுகுழந்தை விளையாட்டுகளுடன் சேவை தந்ததாய் வரலாறுண்டு.[188]

## திருமங்கை பாசுரங்களில் திருப்பேர்நகர்

இத்தலம் தாமரைகள் மலரப்பெற்றிருக்கிற கழனிகளை உடையதாய்—அடர்ந்த சோலைகளையுடையதாய், திண்ணிய மதில்கள் சூழப்பெற்றது. இத்தலத்துச் சோலைகள் சந்திர மண்டலத்தையும், மேக மண்டலத்தையும் அளாவி இருக்கின்றனவாம். இச்சோலைகளில் வண்டுகள் நிறைந்து ரீங்காரம் இடுகின்றன. சோலைகளின் தன்மை இப்படியிருக்க, இத்தலத்து கழனிகளோ—அக்கழனிகளிலுள்ள மீன்களோ அந்தணர்களின் வேதகோஷத்தைக் கேட்டு அஞ்சி துள்ளியோடுகின்றன. இவ்வாறு இத்தலம் நீர்நிலசெல்வவளம் பொருந்தியதாயுளது [189] எனப் பாடி பரவசமுறுகிறார்.

## 4-3-23 நந்திபுரவிண்ணகரம்

இத்தலம் சோழநாட்டுத் தலங்களில் ஒன்று

மூலவர்—ஜகந்நாதன், நாகநாதன், விண்ணகரப் பெருமாள் வீற்றிருந்த திருக்கோலம். மேற்கே திருமுக மண்டலம். தாயார்—செண்பகவல்லித்தாயார், தீர்த்தம் நந்தி தீர்த்தபுஷ்கரிணி. விமானம்—மந்தாரவிமானம். நந்திக்கு இத்தலத்திறைவனது திருக்காட்சி கிடைக்கப் பெற்றது என்பர்.

நந்தி இவ்விடத்தில் தவம் செய்து சாபவிமோசனம் பெற்ற தலமாதலால் 'நந்திபுரம்' என்றும் பகவானுக்கு 'நந்திநாதன்' என்றும் பெயர் உண்டாயிற்று. நந்திவர்மன்

ஏற்படுத்திய ஊர் என்றும் அவன் கட்டிய கோயில் என்றும் இதனைக் கூறுவர். 'நந்திபணி செய்த நகர்' என்பர் திருமங்கையார். சிபி சக்கரவர்த்தி தன் உயிரைத் துறந்து புறாவின் உயிரைக் காப்பாற்றத் தராசுதட்டில் தன் மாமிசத்தை வைத்து அது சமமாகாதிருக்க, தன்னையே புறாவின் எடைக்குச் சமமாக எதிர்த்தட்டில் வைத்துக் கொண்டு, அர்ப்பணிக்கத் துணிந்த அதிசயத்தைக் காண கிழக்கே இருந்த பெருமாள் மேற்கு முகமாய்த் திரும்பியதாய்க் கூறுவர்.[160]

அத்தலத்தைத் திருமங்கை பத்துப் பாசுரங்களால் ஆராதித்து அகமகிழ்கிறார்.

**திருமங்கை பாசுரங்களில் நந்திபுரவிண்ணகரம்**

நந்திபுரவிண்ணகரம் வரிவண்டு மதுஉண்டு, பாடும்படியான சோலைகள் மிக்குடையது; அச்சோலைகள் மயில்கள், குயில்களொடு, மணமிக்க மலர்களையும் கொண்டு பரிமளம் வீசப்பெற்றன. மேகங்கள் தவழும்படிக்கு விண்ணுயர்ந்த தன்மையுடையன.[161]

"...கார்மயில்கள்
ஆடு பொழில்சூழ்"

"பொங்குபுன லுந்துமணி கங்குளிருள் சீறுமொளி
யெங்கு முளதால்"[162]

என்று இத்தலத்தை—அதன் வளத்தைப் பாடி மகிழ்கிறார்.

வானவர்கள் மண்ணில் இதுபோன்ற நகரில்லை என மலர்கள் தூவி வாழ்த்தும்படி சிறந்தது இத்தலம்[163] என்று இத்தலப்பெருமைக்குப் பெருமை சேர்க்கிறார்.

**4-3-24. திருவிண்ணகர்**

சோழநாட்டுத்திருப்பதிகளுள் இத்தலமும் ஒன்று.

இத்தலத்தைப் பிரம்மனே அமைத்து விண்ணகரம் என அழைத்ததாய் வரலாறு. துளசிவனம், மார்க்கண்டேய சேத்திரம் என்றும் இத்தலம் அழைக்கப்பெறுகிறது.[164]

மூலவர்—ஒப்பிலியப்பன், ஸ்ரீநிவாஸன். தாயார்—பூமிதேவி, தீர்த்தம் — ஹோராத்ரபுஷ்கரிணி, ஆர்த்தி புஷ்கரிணி விமானம்—விஷ்ணுவிமானம். மார்க்கண்டேய ருக்கும், பெரிய திருவடிகட்கும், காவிரி, தர்மதேவதைக்கும் இத்தலத்து இறைவனது திருக்காட்சி கிடைத்ததாகச் செய்தி.

இத்தலத்திறைவன் திருப்பதி ஸ்ரீநிவாஸருக்குத் தமைய னார் என்பர். மிருகண்டு முனிவனின் மனைவி விருப்பப்படி உப்பில்லாத பிரசாதம் நிவேதனம் செய்யப்படுவதால் இத் தலத்து எம்பிரானுக்கு உப்பிலியப்பன் எனப் பெயர் ஏற் பட்டிருக்கலாம். இங்குப் பெருமாளைச் சேவிக்க வருபவர்கள் கோவிலுள் உப்பையோ, உப்புச்சேர்ந்த உணவையோ கொண்டு சென்றால் அவர்கட்கு நரகம் கிட்டுமெனப் புராணம் கூறுகிறது. திருமங்கை, பேய், நம்மாழ்வாரால் இத்தலம் மொத்தம் நாற்பத்தேழு பாசுரங்களால் பாடப் பெற்றுள்ளது.[165]

### திருமங்கை பாசுரங்களில் திருவிண்ணகர்

"வருபுனல்சூழ் திருவிண் ணகரானே"

என இத்தல நீர்வளச் சீரினைப் பாடிக்களிக்கிறார் ஆழ்வார்.

### 4-3-25. திருநறையூர்

மூலவர்—திருநறையூர்நம்பி. நின்ற திருக்கோலம். தாயாரை மணந்து கொள்ளும்நிலை. கிழக்கே திருமுக மண்டலம். தாயார்—வஞ்ஜுளவல்லி தீர்த்தம்—மணி முக்தாபுஷ்கரிணி, ஸங்கர்ஷணதீர்த்தம், ப்ரத்யும்னதீர்த்தம், அநிருத்ததீர்த்தம், ஸாம்பதீர்த்தம், விமானம்—ஸ்ரீநிவாஸ

விமானம். மேதான முனிவருக்கும், பிரம்மாவிற்கும் இத் தலத்து இறைவனது திருக்காட்சி கிடைத்தது.

நறையூர்நம்பிக்கு அணிவிக்கத் திருப்பாற்கடலிலிருந்து வைரமுடியைக் கருடாழ்வார் எடுத்துப்போகையில், அதிலுள்ள மணிஒன்று விழுந்ததால் அத்திருக்குளம் மணி முத்தாறானது என இத்தலம் பற்றிய தலவரலாறு கூறுகிறது.[167]

மேதானமுனியின் வளர்ப்புமகளான வஞ்ஜுளவல்லியைப் பகவான் தனது நிலையில், ஸங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன், புருஷோத்தமன், வாஸுதேவன் என்ற ஐந்து உருவங்களில் வந்து மணந்து கொள்கிறார் என்பர்.[168]

சுகந்தகிரி நறையூரானது என்பர். சுகந்தம்—நறுமணம். தமிழில் இதுவே நறையூர் எனப் பெயர் பெற்றதாம்.[169] இத்தலம் ஸ்ரீநிவாசனுக்கு மட்டும்தான் உகந்ததன்று. ஸ்ரீதேவிக்கும் தேன்அனைய இருப்பதாவது பற்றி நறையூர் எனப் பெயர் பெற்றிருக்கலாம்.[170]

திருமங்கை மொத்தம் நூற்றுபத்துப் பாசுரங்களால் நம்பியை மங்களாசாசனம் செய்கிறார்.

### திருமங்கையாழ்வார் பாசுரங்களில் திருநறையூர்

ஆழ்வார் திருநறையூர் வளமிக்கது: சோலை எழில் உடையது; செல்வச்சீருடையது; அழகிலும் ஒழுக்கத்திலும் சிறந்த குடிமக்களைப்பெற்றது என்கிறார்.

திருநறையூர் திருத்தலத்து வயல்களில் வரால்—வாளை மீன்கள் பாய்ந்த வண்ணமிருக்கின்றன. அன்னங்கள் நெருக்கமாய் மலர்ந்துள்ள நெய்தல் மலர்களின் மதுவினை உண்டு, தாமரை மலர்மீது உறங்குகின்றன.[171]

**"கொள்ளைக் கொழுமீன் உண்குருகு கோடிப் பெடையோடும்**
**நள்ளக் கமலத் தேறல் உகுக்கும்—நறையூரே"**

"பெடையடர்த்த மடவன்னம் பிரியாது மலர்க்கமலம்
மடலெடுத்து மதுநுகரும் வயலுடுத்த திருநறையூர்"

"சீர்தழைத்த கதிர்ச்செந்நெல் செங்கமலத் திடையிடயின்
பார்தழைத்துக் கரும்போங்கிப் பயன்விளைக்கும்
திருநறையூர்"[172]

இவ்வாறு நறையூரின் வயல்வளத்தை ஆழ்வார் ஒருசில காட்சிகளைக் காட்டிப் பேசுகிறார்.

நறையூர் பொழில்கள் மிக்கது. என்பதை ஆழ்வார்,

"சினையார் தேமாஞ் செந்தளிர் கோதிக் குயில்கூவும்
நனையார் சோலை சூழ்ந்தழ காய—நறையூரே!"

"பொறியார் மஞ்ஞை பூம்பொழில் தோறும் நடமாட
நறுநாண் மலர்மேல் வண்டிசை பாடும்—நறையூரே"

"பொந்தில் வாழும் பிள்ளைக் காகிப் புள்ளோடி
நந்து வாரும் பைம்புனல் வாவி—நறையூரே"[173]

என்னும் பாசுரவரிகளில் பாடிச்செல்கிறார்.

பொன்மலர்மேல் வண்டானது கள்ளுண்ண, தென்றல் காற்று அலர்தூற்ற, அது கேட்டு முல்லை மலரோ முறுவலிக்கிறது [174]

"சுளைகொண்ட பலங்கனிகள் தேன்பாய கதலிகளின்
திளைகொண்ட பழம்கெழுமித் திகள்சோலைத்
திருநறையூர்"

"சீர்தழைத்த கதிர்ச்செந்நெல் செங்கமலத் திடையிடையின்
பார்தழைத்துக் கரும்போங்கிப் பயன்விளைக்கும்
திருநறையூர்"[175]

நறையூரினது நீர்வளத்தை—செல்வவளத்தை ஆழ்வார் பாசுரங்கள் வழி பின்வருமாறு அறியலாம்.

இரத்தினம் — அகில் — மணிகள் — மணிமுத்து, புழைக் கைம்மா, கரிக்கோடு ஆகியவற்றைக் கொணர்ந்து தள்ளும் பொன்னிநதி பாய்கிறது.[176]

விண்ணைமுட்டும் நீள்மாடங்களுடையது.

**"துன்றோளித் துகில்படலம் துன்னியெங்கும், மாளிகைமேல் நின்றார, வான்மூடும் நீள்செல்வத் திருநறையூர்"[177]**

திருநறையூரில் அந்தணர்கள் செய்யும் வேள்விப்புகை வளர்ந்து வானைமூடுகிறது விழாக்களும் வேள்விகளும் எப்பொழுதும் நடந்த வண்ணமாயிருக்கின்றன.[178]

இத்தலம் வேதம் நான்கைந்து வேள்வியங்கம் ஆறிசை ஏழில் சிறந்தவராய்—அயனை—சிவனை ஒத்த பெருமை உடையவராய்— வள்ளல் தன்மையானவராய்— விளங்கும் அந்தணர்கள் வாழ்வது. இத்தலத்து மாதர்கள் வேல்போன்ற கண்களை உடையவராய் முல்லைபோன்ற பற்களோடு கமலம் போன்ற முகஅழகினையுடையவராகி, காவிபோன்ற விழிகளைப் பெற்றவராய் மிக்குஅழகோடு விளங்குகின்றனர்.[179]

இவ்வழகிய மாதர்களின் நடையழகு கண்டு அன்னங்களானவை நாணி ஒளிந்து கொள்கின்றனவாம். இவ்வாறு திருநறையூர் ஆழ்வார் பாசுரங்களில் சிறப்பிடம் பெறுகிறது.

### 4-3-26. திருச்சேறை

சோழநாட்டுத் திருப்பதிகளுள் இதுவுமொன்று.

மூலவர்—ஸாரநாதன். நின்ற திருக்கோலம். கிழக்கே திருமுகமண்டலம். தாயார்—ஸாரநாயகி. தீர்த்தம்—ஸார புஷ்கரிணி. விமானம்—ஸாரவிமானம். காவிரிக்கும், மார்க் கண்டேயருக்கும் இத்தலத்து இறையினது திருக்காட்சி கிடைத்தது.

பிரளய காலத்தில் இவ்வூரின் கெட்டியான மண்ணைக் கொண்டு ஒரு கடம் செய்து அதில் வேதங்கள் வைத்துக்

காப்பாற்றப்பட்டதாகப் புராணவரலாறு. ஸாரபுஷ்கரிணியில் நீராடி இறைவனை வணங்கினால் எல்லா நன்மைகளும் உண்டாகும் என்பர்.[180]

திருமங்கை மொத்தம் பதின்மூன்று பாசுரங்களால் இத்தலத்திறையை இறைஞ்சுகிறார்.

**திருமங்கை பாசுரங்களில் திருச்சேறை**

திருச்சேறையின் செல்வ வளத்தைக் கூறவந்த ஆழ்வார், அத்தலத்தின் மாடங்களின் உயர்வினை உயர்வு நவிற்சியாகப் பாடி மகிழ்கிறார்.

> **"விண்சேரும் இளந்திங்கள் அகடுரிஞ்சு**
> **மணிமாட மல்கு செல்வத்**
> **தண்சேறை யெம்பெருமான்"**[181]

மணிமாடங்கள் இளந்திங்கள் அகடுரிஞ்சும் அளவிற்கு விண்ணைமுட்டும் வண்ணம் உயர்ந்துள்ளனவாம்.

சேறையின் சோலையழகைப் பாடவந்தவர்,

> **"வம்பலரும் தண்சோலை வண்சேறை**
> **வானுந்து கோயில் மேய**
> **எம்பெருமான்"**[182]

எனப்பாடிக் களிக்கிறார்.

திருச்சேறையின் அழகிய சோலைகளில் பூத்துக் குலுங்கும் மலர்களொடு வண்டுகள் இணைகின்றனவாம், அவ்வண்டுகள் பண்பாடிய வண்ணம் அச்சோலைகளில் அங்குமிங்கும் பறந்து களிக்கின்றனவாம்.[183]

இவ்வாறு இத்தலத்தின் செல்வவளம், சோலை எழில் ஆகியன சிறப்பாக பேசப்பெறுகின்றன.

## 4-3-27. திருவழுந்தூர்

சோழநாட்டுத் திருப்பதிகளுள் இத்தலமும் ஒன்று. மூலவர்—தேவாதிராசன். நின்ற திருக்கோலம் தாயார்—செண்பகவல்லி, செங்கமலவல்லி. தீர்த்தம்—தர்சனபுஷ்கரிணி காவிரி. விமானம்—கருடவிமானம்.

தர்மதேவதை, உபரிசரவஸு, காவிரி, கருடன், அகத்தியர் ஆகியோருக்கு இத்தலத்து இறைவனது திருக்காட்சி கிடைத்தது

உபரிசரவசு என்ற ஓர் அரசன், இருடிகட்கும் தேவர்கட்கும் எழுந்த வழக்கில் ஒருதலைச்சார்பாய்த் தீர்ப்புக்கூற, இதனால் அம்முனிவர்கள் கோபமுற்று, அவனுடைய வானில் பறக்கும் தேரினைப் பூமியில் சென்று அழுந்துமாறு சாபம் இட்டனர் இத்தலத்தின் திருக்கோயிலுக்கு நேர்மேலாய் இத்தேர் சென்றதால் பெரிய திருவடிகள் அதனை இறைவனுக்குச் செய்த தீமையாய்க்கொண்டு கோபத்தோடு அத்தேரைக் கீழ்இழுத்து பூமியில் அழுந்தவைத்தார் என்பர். தேர் அழுந்திய ஊரானதால் திருவழுந்தூரானதாம்.[184]

திருமங்கையார் மொத்தம் நாற்பத்தைந்து பாசுரங்களால் இத்தலத்திறையைப் பாடிக் களிக்கிறார் [185]

கண்ணபெருமான் தான் மேய்த்துக்கொண்டிருந்த பசுக் கூட்டங்களை விட்டுவிட்டு நீர் அருந்த சென்றபோது, அவற்றைப் பிரம்மதேவன் திருவழுந்தூருக்கு ஓட்டிச்சென்று விட, கண்ணன் புதியதாய் ஒரு பசுக்கூட்டத்தை உருவாக்கிக் கொள்ள, பிரம்மன் எம்பெருமானின் ஸ்வாமித்துவத்தை உணர்ந்து தன் பிழையை மன்னித்தருள இறைவனை வேண்ட, அவனும் மன்னித்து ஆநிரை மேய்க்கும் கோவலனாக ஈண்டுக் காட்சி தருகிறான். பஞ்சகிருஷ்ண க்ஷேத்திரங்களில் இத்தலமும் ஒன்றாம்.[186]

## திருமங்கை பாசுரங்களில் திருவழுந்தூர்

வயல்களில் தாமரைமலர்கள் களைகளாய் மலிந்துள. அத்தாமரைமலர்களின்மேல் மதுவண்டு இசைபாட அது கேட்டு ரசித்துக்கொண்டு அன்னமானது தனது பெடையோடு வீற்றிருக்கிறது. இவ்வயல்களில் மிக்கு விளைந்துள்ள செந்நெல்லானது அவற்றுக்கு கவரிவீசிச்சுகம் சேர்க்கிறது [187]

திருவழுந்தூர் சோலைகளில் மாதவிக்கொடிகள் கொம்பினைப் பற்றிச் செழிப்புடன் மணம் பரப்ப—வண்டினங்கள் ரீங்காரமிட்டுப் பறந்து மகிழ்கின்றன. குயில்கள் கூவி இசைபாட, மயில் கூட்டங்கள் நாட்டியமாடிச் சோலைக்கு அணி செய்கின்றன [188]

சண்டு, சந்தம், அகில், பொன், மணிகளைத் தள்ளிக் கொண்டு வந்து வயல்கள்தொறும் வளம்சேர்க்கிறது பொன்னி நதி [189]

இத்தலத்து மாதர்கள் தங்கள் கூந்தலுக்கிடும் அகிற்புகை வானுயர ஓங்கி முகிலை மறைக்க, ஆலையிலிருந்து எழும் புகையோ அழல்கதிரை மறைக்கின்றது [190]

இத்தலத்தில் கடல்போல் நெடிய வீதிகளுள. வீதிகளிலுள்ள மணிமாடங்கள் விண்ணுயர விளங்குகின்றன. மறையோர் முப்பொழுதும் எப்பொழுதும் வேள்விகள் செய்த வண்ணமுளர். அவ்வேள்வியின் முழக்க ஒலி கடல் ஓசை போல் பெரிதும் எழுந்த வண்ணமாயுளது.[191]

இத்தலம் பொன்மதிள் சூழ்ந்து அழகாய் விளங்குகிறது. இத்தலத்துப் பெண்டிர் அழகில் சிறந்தவராய்க் கிளிபோன்று மிழற்றும் இன்சொல்லினராய் அன்னம்போன்ற அழகிய நடை பயின்றவராய் விளங்குகின்றனராம் [192]

இவ்வாறு திருவழுந்தூரின் வயல்—சோலை—செல்வ நகர்வளத்தை வாயார தன் மனம் குளிரப்பாடி பக்திக்களிப்பில் ஆழ்கிறார் ஆழ்வார் திருமங்கை.

## 4-3-28 திருச்சிறுபுலியூர்,

மூலவர்—அருள்மாகடல், தலசயனப் பெருமாள். புஜங்க சயனம் தெற்கே திருமுகமண்டலம். தாயார்—திருமாமகள் நாச்சி. உத்ஸவர்—தயாநாயகி. தீர்த்தம்—மானஸபுஷ்கரிணி, அனந்தஸரஸ். விமானம்—நந்தவர்த்தன விமானம். வியாசர், வியாக்ரபாதர் ஆகியோருக்கு இத்தலத்திறைவனது திருக் காட்சி கிடைத்ததென்பர்.[193]

புஜங்கசயனத்திலேயே மிகச் சிறிய திருவுருவம் இது. இதனைப் பற்றி ஆழ்வார் குறைபட "உமது குறை தீர நமது மிகப் பெரிய திருவுருவைத் திருக்கண்ணமங்கையில் காணும்" என்று பெருமாள் அருளிச் செய்ததாக வரலாறு. அனந்த னுக்குக் கருடனிடமிருந்து அபயமளித்த தலமிது.[194]

வியாக்ரபாதர் சிவனைத் தனது தவத்தினால் கண்டு அவனது ஆணைப்படி இவ்விடத்தில் பெருமாளைப் பூசித்து வைகுந்தம் அடைந்ததால் இத்தலம் 'சிறுபுலியூர்' எனப் பெயர் பெற்றது என்பர்.[195]

திருமங்கையார் இத்தலத்தைப் பத்துப் பாசுரங்களால் பாடியுள்ளார்.

### திருமங்கை பாசுரங்களில் திருச்சிறுபுலியூர்

திருச்சிறுபுலியூர் சோலைகள் நிறைந்தது; வளமிக்கது; வயல்வளம் கொழிப்பது என்கிறார் ஆழ்வார் திருமங்கையார்.

**"அறையும்புனல் ஒருபால்வயல் ஒருபால்பொழில் ஒருபால்**
**சிறைவண்டினம் அறையும்சிறு புலியூர்"**

**"தேனார்பொழில் தழுவும்சிறு புலியூர்"**

**"...........எறிநீர்ச்**
**செந்தாமரை மலரும்சிறு புலியூர்"**

"முழுநீலமும் அலராம்பலும் அரவிந்தமும் விரவி
கழுநீரோடு மடவாரவர் கண்வாய்முகம் மலரும்
செழுநீர்வயல் தழுவும்சிறு புலியூர்"[196]

கடலலைகள் கரைகளிலே மணிகளைக் கொண்டுவந்து சேர்ப்பதால் செல்வச்சிறப்பினை உடையது. அந்தணர்கள் வாழ்வது; கிளியொத்த மடவார்கள் செவ்வாய்மொழி பயில்வது.

## 4-3-29. திருக்கண்ணமங்கை

சோழநாட்டுதிருத்திருத்தலங்களுள் இப்பதியும்ஒன்றாம்.

மூலவர் — பக்தவத்ஸலப் பெருமாள், பத்தராவிப் பெருமாள். நின்றதிருக்கோலம். மிகப்பெரிய திருவுருவம். கிழக்கே திருமுகமண்டலம். தாயார்—அபிஷேகவல்லி. தீர்த்தம்—தர்சன புஷ்கரிணி. விமானம்—உத்பலவிமானம். இறைக் காட்சி பெற்றவர்கள்—வருணன், ரோமசமுனிவர்.

கோவிலுக்கு வேண்டிய விமானம், மண்டபம், அரண்யம், ஸரஸ்ஸு, ஆறு, நகரம் ஆகிய ஏழு அம்சங்களும் அமுத மயமாய் உள்ளனவாய்க் கூறுவர். இத்தலத்தில் ஓர் இரவு தங்கினால் மோட்சம் கிட்டுமென்பர்.[197]

ஸ்ரீ ஹரியின் மூன்று, திருநாமங்களோடு கூடிய மந்திரம் இத்தலத்தில் சித்தியைச் சீக்கிரம் கொடுக்கும் என்பது புராணச் செய்தி. லட்சுமி தவம் செய்ததால் லட்சுமிவனம் என்ற பெயர் இத்தலத்திற்குண்டு சிவபிரான் இத்தலத்தில் நான்கு உருவமெடுத்து நான்கு திசைகளையும் காத்து வருகிறானாம்.[198]

திருமங்கை மொத்தம் பதினான்கு பாசுரங்களைப் பாடி இத்தலத்திறையை வேண்டி நிற்கிறார்.

## 4-3-30 திருக்கண்ணபுரம்

இத்தலம் மாயூரம்—காரைக்குடி இருப்புப்பாதையில் உள்ள நன்னிலம் என்னும் இரயில் நிலையத்தில் இருந்து கிழக்கே ஐந்து கல் தொலைவில் அமைந்துள்ளது.

கிருஷ்ணாரண்யக்ஷேத்திரம் என்றும், அஷ்டாக்ஷர மகா மந்திர சித்தி க்ஷேத்திரம் என்றும் இத்தலம் பெயர் பெற்று விளங்குகிறது. திருவரங்கநாதனுக்கு இத்தலம் கீழைவீடாய் இருக்கிறது. மகரிஷிகள் பலர் இங்கு விரும்பி தவம் செய்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. முக்திதரும் தலங்களில் இதுவும் ஒன்றாகக் கருதப்படுகிறது

கண்ணபிரான் எழுந்தருளியுள்ள தலமாதலால் இத்தலம் கண்ணபுரம் எனப் பெயர் பெற்றிருக்கலாம்.

நாலாயிரத்துள் இத்தலம் பற்றி வரும் பாசுரங்கள் மொத்தம் நூற்று இருபத்தெட்டாம்.

மூலவர்—நீலமேகப்பெருமாள், சௌரிராஜன். நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுகமண்டலம். தாயார்—கண்ணபுரநாயகி. தீர்த்தம்—நித்யபுஷ்கரிணி. விமானம்—உத்பலாவதக விமானம். இத்தலத்திறைவனது திருக்காட்சி கிடைக்கப் பெற்றவர்கள் கருடன், கண்வமுனிவர், தண்டக முனிவர் ஆவர்,

ரங்கபட்டர் என்கிற அர்ச்சகர் சோழஅரசனுக்கும் பெருமாளுக்கும் கேசம் வளர்த்ததைக் காட்டுவதாக வாக்களித்ததைக் காப்பாற்ற, பெருமாள் திருமுடியில் திருக்குழற்கற்றையை வளர்த்துக் கேசத்தைக் காட்டியருளிய தால் சௌரிராஜன் என்ற பெயர் உண்டாயிற்று.[200]

பெருமாள் தன் சக்ராயுதத்தால் வீகடாக்ஷன் என்ற அசுரனை அழித்து முனிவர்கள் பிரார்த்தனைப்படி சக்ரபிரயோக நிலையினனாய்ச் சேவைசாதிக்கும் தலமிது வாம்.

முனியதரையர் என்னும் பக்திமான் அர்த்தசாமத்திற்கு மேல் கோயிலில் போகமுடியாத நிலையில் இறைவனுக்கு மானசீகமாகப் பொங்கல் படைக்க, இறைவன் அதனை ஏற்று, மூடிய கோவில்தனில் மணிஓசை கேட்டு வெண் பொங்கல் வாசனை வீசியதால், அதுமுதல் அர்த்தஜாமப் பொங்கல் நிவேதனத்திற்கு 'முனியோத்ரம்பொங்கல்' என்ற பெயர் வரலாயிற்று என்பர்.

பெரியாழ்வார், ஆண்டாள் குலசேகரர், திருமங்கை, நம்மாழ்வார் ஆகியோர் மொத்தம் நூற்று இருபத்தெட்டுப் பாசுரங்களால் இத்தலத்திறையை ஆராதிக்கிறார்,[201]

## திருமங்கை பாசுரங்களில் திருக்கண்ணபுரம்

திருக்கண்ணபுரத்தின் இயற்கை எழிலினைப் பின்வருமாறு நமக்குப் படம்பிடித்துக் காட்டுகிறார் ஆழ்வார் திருமங்கையார்.

திருக்கண்ணபுரச் சோலைகளில் கடிகமலமலர்கள் கள்ளுகுக்கின்றன. கார்வானம் நின்றதிர்கின்றது. நீலமலர் களைத் தாங்கியிருக்கும் சோலைகளில் வண்டுகள் வந்து தேனுண்டு பாட்டிசைக்கின்றன.[202]

ஆழ்வார் திருமங்கை இத்தலத்தை—அதன் வயல் வளத்தை,

"காரார் வயலமரும் கண்ணபுரம்"

"முடிபுல்கு நெடுவயல் படைசெல அடிமலர்
கடிபுல்கு கணபுரம் "

"கூரார் ஆரல் இரை கருதிக்
குருகு பாயக் கயலிரியும்
காரார் புறவில் கண்ணபுரம்"

"பெருந்தண் செங்நெற் குலைதடிந்து
களஞ்செய் புறவில் கண்ணபுரத்து"

"உழுநீர் வயலுள் பொன்கிளைப்ப
ஒருபால் முல்லை முகையோடும்
கழுநீர் மலரும் கண்ணபுரத்து"

"உவரி யோதம் முத்துந்த
ஒருபால், ஒருபால் ஒண்செந்நெல்
கவரி வீசும் கண்ணபுரத்து"[203]

எனப் பலவாறு பல காட்சிகளைக் காட்டிச் செல்கிறார்

"கன்னிமா மதிள்புடைசூழ் கண்ணபுரம்"

"கனஞ்செய் மாமதிள் கண்ணபுரம்"[204]

எனத் திண்ணிய மதிள்களால் சூழப்பட்டது கண்ணபுரம் என்கிறார்.

திருக்கண்ணபுரம் நீர்வளம் மிக்கது என்பதனை,

"துள்ளுநீர்க் கண்ண புரம்"

"பெருகுநீர்க் கண்ண புரம்"

"கலங்கல் முந்நீர்க் கண்ணபுரத்து"[205]

என்ற பாசுர வரிகளில் காட்டிச் செல்கிறார்.

இத்தலத்து மாடங்கள் விண்ணுயரம் கொண்டவை. அம் மாடங்களில் வான்மேகங்கள் வந்து தோய்கின்றன.[206]

"துங்கமா மணிமாட நெடுமுகட்டின் சூலிகை போம்
திங்கள்மா முகில்துணிக்கும் திருக்கண்ண புரம்"[207]

திருக்கண்ணபுரத்தின் செல்வச்சீரை ஆழ்வார் திருமங்கை,

"மணமலி விழவினொ டடியவர் அளவிய
கணமலி கணபுரம்"

"......நிதிகுலை[208]
கலமணி கலபுரம்
எனச் சொல்லிச் செல்கிறார்.

இத்தலத்தையும், இத்தலத்திறையையும் ஆழ்வார் ஒரு சேரப் புகழ்ந்து மேலும்மேலும் இத்தலத்தின் பெருமையை உயர்த்துகிறார்.

திருக்கண்ணபுரத்தானைக் கண்டவர்கள் மயங்கி—உகந்து தமது உள்ளத்தை அவனுக்கே தந்திடுவர். நான்முகன் முதலான தேவர்களும், மண்ணுலகத்தாரும் வந்து வணங்கி இத்தலத்திறையை இறைஞ்சுகின்றனர் என்கிறார்[209]

## 4-3.31. திருக்கண்ணங்குடி

மூலவர்—லோகநாதன். நின்ற திருக்கோலம். கிழக்கு நோக்கித் திருமுகமண்டலம். தாயார்—லோகநாயகி. தீர்த்தம் —ராவணபுஷ்கரிணி. தலவிருட்சம்—மகிழமரம். விமானம்— உத்பலவிமானம்.

பிருதி, பிரம்மா, உபரிசரவஸு, கௌதமர், திருமங்கை யார் ஆகியோருக்குத் திருக்கண்ணங்குடி இறையினது திருக் காட்சி கிடைத்ததாய்ச் செய்தி.

வசிஷ்டர் பக்தியினால் வெண்ணெய்மயமான கண்ணனை இளகாது கட்டித் திவ்யமங்கள விக்ரமாகத் தியானம் செய்வது வழக்கம். ஒருநாள் பகவான் கோபாலனாகி அவ்வெண்ணெய்க் கண்ணனை எடுத்து அமுதுசெய்துவிட அவர் அவனைப் பிடிக்க ஓடினார். கோபாலனும் மேற்கு திசைநோக்கி ஓட மகிழ மரத்தடியில் தவஞ்செய்து கொண்டிருந்த முனிவர்கள் தமது பக்திக் கயிற்றினால் கட்டிவிட எம்பிரான் அங்கேயே எழுந்தருள, அத்தலம் திருக்கண்ணங்குடி என்று பெயர் பெற்றது.[210]

திருமங்கை, நாகப்பட்டினத்திலிருந்து தங்கமயமான புத்தவிக்ரகத்தை ரங்கநாதன் கோபுரம், பிரகாரங்கள் கட்டல்

என்னும் திருப்பணி செய்ய களவாடி வந்ததாய்ச் செய்தி உண்டு. அச்சிலையைக் கொண்டுவந்து புதைத்து, பகவான் அருளால் எடுத்துச் சென்ற திருத்தலம் இத்திருகண்ணங்குடி என்பர்.[211]

கண்ணன் திருக்கோயில் கொண்டிருப்பதால் கண்ணங்குடி என இத்தலத்திற்குப் பெயர் ஏற்பட்டதாம். திருமங்கையார் இத்தலத்தைப் பத்துப் பாசுரங்களால் மங்களாசாசனம் செய்கிறார்.

**திருமங்கை பாசுரங்களில் திருக்கண்ணங்குடி**

திருக்கண்ணங்குடியின் இயற்கை எழில் பின்வருமாறு கூறப்பெற்றுளது. கதலி, கமுகு, சுரபுனை, செண்பகம் முதலியவற்றைப் பெற்று செழுமையான பொழில்களை உடையது; சோலைகளில் மயில்கள் நின்றாட, முகில்கள் முரசாய் நின்றதிர, வரி வண்டுகள் இசைபாடி களிக்கின்றன. இத்தலத்து வீசும் தென்றல் சோலைகளிலே புகுந்து புன்னை, மல்லிகை, மதுமலர் அளைந்து மணம் பரப்புகிறது குவளை குமுதம், கழுநீர், நெய்தல் மலர்கள் வயல்களிலே மலர்ந்திருக்கின்றன. அன்னங்களானது அத்தாமரை மலர்பீடங்கள் வீற்றிருக்க செந்நெல் கவரிவீசி அவற்றை மகிழ்விக்கிறது.[212]

இவ்வாறு இத்தல பொழில்—வயல் வளச்சீரைப் பாடும் ஆழ்வார் அதன் செல்வச்சீரைப் பின்வருமாறு சுவைபடக் கூறுகிறார்.

திருக்கண்ணங்குடி வயல்களில் திரைகளானது மாமணிகள் மரகதத்திரள், வைரம், முத்து ஆகியவற்றைக் கொணர்ந்து உந்தித் தள்ளுகின்றனவாம்.[213]

**"ஒன்றல்லா உருவத் துலப்பில்பல் காலத்**
**துயர்கொடி யொளிவளர் மதியம்**
**சென்றுசேர் சென்னிச் சிகரநன் மாடத்**
**திருக்கண்ணங் குடியுள்நின் றானே"**[214]

எனும்படிக்கு விண்ணுயர்ந்த மாடங்களை உடையதாம்.

## 4-3-32. புல்லாணி

பாண்டி நாட்டுத் திருப்பதிகளுள் இத்தலமும் ஒன்றாம்.

மூலவர்—கல்யாண ஜகந்நாதன். நின்ற திருக்கோலம், கிழக்கு நோக்கித் திருமுகமண்டலம். தாயார்—கல்யாணவல்லி, பத்மாஸநி. தீர்த்தம்—ஹேமதீர்த்தம், சக்ர தீர்த்தம், ரத்னாகரஸமுத்ரம். தலவிருட்சம் — அச்வத்தவிருட்சம். விமானம்—கல்யாணவிமானம்

புல்லாரண்யமுனிக்கும் ஸமுத்ரராஜனுக்கும் இத்தலத்திறைவனது திருக்காட்சி கிடைத்தது.

புல்லர் என்ற முனிவரின் அஷ்டாக்ஷரஜபத்தினால் பகவான் அச்வத்தமரத்தடியில் ஆவிர்பவித்தாகவும், புல்லருக்குப் பிரதியட்சமானதால் "புல்லாரண்யம்" என்று பெயர் வந்ததாகவும் புராணவரலாறு.[215]

இராமபிரான் தருப்பையைச் சயனமாக்கி அதிலிருந்து இலங்கைக்கு வழி அமைத்துத்தர வருணனை வேண்டியதால்—புல்லணைமேல் கிடந்து வருணனைக் கோரியதால் திருப்புல்லாணையாகி, அதுவே திருப்புல்லாணி என வழங்கப் பெறுகிறது[216]

ஆதியில் பரந்தாமன் தன்னிடமிருந்த படைப்புத் தொழிலைத் தான் படைத்த நான்முகனிடம் ஒப்படைத்தான். படைத்தல் பொறுப்பை மேற்கொண்ட நான்முகன் தெற்கு நோக்கி வந்தபோது கோடிக்கதிரவர்களின் பேரொளி ஒன்று தோன்றி மறைந்தது. நான்முகன் இறைவனிடம் அதன் இரகசியம் அறிய வினவியதாக வரலாறு. அப்பேரொளியே போதிமரத்தின் கீழ் வீற்றிருக்கும் ஜகந்நாதன் என்பர்.

இராமன் இங்கே அணைகட்ட வந்தபோது இங்குத் தவம் செய்த கண்வருக்குத் திவ்யமான வில்லைக் கொடுத்தபடியால் "தெய்வச்சிலையார்'' என்ற திருநாமம் ஏற்பட்டதாம்.[217]

திருமங்கையார் மொத்தம் இருபத்தோரு பாசுரங்கள் பாடி இத்தலத்திறையை வேண்டுகிறார்.

**திருமங்கை பாசுரங்களில் திருப்புல்லாணி**

இத்தலத்தில், புன்னைமரங்கள் முத்தினைச் சொரி கின்றன; திரைகளோ கரைகளில் மணிகளை உந்தி தள்ளு கின்றன.[218]

புல்லாணியின் செல்வவளத்தை இவ்வாறு காட்டிய ஆழ்வார் பின்வருமாறு அதன் சோலை, நில, நீர் வளங்களைப் பாடிக் காட்டுகிறார்.

**"போது நாளுங் கமழும் பொழில்சூழ்ந்த புல்லாணியே"**
**"பூவார் மணங்கமழும் புல்லாணி"**

**"கள்ளவிழும்மலர்க் காவியும் தூமடல் கைதையும்**
**புள்ளும் அள்ளல் பழனங் களும்சூழ்ந்த புல்லாணியே"**

**"உலவு கானல் கழியோங்கு தண்மைப் பொழிலூடு இசை**
**புலவு கானல் களிவண் டினம்பாடு புல்லாணியே"**

**"............எழில்தாமரை**
**புலங்கள் முற்றும் பொழில்சூழ்ந் தழகாய புல்லாணியே"**

**"............நித்திலங்கள்**
**பவ்வத் திரையுலவு புல்லாணி"**

**"பொருதிரைகள் போந்துலவு புல்லாணி"**[219]

## 4-3-33. திருக்குறுங்குடி (வாமனசேத்திரம்)

பாண்டியநாட்டுத் திருத்தலங்களுள் இத்தலமும் ஒன்று. மூலவர்—நின்றநம்பி நின்ற திருக்கோலம். கிழக்கு நோக்கித் திருமுகமண்டலம் குறுங்குடிவல்லிநாச்சியார் இங்குத் தேவி யாய் வீற்றிருக்கிறாள். தீர்த்தம்—திருப்பாற்கடல், பஞ்ச துறை, சிந்துநதி. சிவன் இத்தலத்திறைவனது திருக்காட்சி கிடைக்கப் பெற்றானாம்.

குறுகிய வடிவினனான வாமனன் பிறந்த குடியே குறுங்குடியாம். வாமன சேத்திரம் என்றும் இதுபெயர் பெறுகிறது.[220]

இத்தல எம்பிரான்களுள் ஒரு பெருமாள் ஸ்ரீபாஷ்ய காரரிடம் வேதாந்தத்தின் பொருள் கேட்டு, மாணவராகி, 'நாமும் நம் இராமாநுசனை உடையோம்' என்றதனால் வைஷ்ணவ நம்பியென்று பெயர் பெற்றாராம்[221]

நம்மாழ்வாரின் திரு அவதாரத்திற்கு இத்தலத்திறை யினது திருவருளே காரணம் என்பர். திருமங்கையார் இத்தலத்திலிருந்தே பரமபதத்திற்கு எழுந்தருளியதாகச் செய்தியுண்டு.[222]

கைசிக திவாதசியன்று நம்பாடுவான் என்ற பக்தன் இத்தலத்திலிருந்து தன்னை அழிக்க வந்த பிரம்மராட்சத னுக்குத் தன் புண்ணியத்தில் ஒரு பாகத்தைத் தந்தருளியதாக வராக புராணம் கூறுகிறது.[223]

அரக்கன் ஒருவன் அந்தணன் ஒருவனை அழிக்கவர அவ்வாறு கொல்வது பாவம் என்று அந்தணன் அறிவுறுத்த, அது தனது தொழில் என அவன் வாதிக்க, விவாதம் முற்று கிறது. இறைவன் வேடுவனாய் வந்து அவர்களிருவருக்கும் உபதேசம் செய்கின்றான். அதன்படி அவர்கள் இருவரும் இத்தலத் தீர்த்தமான திருப்பாற் கடலில் மூழ்கி முக்தியடை கின்றனர். இது தலபுராணம் கூறும் செய்தியாம்.[224]

இத்தலத்தில் திருப்பரிவட்டப்பாறை என்ற பாறைமீது உடையவருக்குக் கோயிலுண்டு. பகைவர்கள் உடையவரைக் கொல்ல முயல, வடுகநம்பி என்ற பெயருடன் பெருமாள் அவரை இப்பாறைமீது கிடத்திக் காத்தானாம் பெருமாள் உடையவருக்குச் சீடனாக இருந்து உபதேசம் பெற்றதால் வைஷ்ணவ நம்பி என்றழைக்கப்படுகிறான்[225]

சிவனுக்கு ஏற்பட்டிருந்த பிரம்மதோஷத்தைப் பகவான் சொல்லியபடி, இத்தலத்து குறுங்குடிவல்லி பிச்சையிட்டு சாபம் நீக்க, சாபம் நீங்கிய சிவன், பெருமாள் உபதேசித்த சுதர்சன மந்த்ரத்தை உச்சரித்து உய்வுபெற்றான் என்புர்.[226]

இத்தலத்தைப் பெரியாழ்வார், திருமழிசை, திருமங்கை, நம்மாழ்வார் ஆகியோர் மொத்தம் நாற்பது பாசுரங்களால் மங்களாசாஸனம் செய்கின்றனர்.

**திருமங்கை பாசுரங்களில் திருக்குறுங்குடி**

தண்பணைகள் சூழ, முல்லைக்கொடிகள் மலிய, மாமயில் பயிலுமாறு செழித்த சோலைகளையுடையது திருக்குறுங்குடி.

**"குருமணி நீர்கொழிக் கும்புறவில் குறுங்குடி''[227]**

என இத்தலத்து நீர்வளச்சீரைப் பேசுகிறார் ஆழ்வார் திருமங்கை.

மேலும் திருக்குறுங்குடியின் வளங்களை ஒருசில காட்சிகளைக் காட்டி ஆழ்வார் விளக்கிச்செல்லுவதைப் பின்வரும் பாசுரவரிகளில் அறியமுடிகிறது.

**"தக்க மரத்தின் தாழ்சினை யேறி தாய்வாயில்**
**கொக்கின் பிள்ளை வெள்ளிற வுண்ணும் குறுங்குடியே''**

**'செங்கா லன்னம் திகழ்தண் பணையில் பெடையோடும்**
**கொங்கார் கமலத் தலரில் சேரும் குறுங்குடியே''**

**''ஏழைச் செங்கால் இன்துணை நாரைக் கிரைதேடி"**
**கூழைப் பார்வைக் கார்வயல் மேயும் குறுங்குடியே''[228]**

குறுங்குடியில் மாடங்கள் மதியைத் தீண்டுமளவுக்கு உயர்வுடன் விளங்குகின்றன. இத்தலத்து மடவார்கள் எயிறு முல்லை மெல்லரும்பினையும் அவர்தம் இன்மொழி கிளியினது மொழியையும் ஒத்துளதாம்.[229]

இவ்வாறு குறுங்குடியின் செல்வச்சீர், மாதரழகினைச் சொல்லிச் செல்கிறார் ஆழ்வார் திருமங்கையார்.

## 4-3-34. திருவல்லவாழ்

மலைநாட்டுத் திருப்பதிகளுள் இதுவும் ஒன்று.

மூலவர்—கோலப்பிரான். திருவாழ்மார்பன் ஸ்ரீவல்லபன், நின்ற திருக்கோலம். கிழக்கு நோக்கிய திருமுகமண்டலம். தாயார்—செல்வத் திருக்கொழுந்து நாச்சி, வாத்ஸல்யதேவி. ஆகியோர். தீர்த்தம்—கண்டாகர்ணதீர்த்தம், பம்பாநதி. கண்டாகருணனுக்கு இத்தலத்திறைவனது திருக்காட்சி கிடைத்ததாம்.

கண்டாகர்ணன் என்பவன் சிவபக்தன். சிவன் உபதேசப் படி அவன் அஷ்டாக்ஷர மந்திரத்தைச் செபிக்கவேண்டி, தன் செவியில் கண்ணனது திருநாமம் தவிர வேறு எதுவும் விழாது இருக்குமாறு தனது செவிகளில் இரு பொன்மணிகளை அணிந்து கொண்டு அசைத்துக் கொண்டு தவம்புரிந்து மோட்சவீடு பெற்றதாய்த் தலவரலாறு கூறுகிறது.[230]

மேலும் இத்தலத்தில் சங்கரமங்கலத்தம்மை என்ற பதிவிரதை ஏகாதசி விரதமிருந்து துவாதசியன்று பிரம்மச்சாரிக்குப் பாரணை செய்வித்து வர, தோலகாசுரன் இதற்கு இடையூறு செய்ய, பகவான் பிரம்மச்சாரியாய் வந்து அவ்வசுரனைக் கொன்றொழித்தானாம்[231]

திருமங்கையார், நம்மாழ்வார்களால் இத்தலம் மொத்தம் இருபத்திரண்டு பாசுரங்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்றுள்ளது.

### திருமங்கை பாசுரங்களில் திருவல்லவாழ்

இத்தலம் மறையோர்கள் மலிந்தது என்பதனை ஆழ்வார்,

"......வேதநான் கைந்துதீ
வேள்வியோ டங்க மாறும்
மருவினார் மல்லவாழ்"

"மறைவலார் குறைவிலார் உறையுமூர்
வல்லவாழ்"[232]

என்னும் பாசுரவரிகளில் கூறுவதைக் காணலாம்.

## 3-3-35. திருமாலிருஞ்சோலை

பாண்டியநாட்டு வைணவத்தலங்களில் இத்தலமும் ஒன்று. மூலவர்— அழகர், கள்ளழகர், மாலங்காரர், மாலிருஞ் சோலைநம்பி. நின்ற திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம். தாயார்—சுந்தரவல்லி. தீர்த்தம்— நூபுரகங்கை, சிலம்பாறு. ஸ்தலவிருட்சம்—வ்ருஷபகிரி, சந்தவிருட்சம். விமானம்—சோசுந்தர விமானம். மலயத்வஜ பாண்டிய னுக்கும், தருமதேவதைக்கும் இத்தலத்திறையனது திருக் காட்சி கிடைத்ததாகச் செய்தி உண்டு.

திருவிக்ரம அவதாரத்தின்போது, பிரம்மா பகவானது பாதத்தில் கமண்டலத்தினால் தீர்த்தம் சேர்த்துப் பூசிக்கப் பகவானது தண்டைச் சலங்கையில்பட்ட நீர் தெரித்து இங்கு விழுந்து நதியாகப் பிரவகித்தது. அதுவே சிலம்பாறு ஆயிற்று என்பர்.[233]

பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கை, பூதம், பேய், நம்மாழ்வார் ஆகியோர் மொத்தம் நூற்று இருபத்தெட்டுப் பாசுரங்களால் இத்தலத்திறையை இறைஞ்சுகின்றனர்.

### திருமங்கை பாசுரங்களில் திருமாலிருஞ்சோலை

திருமாலிருஞ்சோலைப் பொழில்வளம், நீர்வளம் ஆகிய வற்றை ஆழ்வார் பின்வருமாறு சுவைததும்பப் பாடிச் செல்கிறார்.

'சினைவளர் பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலை"

'தேனமர் பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலை"

"பூம்பொழில்சூழ் திருமாலிருஞ் சோலை"[234]

திருமாலிருஞ்சோலை தெள்ளருவிகள் கொழிப்பது; சிலம்பியலாறுடையது; ஈங்குள்ள சாரல்கள் நிறைந்த அருவிகள், சந்தம், மணி, பீலிதழைகளைத் தழுவி வந்து இழிகின்றன.[235]

இத்தலத்துப் பொழில்களிலுள்ள குறிஞ்சி மலர்த்தேனை வண்டுகள் உண்டு மகிழ்கின்றன; வேங்கை, கோங்கு, குறிஞ்சி மலர்களிலிருந்து ஒழுகிய நறுந்தேன் வார்புனலாக இழிந்து இனிக்கிறது.[236]

இத்தலத்தின், குறிஞ்சிநில அமைப்பை—வளத்தை—காட்சிகளை ஆழ்வார் தமது ஒன்பதாம்பத்து எட்டாம் திருமொழிப் பாசுரங்களில் காட்டிப் பாடி பரவசப்படுகிறார்.

இத்தலம் தேசமெல்லாம் வணங்கும் சீரினது என மேலும் இத்தலத்தை உயர்த்திப் பேசி மகிழ்கிறார்.[237]

## 4-3-36 திருக்கோட்டியூர்

பாண்டி நாட்டுத் திருத்தலங்களுள் இதுவுமொன்றாம்.

மூலவர்—உலகமெல்லணையான். புஜங்கசயனம். கிழக்கு நோக்கித் திருமுகமண்டலம். தாயார்—திருமாமகள் நாச்சி. தீர்த்தம்—தேவபுஷ்கரிணி. விமானம்—அஷ்டாங்க விமானம். இந்திரனுக்கும், கதம்பமுனிக்கும் இத்தலத்திறையினது திருக்காட்சி கிடைத்ததாம்.[238]

இரணியனை அழிக்கும் வழியினைக் காண தேவர்கள் பிறருக்குத் தெரியாது கோஷ்டியாக, அரக்கர் புகமுடியாத கதம்பமுனிவர் உறையும் இவ்விடம் வந்ததால் இத்தலத்திற்கு இப்பெயர் ஏற்பட்டதாம்.[239]

திருக்கோட்டியூர் என்பதைத் திருக்கு ஓட்டி ஊர் எனப் பிரித்து 'பிறவியில் செய்த வினைகளை நீக்கும் இறைவன் கோயில் கொண்டுள்ள தலம்' என்றும், கோட்டம்—கோயில். கோயிலையும் விமானத்தையும் கொண்ட ஊர் என்றும், கோஷ்டி—கூட்டம், வித்வான்கள் கூட்டம் நிறைந்த தலமென்றும் பலவாறு பொருள்கொள்ளலாம்.[240]

திருக்கோட்டியூர் நம்பிகளிடம் திருமந்திர ரகசிய அர்த்தத்தை உபதேசமாகப் பெற்று, குருவின் ஆணையை

மீறி, கோபுரத்தின் மீதேறி உலக மக்கள் அனைவரும் முக்தியடைய அந்த ரகசியத்தை எம்பெருமானார் வெளியிட்ட திருத்தலமும் இதுவாம்.

பெரியாழ்வார், திருமங்கையார், பூதத்தார், பேயார், திருமழிசையார் ஆகியோர் மொத்தம் முப்பத்து ஒன்பது பாசுரங்களால் இத்தலத்திறையை ஆராதிக்கின்றனர்.

**திருமங்கை பாசுரங்களில் திருக்கோட்டியூர்**

"பொங்குதண் அருவி புதம்செய்யப்
பொன்களே சிதறும் இலங்கொளி
செங்கமலம் மலரும்—திருக்கோட்டி யூரானே"

"மௌவல் மாலை வண்டாடும் மல்லிகை
மாலையோடு மணந்து மாருதம்
தெய்வம் நாற வரும்—திருக் கோட்டி யூரானே"

"துள்ளுநீர் மொண்டு கொண்டு சாமரைக்
கற்றை சந்தன முந்தி வந்தசை
தெள்ளுநீர்ப் புறவில்—திருக்கோட்டி யூரானே"

"நாறு சண்பக மல்லிகை மலர்—
புல்கி இன்னிள வண்டு நன்னறுந்
தேறல்வாய் மடுக்கும்—திருக்கோட்டி யூரானே"

"குன்றின் முல்லையின் வாசமும் குளிர்
மல்லிகை மணமும் அளைந்து இளந்
தென்றல் வந்துலவும்—திருக்கோட்டி யூரானே"

"தூங்கு தண்பல வின்கனி தொகு
வாழையின் கனியோடு மாங்கனி
தேங்கு தண்புனல்சூழ்—திருக்கோட்டி யூரானே"[241]

இத்திருத்தலத்தின் செல்வவளத்தைக் கூறவந்த ஆழ்வார், இங்குள்ள மாடங்கள் திங்களணவும்படிக்கு உயர்ந்திருக்கின்றன எனக் கூறி மகிழ்கிறார்.

"மங்குல் தோய்மணி மாட வெண்கொடி
மாக மீதுயர்ந் தேறி, வானுயர்[242]
திங்கள்தான் அணவும்—திருக்கோட்டி யூரானே"

## 4-3-37 திருப்பாற்கடல்

எம்பெருமான் வாசுதேவ, சங்கிருஷ்ண, ப்ரத்யும்ன, அநிருத்தனாகப் பிரிந்து வியூகநிலையில், இவ்வுலகினைப் படைத்து காத்து, அழிக்கும்—அரியதொரு செயலியற்றும் அற்புதத் தலமாகும். நூற்றெட்டுத் திருப்பதிகளுள் இத் தலமும் ஒன்றாகக் குறிப்பிடப் பெற்றுள்ளது. இத்தலம், யோகிகளும், முனிவர்களும், அமரர்களும் இருந்த இடத்திலேயே இருந்து பரம்பொருளை எண்ணி வழிபாடு செய்யும் இடமாகும். இத்தலத்தில் எழுந்தருளி இருப்பவன் பாற்கடல்நாதன். தாயார் கடல்மகளாவாள்.[243]

இத்தலத்தைப் பற்றி நாலாயிரத்துள் காணப்பெறும் பாசுரங்கள் ஐம்பத்து ஒன்றாகும்.

### திருமங்கையார் பாசுரங்களில் திருப்பாற்கடல்

திருமங்கையார் தம் பாசுரங்களில் ஆங்காங்கே ஒரு சில இடங்களில் இத்தலத்தைப் பற்றி குறிப்பிட்டுக் காட்டிச் செல்கிறார்.[244]

## 4-3-38 திருப்பரமபதம்

நித்யசூரிகள் அனுபவிக்கும்படிக்கு வைகுந்தம் என்னும் திருநாடுதனில் முழுமுதற்பொருள் எழுந்தருளி இருக்கிறான். வைணவத் திருத்தலங்களுள் இதுவுமொன்றாம். இத்தலம் இந்நிலவுலகத்தில் இல்லாத ஒன்றாகும்.

இறை—பரமபதநாதன். தாயார்—பெரியபிராட்டியார் விமானம்—அநந்தரங்க விமானம். தீர்த்தம்—விரஜாநதி.

கருட விஷ்வக் ஸேநாதி நித்ய ஸூரிகட்கும் முக்தர்கட்கும் இத்தலத்திறையினது திருவுருவக்காட்சி கிடைத்ததென்பர்.[245]

ஆழ்வார்கள் மொத்தம் முப்பத்தாறு பாசுரங்களால் இத்தலத்தைப் பாடிப் பரவியுள்ளனர்.[246]

இத்தலத்தை ஆழ்வார் திருமங்கையார் பின்வருமாறு பாடிப் பரவசமுறுகிறார்.

**"அண்டமாய் எண்திசைக்கும்**
**ஆதியாய் நீதியான[247]**
**பண்டமாய் பரம சோதி"**

இவ்வுடலை விட்டுப் பிரியும் ஆன்மா கதிரவன் மண்டலத்தைப் பிளந்து கொண்டு அவ்வழியே சென்று பரமபதம் என்னும் நாட்டை அடைவதாகவும் அங்கே ஆராவமுதத்தை அனுபவிப்பதாகவும், அவ்விடத்தை விட்டு ஒருநாளும் திரும்பி வருவதில்லை எனவும், அதுவே வைகுந்தம் என்பதென்றும் திருமங்கை குறிப்பிடுகின்றார்.

**தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு**
**ஆரா அமுதம்அங் கெய்தி—அதினின்றும்**
**வாரா தொழிவதொன் றுண்டோ?"**

**"மன்னுங் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள்**
**அன்னதோர் இல்லியி னூடுபோய் வீடென்னும்**
**தொன்னெறிக்கட் சென்றாரைச் சொல்லுமின்கள்"[248]**

இவ்வாறு திருமங்கையாழ்வார் தம் பாசுரங்களில் தமை மறந்து வைணவத்திருத்தலங்கள்பால் ஆழங்கால்படுகிறார்.

## குறிப்பெண் விளக்கம்

1. வ.ந. ஸ்ரீராமதேசிகாசார்யர்சுவாமி, சில்லறை ரஹஸ்யங்கள், (முதற்பாகம்), ப. 54ப.
2. கிருஷ்ணமாசார்யசுவாமி, 'இஷ்வாகு குலதனர்—ஸ்ரீரங்கநாதன்' 1985 சிறப்புமலர் வெளியீட்டுவிழா.
3. உ.வே.வை மு. கோபால கிருஷ்ணமாசாரியார், (உரை) அஷ்டப்பிரபந்தம் (முதல் தொகுதி), நான்காம்பதிப்பு, (சென்னை, 1966), ப. 294.
4. ந. தர்மாரெட்டி, திருவள்ளுவர், வேமனர் ஓர் ஒப்பாய்வு, ப. 155.
5. மாருதிதாசன், 'இந்துசமயக் கருத்துக்கள், ப. 82.
6. மேற்படி ப. 84.
7. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி—6.
8. ஸ்ரீவத்ஸன், நாலாயிர திவ்வியப்பிரபந்தம் பாகம் 2., சென்னை, ப. 1468—69.
9. பெரி. திரு. 1.2.5.
10. பெரி. திரு. 1.2.6.
11. மேற்படி 1.2.9.
12. மேற்படி 1.2.10.
13. மேற்படி 1.2.8.
14. ஸ்ரீ வ த் ஸ ன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1470.
15. பெரி. திரு. 1.3.2.3.4.
16. மேற்படி 1.4.1.2.4.
17. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1474—75.
18. பெரி. திரு. 1.5.2.3.4.
19. மேற்படி 1.5.2.
20. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1467 68.

21. பெரி. திரு. 1 6.10.
22. ஸ்ரீவத்ஸன். ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1431 84.
23. எம். ராதாகிருஷ்ணபிள்ளை, தென்னாட்டுக் கோயில்கள். முதற் பதிப்பு, (சென்னை, 1956). ப. 11.
24. பெரி. திரு. 1.7.4.
25. மேற்படி. 1.7.1.
26. பெரி. திரு. 1.7.3; 5.6.9; 8.
27. மேற்படி 1.7.5; 7.4.
28. ந. சுப்புரெட்டியார், திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும், முதற் பதிப்பு, (சென்னை, 1975), ப. 57.
29. மேற்படி. ப. 58.
30. நம்மாழ்வார், திருவாய்மொழி, 3.3.8.
31. பொய்கையாழ்வார், முதல் திருவந்தாதி, பா. 26.
32. ஜி.டி. கோபாலகிருஷ்ண நாயுடு, ஆழ்வார்கள் அனுபவித்த அலர்மேல் மங்கை உரைமார்பன், முதற் பதிப்பு, (கோயமுத்தூர், 1973), ப. 2.
33. ஆர். பத்மநாபன், ஸ்ரீவெங்கடேசுவரா, முதற் பதிப்பு. (சென்னை, 1978), ப. 45.
34. எஸ். நடராஜன், ஏழுமலை ஆண்டவன், முதற் பதிப்பு, (சென்னை, 1977) ப. 31.
35. பேயாழ்வார், மூன்றாம் திருவந்தாதி பா. 63.
36. தி.அ. கிருஷ்ணதாஸன், திருமலையும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாய நெறியும்', திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமிதேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி சிறப்பு மலர், ப. 40.
37. ஆர், பத்மநாபன், ஸ்ரீவெங்கடேச்வரா, ப. 46—47.
38. எஸ். நடராஜன், ஏழுமலை ஆண்டவன், ப. 33.
39. மேற்படி ப. 61 – 67.
40. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1486.
41. பெரி. திரு. 1.9.5.6; 1.10.4.6; 1.9.3.

42. மேற்படி 1 8.4; 1.8.9; 1.8 1.
43. மேற்படி 1.9 1.2.7.8 9.
44. மேற்படி 1.10.4.
45 மேற்படி 2.1.8
46. மேற்படி 2.1.1.
47. மேற்படி 2.1.6.
48. மேற்படி 2.1.2.
49. மேற்படி 1.8.8.
50. மேற்படி 2 15.9; 1.10.1.
51. மேற்படி 1.8.9.
52. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம் ப. 1456.
53. மேற்படி 1.4.5.7.
54. எம். ராதாகிருஷ்ணபிள்ளை, தென்னாட்டுக் கோயில்கள், ப; 53—54.
55. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியபிரபந்தம், ப. 1457.
56. பெரி திரு. 2 2.5.
57. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1458.
58. எம். ராதாகிருஷ்ணபிள்ளை, தென்னாட்டுக் கோயில்கள், ப. 68—69.
59. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப 1459.
60. மேற்படி ப. 1459.
61. பெரி. திரு, 2.3.9.7.2.
52. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம் ப. 1462—63.
63. மேற்படி ப. 1463.
64. பெரி. திரு. 2.5.3.
65. மேற்படி 2.5.8.
66. மேற்படி 2.5.1; 2.6.9.

67. ஸ்ரீவத்ஸன் ஸ்ரீநாலாயிர திவ்வியபிரபந்தம், ப. 1453—54.
68. பெரி. திரு 2.9.2.
69. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீ நாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1438—39.
70. மேற்படி ப. 1439.
71. பெரி. திரு. 2 10.1.
72 மேற்படி 2.6.2.
73. மேற்படி 2.10.3; 4 8.
74. ஜே எம். சோமசுந்தரப்பிள்ளை, தில்லைச் சிற்றம் பலவன் கோயில் சிதம்பரம்—தலவரலாறு, (அண்ணா மலை நகர், 1966), ப. 2.
75. மேற்படி ப. 2.
76. மேற்படி ப. 4.
77. மேற்படி ப. 10, 11.
78. ஸ்ரீவத்ஸன். ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1436.
79. பெரி. திரு. 3 3.1; 3.2.1.
80. மேற்படி 3.2.3.7.
81. மேற்படி பா. 2.6.
82. மேற்படி பா.9.
83. பெரி. திரு. 3.2.3; 3.3.7.3.
84. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1425.
85. பெரி. திரு. 3.4.1.6.
86. மேற்படி பா. 2.3.
87. மேற்படி பா. 8 9.
88. ஸ்ரீ வத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1437.
89. மேற்படி ப. 1438.
90. மேற்படி ப. 1437—38.
91. பெரி. திரு. 3.1.6; 3.4.
92. மேற்படி 3.1.6.3.2.5.7.
93. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம்,ப. 1430
94. மேற்படி ப. 1430.

95. மேற்படி ப. 1431.
96. மேற்படி ப. 1431—32.
97. பெரி. திரு. 3.5.2; 8.4.
98. மேற்படி 3.7.1; 2.3.4; 7 9.
99. மேற்படி 3.6.6; 3.5.2.
100. ஸ்ரீவத்ஸன். ஸ்ரீ நாலாயிர திவ்வியப்பிரபந்தம். ப. 1427—28.
101. மேற்படி ப. 1428—29.
102. மேற்படி ப. 1429.
103. மேற்படி ப. 1426.
104. மேற்படி ப. 1432.
105. மேற்படி ப. 1426—27.
106. மேற்படி ப. 1427—28.
107. மேற்படி ப. 1428.
108. மேற்படி ப. 1433.
109. மேற்படி ப. 1434.
110. பெரி. திரு. 4.1.4; 3.9.1.
111. மேற்படி 3.8.5.
112. மேற்படி 3.9.1.
113. மேற்படி 4.2.8.
114. மேற்படி 4.5.4.
115. மேற்படி 4.1.9.
116. மேற்படி 4.1.9.
117. மேற்படி 4.7.1.
118. மேற்படி 4.1.5; 3.8.3.
119. மேற்படி 3.10.4.
120. மேற்படி 3.10.5.
121. மேற்படி 4.2.7.
122. மேற்படி 4.4.5.
123. மேற்படி 4.4.4; 4.8.5; 4.6.8.5; 4.2.5.
124. மேற்படி 4.4.7.
125. மேற்படி 4.5.7.

126. மேற்படி 4.7.7; 3.9.5: 3.9.8.
127. மேற்படி 4.4.2.
128. மேற்படி 4.2.6.
129. மேற்படி 4.5.1; 4.5.8.
130. மேற்படி 3.9.7.
131. மேற்படி 3.8.8; 4.4.5; 4.2.6; 3.10.2; 4.3.3; 4.1.7.8· 4 7 1; 3.9.6.
132. மேற்படி 3.8.4.1; 4 1.2; 4.5.9.
133. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1419—20.
134. ந. சுப்புரெட்டியார்; சோழ நாட்டுத் திருப்பதிகள் (முதற் பகுதி), முதற் பதிப்பு, (சென்னை, 1981) ப. 159
135. பெரி. திரு. 4.10.4.
136. மேற்படி 4 9.1.7
137. மேற்படி 4 9.6.
138. மேற்படி 4.9.9.
139. மேற்படி 4 9.7.
140. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1404.
141. பெரி. திரு. 5.1.1.
142. மேற்படி 5.1.9.
143. மேற்படி 5.1.2; 3.5.
144. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம். ப. 1402—1403.
145. பெரி. திரு. 5.2 2; 3.5.6; 7 9.
146. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1398.
147. பெரி திரு. 5.3.1; 2.3.4; 5.6.7 8.9.
148. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம் ப. 1393.
149. உ வே.வை மு கோபாலகிருஷ்ணமாசாரியர், (உரை), அஷ்டப்பிரபந்தம் (முதல் தொகுதி), ப. 2.
150. நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி—1.

151. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1394
152. பெரி. திரு. 5.8.1—10. 5 4.1; 4,9.6; 3.2.1.
153. பெரி. திரு. 5.4.7.
154. மேற்படி 5 4.7.
155. மேற்படி 5.4.5.
156. மேற்படி 5 4.5; 8.
157. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம் ப 1400.
158. ந சுப்புரெட்டியார், சோழ நாட்டுத் திருப்பதிகள், (முதல் பகுதி), ப. 74.
159. பெரி. திரு. 5.9.1; 8.9.2; 4.6.
160. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1419.
161. பெரி. திரு. 5.10.1; 4.
162. மேற்படி 5.10 7; 9.
163. மேற்படி 5.10.8.
164. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1407—1408
165. மேற்படி ப. 1407—1408.
166. பெரி. திரு 6 3.3.
167. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான். வேங்கம் முதல் குமரிவரை, காவிரிக்கரையிலே, ப 59.
168. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம். ப. 1409.
169. ந. சுப்புரெட்டியார், சோழநாட்டுத் திருப்பதிகள் (முதற்பகுதி) ப 140.
170. மேற்படி ப. 140.
171. பெரி.திரு 6.4.5; 6.
172. மேற்படி 6.5.8; 6 9.7.
173. மேற்படி 6.5.2; 4.7.
174. மேற்படி 6.7.4.
175. மேற்படி 6.9.3; 7.
176. மேற்படி 6.6 2; 6.9 5; 6.
177. மேற்படி 6.9.4.
781 மேற்படி 6 4 8.

179. மேற்படி 6 7.7; 8.1.3.
180. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம். ப. 1420,
181. பெரி. திரு. 7.4.1.
182. மேற்படி 7;4.2.
183. மேற்படி 7.4 3; 5.8.
184. ந சுப்புரெட்டியார், சோழநாட்டுத் திருப்பதிகள். (இரண்டாம் பகுதி). ப. 92.
185. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1420—21.
186. தொ.மு. பாஸ்கரத்தொண்டைமான், வேங்கடம் முதல் குமரிவரை இரண்டாம் பதிப்பு (பொன்னியின் மடியிலே), திருநெல்வேலி, 1964, ப. 226.
187. பெரி. திரு 7.5.9; 7.6.2.
188. மேற்படி 7.5.3; 7;8 4.
189. மேற்படி 7.8.3.
190. மேற்படி 7.5.5; 7.
191. மேற்படி 7.5.7; 1.7.6; 8.
192. மேற்படி 7.8.8; 7.8.5.
193. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1421.
194. மேற்படி ப. 1422.
195. மேற்படி ப. 1422.
196. பெரி. திரு. 7.9.3; 2.5.6.
197. மேற்படி 7.9.1; 2.7 8.
198. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1411.
199. மேற்படி ப. 1411—12.
200. மேற்படி ப. 1413.
201. மேற்படி ப. 1413.
202. பெரி. திரு. 8.1.5; 4..8.8; 6.4.
203. மேற்படி 8.1.6; 8.7.8; 8.8.3; 4.5.9.
204. மேற்படி 8.1.3; 8.5.9.
205. மேற்படி 8.2.1; 3.8.8 ;2.
206. மேற்படி 8.6.10.

207. மேற்படி 8.3.3.
208. மேற்படி 8.7.2; 9.
209. மேற்படி 8.1.9; 8.4.2; 3.8.4; 1.
210. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1414—15.
211. மேற்படி ப; 1415.
212. பெரி. திரு. 9·1.6; 9,7.3; 2.5.
213. மேற்படி 9.1.3.
214. மேற்படி 9.1.4.
215. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1552.
216. தொ.மு. பாஸ்கரத்தொண்டைமான், வேங்கடம் முதல் குமரிவரை (பொருநைத்துறையிலே), இரண்டாம் பதிப்பு, (திருநெல்வேலி, 1970), ப, 72.
217. ந. சுப்புரெட்டியார், பாண்டிநாட்டுத் திருப்பதிகள், முதற்பதிப்பு, (சென்னை, 1977) ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1525.
218. பெரி திரு. 9 3.2; 5.4.
219. மேற்படி 9·3.3; 6.8.10; 9.4.1; 3.4.
220. தொ.மு. பாஸ்கரத்தொண்டைமான், வேங்கடம் முதல் குமரிவரை, (பொருநைத்தி துறையிலே) ப. 233.
221. ஸ்ரீவஸத்ன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. 1503 1504.
222. மேற்படி ப. 1503—1504.
223. மேற்படி ப. 1504.
224. மேற்படி ப. 1505.
225. மேற்படி ப. 1504.
226. மேற்படி ப. 1505.
227. பெரி. திரு. 9.5.7; 6.3.4.
228. மேற்படி 9.6.1; 2.3.8.
229. மேற்படி 9.6.6; 5.
230. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப 1494.
231. மேற்படி ப. 1493.

232. பெரி. திரு. 9.7.6; 10.
233. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப 1521.
234. பெரி. திரு. 9.9.2; 5.8.
235. மேற்படி 9.9.9; 9.8.1.
236. மேற்படி 9 8.2; 4.
237. மேற்படி 9.9.6.
238. ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப 1523.
239. மேற்படி ப. 1524. ந. சுப்புரெட்டியார், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், ப. 3.
240. ந. சுப்புரெட்டியார், பாண்டிநாட்டுத் திருப்பதிகள் ப. 3.
241. பெரி. திரு. 9.10.1; 2 3.4; 7.8.
242. மேற்படி 9.10.5,
243. ராய சொ. திருத்தலப்பயணம், (காரைக்குடி, 1966), ப. 396.
244. பெரி.திரு 2 10.2; 4.3.4; 4.10.9; 5.4.2; 5.7 6; 7.3.6, 9.1.1; 9-8.8 9.9.1; 11.8.7.
நெடுந் பா: 9.12 15.
திருவெழு. 25—23.
பெரிய திருமடல். கண்ணி. 118.
245. ஸ்ரீவத்ஸன் ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப. ப. 1528.
246. ஜி வேங்கடசாமி ரெட்டியார், (ப.ஆ) ஸ்ரீநாலாயிர திவ்வியப்பிரபந்தம். இரண்டாம் பதிப்பு, சென்னை, ப. 201.
247. குறுந். பா. 11,
248. சிறிய திருமடல். கண்ணி. 7.8.
பெரிய திருமடல். கண்ணி. 16, 17.

# இயல்—5

# ''திருமங்கையும் கலைநலனும்''

## 5-0 திருமங்கையாழ்வார் பாசுரங்களில் கலைநலன்

இவ்வியலில் கலைவிளக்கம், வகை, பயன், இலக்கியக் கலை வகையும் பயனும், கற்பனை, அணிகள், உவமை, உருவகம், உயர்வு நவிற்சி, புகழாப்புகழ்ச்சி, தற்குறிப்பேற்றம் முதலான அணிகள் திருமங்கை ஆழ்வார் பாசுரங்களில் அமைந்த பாங்கு, திருமங்கை பாசுரங்களில் புனைந்துரை, வருணனை, சொல்நயம், உள்ளுறை, நாட்டுப்புறக்கூறுகள், இலக்கியவடிவங்கள், குறியீடு முதலியன பற்றிய செய்திகள் விளக்கம் பெறுகின்றன.

## 5-1 கலைவிளக்கமும் பயனும்

மனம் இருக்கின்றவன் மனிதன். எல்லை இல்லாததும், ஆழங்கான முடியாததும், நுண்ணிய அருவ வடிவானதும் மனம் என்பர் பேராசிரியர் பொன். சௌரிராசன் அவர்கள். இம்மனிதன் இறைவன் படைத்த படைப்புக்களைக் கண்டு திளைத்துத் தானும் உணர்ந்து, உணர்ந்த அவ்வுணர்ச்சி தன்னிலிருந்து கிளர்ந்து மகிழும் நிலையில் கலை பிறக்கிறது. அவ்வாறு பிறக்கும் கலை கலைஞனை ஆனந்தப்படுத்துவது மட்டுமின்றிச் சமுதாயத்திற்கும் பயன்தருவதாய் அமைகிறது. அக் கலை கலைஞனின் நிலைக்கேற்றவாறு பலகோணங்களில் உண்டாகிறது. எனவேதான் அறுபத்து நான்கு கலைகள் என்னும் பாகுபாடு தோன்றியது. ''நல்ல கலைகள் புலன் களை வளர்ப்பதோடு பண்படுத்தும் தன்மையும் உள்ளவை என்கிறார் அறிஞர் மு.வ. அவர்கள்.[1]

## 5-2- இலக்கியக்கலை விளக்கமும் பயனும்

கலைஞனது உணர்ச்சிப் பெருக்கத்திற்கு ஒலியும் எழுத்தின் ஊடே அமையும் வரியும் மொழியின் கருவிகளாக அமைந்து அளிக்கப்பெறும் உருவம் கலையாகிறது. அதாவது இலக்கியக் கலையாகிறது

இலக்கியம் என்பது மக்களின் வாழ்க்கையைக் காட்டும் ஓர் அற்புதக் கண்ணாடியாகும். இலக்கியம் என்பதற்கு இலக்கணம் அமைந்த நூல்; எடுத்துக்காட்டும் குறி; இலக்கணம் அமையப்பெற்ற பொருள் எனப் பல்வேறுபட்ட பொருள்களுள.[3]

அறிவும், திருவும், ஆற்றல் அமைந்த சான்றோர்களின் வாழ்வும் செயலும், வாழ்க்கை அனுபவங்களும், பிற்கால மக்களின் நல்வாழ்வுக்குப் பயனளிக்கும் வகையில் தொகுத்து வைக்கப்பட்ட கருவூலங்களே இலக்கியங்கள் ஆகும்.[4]

இலக்கியம் என்னும் சொல் இலஷியம் என்னும் வட மொழிச் சொல்லின் திரிபாம். இலஷியம் என்னும் சொல்லின் 'ஷி' என்பதனை 'க்கி' என்றாக்கிட இலக்கிய மாகிறது. தன்னகத்தே ஓர் உயர்ந்த நோக்கை, இலக்கைக் கொண்டு சமுதாய நல்வாழ்விற்குத் துணை நிற்பது இலக்கிய மாகும்.[5]

மொழித்திறன் பற்றிய அறிவோடு, இன்பு நுகர்வையும், வாழ்வு பற்றியும் உலகைப் பற்றியும் புதிய விளக்கம் பெறவும் இவ்விலக்கியக் கலை பயனாகிறது.

## 5-3 கற்பனை

இவ்விலக்கியக் கலையில், கற்பனை, உணர்ச்சி, பொருள், வடிவம் ஆகியன முக்கிய இடம் பெறுகின்றன. மனத்தின் அனுபவ நெகிழ்ச்சியால் விளையும் கற்பிதங்களையே கற்பனை எனலாம்.

கற்பனை என்ற சொல் கல்—கற்பித்தல் என்ற வினையடிப்படையில் தோன்றியதாகும்.[6]

இலக்கியத்திற்குக் கற்பனை மிகவும் இன்றியமையாத தாய் உயிர் போன்று விளங்குகிறது. இலக்கியப் பறவைக்கு இரு சிறகுகளாய் இக்கற்பனை அமைகிறது என்பது மிகையாகாது.

## 5-4 அணிகள்

இலக்கிய நங்கைக்கு அணிசெய்வனவாய் அமைவன அணிகளாகும். இவ்வணிகள் கற்பனையில் அடக்கம் பெறும்.

அணி என்பது அணியப்படுவது எனவும் அழகைத் தருவதெனவும் பொருள்படுகிறது.[7]

அணி என்னும் சொல்லிற்கு அழகு, வனப்பு, ஆபரணம், பெருமை, இனிமை, வரிசை முதலிய பல பொருள்களுண்டு.[8]

திருமங்கை பாசுரங்களில் பல்வேறுபட்ட அணிகள் அமையப் பெற்றுள்ளன. இவ்வியல் அவற்றை ஒரு சிறிது ஆய முயல்கிறது.

### உவமை

ஒரு பொருளோடு ஒரு பொருளை ஒப்புமைக்கூறுதல் உவமையாகும். ஒரு பொருளோடு மற்றொன்றை ஒப்பிடுகையில் வினை அடிப்படையிலோ பயனடிப்படையிலோ வடிவ அடிப்படையிலோ வண்ண அடிப்படையிலோ ஒப்புமை காணல் நலம்.

ஈண்டு ஆழ்வார் திருமங்கையார் திருமாலின் திருமேனிக்குப் பல்வேறு பொருள்களை உவமையாகக் கூறுவதைக் காணலாம்.

திருமாலினது திருக்கண்களைக் காணும்போது ஆழ்வாருக்குக் கமலமலரின் நினைவு தோன்றுகிறது. கமல

மலரைக் கண்களுக்கு ஒப்புமைபடுத்திக் காட்டுகின்ற அணியழகினை ஆழ்வாரிடத்துப் பலவிடங்களில் காணலாம்.

தாமரை குணங்களில் தண்மையும் ஒன்று. திருமாலும் தாமரை தண்மையைப் பெற்றவன் என்பதை ஆங்காங்குக் காட்டிச் செல்கிறார்.

**"செங்கமலக் கண்ணனை"**

**"தண்தா மரைக்கண்ணா"**

**"தாமரைக் கண்ணன்"**

**"அங்கம லக் கண்ணனை"**

**"தண்தாமரைக் கண்ணன்"**

**"தாமரைக் கண்கள்"**

**"தாமரைக் கண்ணா"**[9]

தாமரையை உவமைப்படுத்தும்போது தாமரைக்குள்ள பல பண்புகள் உண்டென்பதை விளங்கச் செய்கிறார் ஆழ்வார். ஓவியத்தில் அமைந்த தாமரை உருவத்தில் மிக்கு அழகுடன் திகழும். அவ்வாறே திருமாலின், கண்களும் உருவில் முடிநிலை அழகினைப் பெற்றன என்பதை.

**"...ஓவிநல்லார்**
**எழுதிய தாமரை யன்னகண்ணும்"**[10]

என்ற தொடரால் அறியலாம்.

திருமாலினது சிவந்த வாய் ஆழ்வாருக்கு அரவிந்தத்தின் நினைவைத் தோற்றுவிக்கிறது. இதனை,

**"செங்கம லம்புரை வாயா!"**
**"...அரவிந்த**
**வாயவ னே!"**[11]

என்ற பாசுர வரிகளில் அறிவிக்கிறார்.

கருமை நிறமுடையவன் மால். அவனது திருமேனி நிற அழகுக்கு ஆழ்வார் கருமுகில், அஞ்சனக்குன்றம், களங்கனி, அஞ்சனம், கடல், கடற்கிடந்த கருமணி, கைம்மானமரகதம், காயாமலர், குவளைமலர், பூவை, கருவிளைமலர்[12] போன்ற பல்வேறு பொருள்களை உவமையாகக் கூறுகிறார்.

ஈண்டு அஞ்சனக்குன்றத்தை உவமையாக ஆழ்வார் கூறும்போது அஞ்சனக்குன்று போன்ற கருமைநிறம் என்பதோடு, அக்குன்றானது எப்படிக் கோபாலன் போன்றோர் குடையாய் பிடித்தால் அனைத்து உயிர்களும் அதன்கீழ் தங்கி நிழலாறுவதற்கிடமாயுளதோ, மரம், செடி, கொடி போன்ற சடப்பொருள்களோடு, ஆடு, மாடு, மேற்பார்வை செய்பவனுக்கும் இடமாவது போல அனைத்து உயிர்களும் தனைப்பற்றி உய்யும்படிக்கு அனைத்துக்கும் தானே அனைத்துமாய்—பரமாத்மாவாய் மால் உள்ளான் என்பதையும் குறிப்பால் உணர்த்துவதைக் காணலாம்.

இவ்வாறே காயாமலர், குவளைமலர், கருவிளை காயா மலர்களை ஆழ்வார் உவமைப் பொருள்களாகக் காட்டியது அவற்றின் கரிய நிறத்தைக் காட்டுகிறது, அதோடு அம்மலர் களின் மென்மையைப் பெற்று—அவனது அழகு கருமேனி திகழ்கிறது என்பதையும் குறிக்கின்றது.

இவ்வாறே கடலையும் ஆழ்வார் உவமைப் பொருளாகக் குறிக்கும்போது 'தடங்கடல்' என்று குறிப்பிட்டுச் செல்வதைக் காணலாம். கடல்போன்ற நிறத்தினன்; கடல் போன்று குளிர்ந்த தன்மையினன். குளிர்ந்த தாய்மை நெஞ்சோடு, கருணை மீதூர பக்தருக்கு அருள்பவன் திருமால் என்ற உட்கருத்தை ஆழ்வார் உணர்த்தும் நிலையில் இவ்வுவமையை ஆளுகிறார்[13]

திருமாலினது திருத்தோள்களுக்கு மலையதனை உவமை யாகக் கொள்வதை,

**"வரையார்திரள் தோளன்"**[14]

என்ற தொடரால் அறியலாம்.

மலைபோன்ற உறுதி, வாய்ந்தன அவன் திருத்தோள்கள். மலையானது எப்பல் புல் பூண்டு, பசுஞ்செடிகள், ஆடு, மாடு கட்கு இடமாய்ப் பரந்துளதோ அப்படி அவனத்துக்கும் தான் இடமாகிப் பரந்திருக்கும் பரத்துவம் மிக்கவன் மால் என்கிறார்.

அவனது திருவடிகள், மலர்போல் தாமரைபோல் மென்மையானவை; சிவந்தவை; தண்மையானவை—என மாலினது திருவடிகளுக்கு மலரை—தாமரை மலரை உவமை யாக்கிறார் ஆழ்வார். தாமரையானது எவ்வாறு இறைவனது பூசைகளுக்கு உகந்ததாயுளதோ அவ்வாறே அவனது திருவடி களும் நமது சிரங்களை அணிசெய்வதற்குரியதாம்.

**"தாமரை யன்னபொன் னாரடி**

**"...ஒளிமாமலர்ப்**
**பாதம் நாளும் பணிவோம்"[15]**

மாலினது திருக்கரங்களும் பங்கயத்தைப் போன்று சிவப்புற்றுள[16] என ஆழ்வார் அவனது திருக்கரங்களுக்கும் தாமரை மலரையே உவமையாகக் கூறுகிறார்.

பொதுவாகப் பெண்களுன் கண்களுக்கு வேல், மீன், மான், வாள் முதலானவற்றைக் கவிஞர்கள் உவமையாகக் கூறுவர், இவ்வாறே திருமங்கையாழ்வாரும் கீழ்வருமாறு மாதர்களின் விழிகளை உவமிக்கிறார்.

**"விலங்கும் கயலும் வேலும்ஒண் காவியும் வென்றகண்"**

**"வாளொண்கண் நல்லார்"**

**"மானேய் நோக்குநல்லார் மதிபோல் முகத்துலவும்**
**ஊனேய் கண்வாளி"[17]**

பெண்களின் இடைக்கு,

**"கொம்பும் அரவமும் வல்லியும் வென்றநுண் ணேரிடை"[18]**

என அரவம், வல்லியை உவமைப்படுத்துகிறார்.

மங்கையரின் சொல்லழகு நடையழகை வருணிக்கப் புகுந்தவர்,

"......கோலவ
ஏய்வாய மரகதம்போல் கிளியின் இன்சொல்
அனமேவு கடைமடவார்"[19]

எனக் கிளிமொழி—அன்னம் ஆகியவற்றை உவமை கூறுகிறார்.

மாதர்களின் சிவந்த திருமுகத்திற்குக் கமல மலரையும் அவர்களது செவ்வாய்க்குக் குமுத மலரையும், அழகிய விழிகளுக்குக் குவளை மலரையும் உவமையாய்க் கூறுகிறார் திருமங்கை.

"நெல்லில் குவளை கண்காட்ட
நீரில் குமுதம் வாய்காட்ட
அல்லிக் கமலம் முகங்காட்டும்"[20]

கழனிகளில் களைகளாக மண்டியுள்ள மலர்களில் அழகினை அவ்வூரின் அழகிய மாதர்களின் அங்கங்கள் பெற்றுள்ளதாய் ஆழ்வார் கூறும் திறம் பாராட்டுதற்குரியது.

மாதரின் வாய்மொழி பண்ணின் இனிமையை ஒத்துளதாம்.

"மண்ணுலாம் பொன்மொழிப் பாவைமார்"[21]

சீதையின் அழகினை விளக்க வந்த திருமங்கையார் பல்வேறு சிறந்த உவமைகளைக் கொண்டு விளக்குகிறார்.

"வில்லேர் நுதல்வேல் நெடுங்கண் ணியும் நீயும்"

"வல்லி யிடையாள்

"வேரி வார்பொழில் மாமயிலன்ன
அஞ்ச லோதியை

"...வஞ்சிநுண் மருங்குல்
மா ழை மான்மட நோக்கியை"

"வேற்க ணாளை"

"மானரும் மென்னோக்கி வைதேவி"[22]

என்ற பாசுர வரிகளில் அவளது அழகிய விழிகளுக்கு வேலையும் மானையும் அவளது மருங்கிற்கு வல்லிக்கொடியையும், அவளது சாயலுக்கு மயிலையும் உவமித்துக் காட்டுகிறார்.

மேலும் இவ்வாறே, ஆறாம்பத்து எட்டாம் திருமொழியில் யசோதையின் கண்களுக்கு அம்பையும்[23] திருமகளின் இடை அழகுக்கு மின்னலையும்[24] நப்பின்னையின் விழிகட்கு மலரையும்[25] உவமித்துக் காட்டுகிறார் ஆழ்வார் திருமங்கை.

ஆழ்வார் பரகாலநாயகியாக—அத்தலைவியின் அழகைப் பலவாறு உவமிக்கிறார்.

"நெடுங்கடல் அமுதனை யாளை"

"மாழைமென் னோக்கி"

"பார்கெழு பல்வத்அ தாரமு தனைய
பாவையை"[26]

எனத் தலைவி மான்போன்ற நோக்கினையும் கடலமுது போன்ற இனிமையையும் கொண்டவள் என்கிறார்.

மேலும் திருமங்கையார் பெரியதிருமொழி பதினொறாம் பத்து எட்டாம் திருமொழி முழுமையும் உவமையணியே காணப்பெறுகிறது.

இவ்வாறு திருமங்கை ஆழ்வார் பல்வேறு உவமைகளை வழங்கி, தமது கவிதைத்திறத்தால் கற்போர் உள்ளத்தை ஈர்க்கின்றார் மேலும் ஆழ்வார் பாசுரங்களில் தேவைப் படும் இடங்களில் எல்லாம் பிற அணி வகைகளும் அமையப் பெற்றுக் கற்போருக்கு இன்பம் பயக்கின்றன.

ஆழ்வார் இறைவனிடம் தான் சரணாகதி அடையும் போது, தான் அவனுக்கு அடிமையாய் உய்ந்ததையும், தனது மனம் இன்னும் அமைதி அடையாது அலைய, அவனே கதி எனப் பணிந்ததையும்,

"இரும்பனன் றுண்ட நீர்போல்
எம்பெரு மானுக்கு என்றன்
அழும்பெற லன்பு புற்றிட்
டடிமைபூ ண்டுய்ந்து போனேன்"

"உள்ளமோ ஒன்றில் நில்லாது
ஓசையில் எரிதின் றுண்ணும்
கொள்ளிமே லெறும்பு போலக்
குழையுமால் என்ற னுள்ளம்"[27]

எனப்பாடிப் பரவசம் அடைகிறார்.

ஈண்டு இரும்பனன்றுண்ட நீர், கொள்ளிமேல் எறும்பு ஆகியன உவமைப்பொருளாக் கூறப்பட்டுள்ளன.

**உயர்வு நவிற்சியணி :**

உள்ளதை மிகைபட புனைந்து கூறுவது உயர்வுநவிற்சி யாகும். பொருள்களின் மேம்பாட்டினைப் புலப்படுத்தப் பெரிதும் இவ்வணி உதவுகிறது.

எம்பெருமானின் பெருமையை இயன்ற அளவுக்கு உயர்த்திச் சொல்லும் பாங்கு பக்தனுக்கு இயல்பு அப்போது தான் அப்பக்தனின் மனம் திருப்தி அடையும் ஆகவே திருமங்கையாரும் மாலை தம் மனம் திருப்தி அடையுமாறு உயர்வு நவிற்சியில் உயர்த்திப் பாடுகிறார்

திருவேங்கடத்தில் வேடுவர்கள் வாழ்கின்றனர்; அவர்கள் இடுகின்ற அகிற்புகையானது ஓங்கி மேகத்தைத் தொடுகின்ற தாம்.[28] ஈண்டு, இடும் அகிற்புகையின் மிக்கிருந்த தன்மையைக் கூறவந்தவர் இவ்வாறு உயர்வுநவிற்சி தோன்றப் பாடுகிறார்.

திருவேங்கடத்தில் பிரம்மா, இந்திரன், மற்றுமுள்ள தேவர்கள் அனைவரும் சேர்ந்து வந்து திருவேங்கடவனை வணங்குகின்றனராம். இவ்வாறு உயர்வுநவிற்சிபட ஆழ்வார் பாடுவதைப் பின்வரும் அவர்தம் பாசுரவரிகள் நன்கு உணர்த்துகின்றன,

**"ஆடு தாமரை யோனு மீசனும்**
**அமரர்கோனும் நின் றேத்தும் வேங்கடம்"[29]**

திருவயிந்திரபுரத்தில், சர்க்கரை ஆலைகளில் இடும் கரும்பின் புகையானது ஓங்கி ஆகாயத்தைத் தொடுகின்றது. இவ்வாறு உயர்வு நவிற்சியாகக் கூறும்போது இத்தலத்தின் செல்வ வளத்தின் சிறப்பினை அறிய முடிகிறது

**......"மிடைந்து**
**சாறு கொண்டமென் கரும்பிளங் கழைதகை**
**விசும்புற"[30]**

திருவயிந்திரபுரத்தின், செல்வ வளத்தின் சிறப்பினை ஆழ்வார் பின்வருமாறு உயர்வுநவிற்சி படக் கூறுகின்றார். "யானை மருப்பு அகில் ஆகியவற்றைத் திரைஅலைகள் கொணர்ந்து வந்து வயலில் தள்ளும் திருவயிந்திரபுரம்[31].

ஆகாயத்தை எட்டும்படியான மதிள்களை உடையது திருவயிந்திரபுரம். அத்திருவயிந்திரபுரத்தில் உறைபவன் எம்பெருமான் ஆகாயத்தை எட்டும்படியான மதிள்கள் என்று கூறும்போது மதிள்களின் உயர்வின் சிறப்பினை அறிய முடிகிறது,

**"கவினாகும்**
**வானு லாவிய மதிதவழ் மால்வரை**
**மாமதிள்"[32]**

திருநாங்கூரில் மாடங்கள் ஆகாயத்தைத் தொடுமளவுக்கு மிக்கு உயர்ந்திருக்க, சூல்கொண்ட மேகங்கள் அம்மாட உச்சியோடு உரசிச் செழுமுத்தங்களைச் சொரிகின்றதாம்.[33]

இவ்வாறு திருநாங்கூரில் செல்வச்சிறப்பை மாடங்களின் உயர்வில் வைத்துக் காட்டும் ஆழ்வார் உயர்வுநவிற்சியுற கவித்துவத்தோடு காட்டுவது பாராட்டத்தக்கது.

நாங்கூரின் வளச்சிறப்பைக் காட்டவந்த ஆழ்வார், உயர்வுநவிற்சியுடன், ஒரு காட்சியைக் காட்டுகிறார். நாங்கூர் வயல்களில் களைகளாய்க் கமலம், செங்கழுநீர் மலர்கள்

விளைந்திருக்க அம்மலர்களிலிருந்து மதுவானது ததும்பி வெள்ளமாய் ஒழுக, உழவர்களோ மடையடைக்கின்றனர்.[34]

நாங்கூரின் செல்வவளத்தின் சிறப்பினை ஆழ்வார் பின் வருமாறு உயர்வுநவிற்சிபடக் கூறுகிறார் சிங்கத்தினால் கொல்லப்பட்ட யானையினது மருப்பையும், அகிலையும், அணி முத்தையும், வெண்சாமரையையும் பொன்னி நதி தனது திரைகளாலே உந்திச் சேர்க்கிறதாம்.

"...ஆளரியால்
அலைப்புண்ட யானை மருப்பும் அகிலும்
அணிமுத்தும் வெண்சா மரையோடு பொன்னி
மலைப்பண்டம் அண்டத் திரையுந்தும் நாங்கூர்
மணிமாடக் கோயில்"[35]

திருநாங்கூரில் மாடங்கள் மீதும் மாளிகைகள் மீதும் துவஜங்கள் நாட்டப்பட்டிருக்கின்றன அவை அசைந்து ஆகாசத்தைத் தழுவும்போது சூரியனுடைய கிரணங்களை மறைத்து நிழல் செய்கின்றனவாம் இங்குள்ள மாடங்கள் அழகிய சந்திரனையும் திரியவொட்டாது தடை செய்கின்றனவாம்.

திருப்பேர்நகரில் உள்ள சோலைகளின் உயர்வினைக் காட்டுமுகமாக உயர்வு நவிற்சியுடன் ஆழ்வார் பின்வருமாறு கூறுகிறார். இச்சோலைகள் சந்திர மண்டலத்தையும், மேக மண்டலத்தையும் அளாவி இருக்கின்றன[36]

நறையூர், விண்ணைமுட்டும்படிக்கு உயர்வான நீள் மாடங்களைக் கொண்டு இருக்கிறதாம். இதனை ஆழ்வார், உயர்வுநவிற்சியுடன்,

"துன்றோளித் துகில்படலம் துன்னியெங்கும் மாளிகைமேல்
நின்றார, வான்மூடும் நீள்செல்வத் திருநறையூர்"[37]

எனப் பாடுகிறார்

இவ்வாறே திருச்சேறையின் செல்வவளச்சிறப்பைக் காட்ட வந்த ஆழ்வார் அத்தலத்திலுள்ள மாடங்களின் உயர்வினை உயர்வுநவிற்சி தோன்ற காட்டிப் பாடுகிறார்.

"விண்சேரும் இளந்திங்கள் அகடுரிஞ்சு
மணிமாட மல்கு செல்வத்
தண்சேறை யெம்பெருமான்"[83]

திருச்சேறையில் மணிமாடங்கள் இளந்திங்கள் அகடுரிஞ்சும் அளவிற்கு விண்ணை முட்டும்வண்ணம் உயர்ந்துள்ளன.

திருவழுந்தூரின் செல்வச்சிறப்பைப் பாடவந்தவர், உயர்வு நவிற்சியுடன் இருகாட்சிகளைக் காட்டிப் பாடி முடிக்கிறார்.

மாதர்களின் கூந்தலுக்கிடும் அகிற்புகையானது முகிலை மறைக்கின்றதாம்; கரும்பாலைகளில் இருந்து எழும் புகையே அழல்கதிரையே மறைத்துவிடுமளவுக்கு மிக்கிருக்கிறதாம்.[39]

இவ்வாறே திருக் கோட்டியூர் திருக்குறுங்குடித் திருத்தலத்து திருமாடங்கள் மதியைத் தீண்டுமளவுக்கு உயர்ந்து விளங்குகின்றனவாம்;

திருக்குடந்தையின் செல்வ வளத்தை வருணிக்கப் புகுந்த ஆழ்வார் நீண்டநெடு மாளிகைகளைக் கொண்டது திருக்குடந்தை என்பதை மாளிகைகளினின்று மேல்முகமாய் ஓங்கும் கொடிகள் விசும்பிலுள்ள பாலசந்திரனைத் தொடுகின்றன என்று உயர்வுநவிற்சிபட வருணிக்கிறார்.

"திமிர்கொடி விசும்பில் இளம்பிறைத் துவக்கும்
திருக்குடந்தை"[41]

## புகழாப்புகழ்ச்சி அணி

ஒன்றினைப் பழிப்பதுபோல் புகழ்வது புகழாப்புகழ்ச்சி அணியாகும்.

"வண்ணக் கருங்குழல் ஆய்ச்சியால் மொத்துண்டு
கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான்"[42]

எம்பெருமான் கண்ணன் தயிர் வெண்ணையினைத் திருட்டுத்தனமாய் அதிக அளவில் உண்டு, தாய் யசோதை யிடம் அடிவாங்கி, குறுங்கயிற்றால் கட்டுண்ட செய்தி, அவனை இழித்துரைப்பது போல் அமைந்திருப்பினும் உண்மையில் அச்செய்தி எவர்க்கும் எதனாலும் கட்டுப்படாத இறை தானே வலிய வந்து சாதாரண மானிடப் பெண்ணின் அன்பிற்குக் கட்டுப்பட்டு அவனது எளிமைத்தனத்தைக் காட்டுவதாக அமைந்து அவனது புகழைப் பறைசாற்றுவதாக அமைந்து உள்ளதால் இப்பாசுரம் புகழாப்புகழ்ச்சி அணியாம்.

## தற்குறிப்பேற்றவணி

இயற்கையாக நிகழ்கின்ற ஒரு நிகழ்ச்சிக்குப் புலவன் தானொரு காரணத்தைக் கற்பனை செய்து கூறுதல் தற்குறிப் பேற்ற அணியாகும்.

திருவேங்கடமலையில் வேடுவர்கள் வாழ்கின்றனர்; நிலப்புலம் காவலிருக்கின்ற குறத்திகள் குறிஞ்சி இசை பாடிக் கொண்டிருக்கின்றனர்; ஆங்குள்ள சோலைகளில் மலர்கள் மலர்ந்து இலங்கியபடி இருக்க, அவற்றின் மதுவினை உண்ண வண்டுகள் ரீங்காரமிட்டுப் பாடிய வண்ணம் இருக்கின்றன. இவ்வாறு குறிஞ்சி நிலக்காட்சியைக் காட்ட வந்த ஆழ்வார், கவிதைத்திறம் உந்த, அம்மலையில் வாழும் குறத்திகள் குறிஞ்சி இசைபாடிக் கொண்டிருக்க வண்டுகளும் அவர் களோடு சேர்ந்து இசைபாடுகின்றன[43] எனத் தற்குறிப்பு தோன்றப் பாடுகிறார்.

திருவயிந்திரபுரத்து வயல்களில் அன்னங்கள் தாமரைப் படுக்கையில் தமது பெடையோடு இனிதமர்ந்திருக்கிறன; செந்நெல்லோ அவற்றிற்கு கவரி வீசிய வண்ணமிருக்கிறது. இப்படி ஒருகாட்சி காட்டி இத்தல வளச்சிறப்பைக் காட்டு கிறார்.

செந்நெல் காற்றிற்குத் தானாக ஆடுகிறது இதனைக் கழனியில் களையாயிருந்த தாமரை மலர்களில் வீற்றிருக்கும் அன்னத்திற்குக் கவரி வீசுவதாகத் தன் குறிப்பு ஏற்றிப் பாடுகிறார்.

**"...மணி வரைநீழல்**
**அன்ன மாமலர் அரவிந்தத் தமளியில்**
**பெடையோடும் இனிதமர**
**செங்நெல் ஆர்கவ ரிக்குமர வீசுதன்**
**திருவயிந் திரபுரம்"[44]**

திருக்கடலூர் ஒரு விந்தை காட்சிக்கு இடமாய் இருக்கிறது அதாவது இத்தலத்தில் வண்டலிட்டிருக்கும் நீர் நிலைகளில் கெண்டைமீன்கள் செருக்காலே துள்ளுகின்றன. அது கண்ட வான்மேகங்கள் தம்மிடத்து மின்னும் மின்னலின் ஒளியை தனது என எண்ணி, இடியோசை எழுப்புகின்றன.[45]

வான்மேகம் இடிமுழக்கம் செய்கிறது. இயற்கையின் இயற்கை நிகழ்வு இது ஆங்கு நீர்நிலைகளில் கயல்கள் துள்ளுவதும் இன்னொரு செயல். மீன்கள் துள்ளுவது மின்னல் ஒளியை நினைவுபடுத்துவது இயற்கை. ஆனால் ஆழ்வார் இவ்விரண்டையும் இணைத்துத் தம் கற்பனைக் குறிப்புதோன்ற மேற்கண்ட காட்சியை அமைத்துக் காட்டுகிறார்.[46] தம்மை ஒரு சிறந்த கவிஞன் என நிரூபித்துக்கொள்கிறார்.

மேலும் இத்தலத்தின் நீர் நில வளங்களைப் பாட முயலும் போது தம் குறிப்பு தோன்ற இரு காட்சிகளைக் கண்முன் காட்டுகிறார்.

வண்டலிட்ட நுண்ணிய மணல்களில் மாம்பழங்கள் விழுந்து கேட்பாரற்று வரிசையாகக் கிடக்கின்றன. இது காண்பதற்குப் பழுக்கைக்குப் பதித்து வைத்தாற் போல் உளதாம்.[47]

படர்ந்த இலைகளை உடைய தென்னை மரங்கள் குளங்களில் கரையிலே நிற்க, அவற்றின் இளநீர் குலைகள் தாழ்ந்து

நிற்கின்றன. அக்காட்சி குளங்களை இளநீராலே நிறைத்து இலைகளாலே மறைத்து வைத்தாற் போல் உள்ளதாம்.[48]

ஆழ்வார் திருநறையூரில் ஸ்தலபயணத்தின் போது ஓர் அழகிய காட்சியைக் காண்கிறார். அங்குள்ள சோலையில் பொன்வண்டு—தென்றல் காற்று, முல்லைக் கொடி இருக்க ஆழ்வார் தம் குறிப்பினை அவற்றின் மீது ஏற்றி, அழகிய தொரு காட்சியை அமைத்துக் காட்டுகிறார். பொன் மலர் மேல் வண்டானது கள்ளுண்ண, தென்றல்காற்று அலர் தூற்ற அது கேட்டு முல்லை மலரோ முறுவலிக்கிறதாம்.[49]

## உருவகம்

உவமையாம் பொருளையும், உவமிக்கப்படும் பொருளையும் வேறுபாடு ஒழிவித்து ஒன்றென்பதோருள் ளுணர்வு தோன்ற பேதமில்லாதாக்கின் அஃது உருவகமாகும்.[50]

திருமங்கை, திருமாலைப் புள்ளூரும் பொன்மலையாக, பொன்னாக, மாமணியாக, ஆரமுதமாக, முத்தாக, கருமுகிலாக, விளக்காக, களிறாக, சுவைக் கரும்பாக ஆவியாக, தேனாக, பாலாக, கனியாக, கடற் கிடந்த கருமணியாகப் பலவாறு பின்வருமாறு உருவகப் படுத்துகிறார்.

**"புள்ளூரும் பொன்மலையை"**

**"பொன்னை மாமணி யையணி யார்ந்ததோர்**
**மின்னை"**

**"வேலை யாலிலைப் பள்ளி விரும்பிய**
**பாலை ஆரமு தத்தினை"**

**"அளப்பில் ஆரமு தைஅம ரர்களுள்**
**விளக்கினை"**

**"முத்தி னைமணி யைமணி மாணிக்க**
**வித்தி னை"**

"......கருமுகிலை
கைம்மான மணியை அணிகொள் மரகதத்தை"

"......அமுதத்தைக் கடற்கிடந்த
பெருமானை"

"......சுவைக்
கரும்பி னைக்கனி யை"

"வெஞ்சி னக்களிற்றை"

"அரங்க மாணியென் னாளி, விண் ணாளி"

"தஞ்சை யாளியை"

"கைம்மான மழகளிற்றைக் கடற்கிடந்த கருமணியை
கைம்மான கரகதத்தை"[51]

மொழி என்பது மனிதன் தன் கருத்தினை வெளியிட படைத்துக் கொண்ட ஓர் அற்புதக் கருவியாகும். எங்கும் நிறைந்திருக்கின்ற முழுமுதற் பொருள் மொழியாகவும் விளங்குகிறது என்பது திருமங்கையாரது கருத்தாகும். திருமாலைத் த மி ழி ன் ப ப் பாவாக—வடமொழியாகக் கண்ணுறுகிறார் ஆழ்வார். இதனை,

"செந்நிறத்த தமிழோசை வடசொல் லாகித்"[52]

என்ற பாசுர வரிகளில் அறியலாம்.

"காரார் வரைக்கொங்கை கண்ணார் கடலுடுக்கை
சீரார் சுடர்சுட்டிச் செங்கலுழிப் பேராற்று
பேரார மார்வின் பெருமா மழைக்கூந்தல்
நீராத வேலி நிலமங்கையென்னாய்"[53]

பூமியை மங்கையாகக் கொண்டு பலவாறு உருவகிக்கிறார். பூமாதேவி மேகங்களாகிய கூந்தலையுடையவளாய் மேகம் படிந்த மலைகளாகக் கொங்கைகள் வாய்க்கப்பெற்று கடலாகிய சேலை அணிந்துகொண்டு, சூரியனாகிய நெற்றிச் சுட்டி, ஆறுகளாகிய ஹாரம் ஆகியனவற்றை அணிந்து கொண்டு, ஆவரணஜலமெனும் காவலை உடையளாய்

அழகியதொரு நங்கையாயிருக்கிறாள் என்கிறார் ஆழ்வார் திருமங்கையார்.

இப்படிப் பூமியை அழகியதோர் நங்கையாய் ஆழ்வார் உருவகித்துப் பேசுவது அவரது கவிப்புலனுக்கொரு சான்று என்பது தவறானதன்று. ஈண்டு ஆழ்வார் உருவகித்துப் பேசுவது, எம்பெருமானின் இருதேவிமார்களில் ஒருவளாகிய பூதேவி பற்றிய தமது பக்தித்திறத்தை மெய்ப்பிக்கும் வகையில் அமைகிறது.

## 5-5. திருமங்கை பாசுரங்களில் வருணனை

ஆழ்வார் தாம் ஒரு சிறந்த கவிஞர் என்பதனைக் காட்டிடும் நிலையிலும் திருமாலையே முதற் பொருளாகக் கொண்டு பாசுரங்களைப் பாடி இருத்தல் அவருடைய சிறப்பினை எடுத்துக் காட்டுகிறது. சான்றாகக் கண்ணனாகிய கடவுளின் திருவுருவக் காட்சியை ஆழ்வார் படம்பிடித்துக் காட்டுவதைக் கூறலாம்.

கண்ணனது திருமார்பில் அழகிய துழாய்மாலை பிரகாசிக்கிறது. திருச்செவிகளோ கடிப்பிட்டிருக்க, இடையிலோ கலிங்கம் உடுத்திக் கொண்டிருக்கிறான். தாழ்ந்த குழலோடு சுரிகை அணைத்திருக்க, பல்வேறு பொன், மணி ஆபரணங்கள் மேனியில் இலங்குகின்றன. அவனது திருக்கையிலோ வில்லொன்று இருக்கிறது. இப்படிக் கூறும்போது கண்ணனது திருவுருவம் தம் மனக் கண்ணில் தெரிகிறது.

**"காதிற் கடிப்பிட்டுக் கலிங்க முடுத்து**
**தாதுநல்ல தண்ணற் துழாய்கொ டணிந்து"**

**"துவரா டையுடுத் தொருசெண்டு சிலுப்பி**
**சவராக முடித்துக் கலிக்கச்சுக் கட்டி"**

**"சுற்றும் குழல்தாழச் சுரிகை யணைத்து**
**மற்றும் பலமாமணி பொன்கொ டணிந்து"**

"ஆனா யரும்ஆ னிரையுமங் கொழியக்
கூனாய தொர்கொற்ற வில்லொன்று கையேந்தி"[44]

ஆழ்வார் தமது புனைந்துரை கவித்திறனால் சிவனது திருவுருவை அப்படியே நம் கண்முன் கொண்டு வருகிறார். அவனது திருமேனி எங்கும் நீறு பூசி இருக்கிறது; கங்கை நதி, பிறை, அரவம் ஆகியன அவனது திருச்சடைமேல் இடம் பிடித்துக் கொண்டுள.

"ஆறும் பிறையும் அரவமும்
அடம்பும் சடைமே லணிந்து உடலம்
இறையோன்"[35]

என ஒரு சில அங்க வர்ணனையிலேயே தமது குறிக்கோளை எட்டிப் பிடித்து விடுகிறார் ஆழ்வார்.

பெற்றவள் பிள்ளையின் பசி குறித்து அறிவாள். அக்குழந்தைக்கு எந்தெந்த நேரங்களில் பாலூட்ட வேண்டுமென்பதும் அவளுக்குத் தெரியும். குழந்தை அழுதுதான் பால்தர வேண்டுமென்பதில்லை. குழந்தைகள் ஓரளவு வளர்ந்து விளையாடும் பருவ நிலைக்கு வருமானால் அவை பசிக்கும் நேரங்களில் தாயை நாடிவந்து பால் அருந்தும்; தானாகவே அவள் முலைத்தடத்தைத் தானே வாங்கித் தன் வாயில் வைத்துக்கொள்ளும். இவ்வாறு மழலைகள் பாலருந்தும் காட்சிகளை ஆழ்வார் தமது அனுபவத்தில் கண்டு இருக்கவேண்டும். கவிஞர்—பக்தராழ்வார் இக் காட்சியை, யசோதை கண்ணனை அம்மமுண்ண அழைப்பதாகத் தாம் பாடும் பெரிய திருமொழியில் அப்படியே பயன்படுத்திக்கொள்கிறார்.

குழந்தை கண்ணனது தாழ்குழலில் மலர்கள் சூடப்பட்டுள்ளன. அலங்கார ரூபினனாய் விளங்கும் அவனுக்குப் பசி வயிற்றைக் கிள்ளுகிறது. கண்ணன் விளையாடுவதை விட்டுவிட்டுத் தாயைத் தேடுகிறான். அவளைக் கண்டதும் அவளருகில் வந்து அவள் மடியில் அமர்ந்து தானே அவள்

முலைத்தடம் பற்றித் தன் வாயில் வாங்கி இளங்கன்றாய்ப் பால் அருந்துகிறான். இதனை,

**"சந்த மலர்க்குழல் தாழத்**
**தானுகந் தோடித் தனியே**
**வந்து என் முலைத்தடந் தன்னை**
**வாங்கிநின் வாயில் மடுத்து**
**நந்தன் பெறப்பெற்ற நம்பீ!**
**நானுகந் துண்ணும் அமுதே!**
**எந்தை பெருமானே உண்ணாய்!**
**என்னம்மம் சேமமுண் ணாயே"**[66]

என அழகுபடப் புனைந்துரைத்துச் செல்கிறார்.

ஆழ்வார் இறைவனது விபவ அவதாரங்களில் மூழ்கி பக்தியொடு அவற்றைத் தம் பாசுரங்களில் வைத்துப் பாடும்போது, அவற்றில் ஆழ்ந்து என்றோ நிகழ்ந்த அவ்விபவ அவதாரங்களை அப்போதே நிகழ்வதாகத் தம் கண்முன்கண்டு ஆனந்திக்கிறார். அதனால் அவ்வவதார நிகழ்வுகளை கற்போரும் கண்முன்னே நிகழுமாறு அற்புதமாகப் பக்தி யொடு அவற்றை வருணித்து புனைந்துரை செய்கிறார் என்றால் அது மிகையாகாது.

கோகுலத்தில், இந்திரனுக்கு ஆயர்கள் விழா எடுக்க முடிவெடுக்கின்றனர். ஆனால் கண்ணன் அதைத் தடுத்துவிட்டு, பெரிய பூத வடிவுடன் ஆயர்களது விழவுப் படையலை உண்டு விடுகிறான், இதனால் கோபமுற்ற இந்திரன், அடைமழை பெய்வித்து ஆயர்களுக்கும் இடையூறு செய்கிறான். முதற்பொருள் கண்ணன் இவை எவற்றுக்கும் அஞ்சாது தனது மக்களைக் காத்திட கோவர்த்தன மலை யையே குடையாகப் பிடிக்கின்றான். கண்ணவைதாரத்தில் நிகழும் எம்பெருமான் குடைபிடித்த இந்நிகழ்வை ஆழ்வார் நம் கண்முன் காட்டுமாறு புனைந்துரைப்பது உண்மையில் பாராட்டத்தக்கது.

"இந்திர னுக்கென் றாயர்கள் எடுத்த
எழில்விழ வில்பழ நடைசெய்
மந்திர விதியில் பூசனை பெறாது,
மழைபொழிந் திடத்தளர்ந்து ஆயர்
எந்தம்மோ டினஆ நிரைதளா ராமல்
எம்பெரு மான்"[57]

இவ்வாறே ஆழ்வார் இறைவனது வாமன அவதாரம் நரசிம்ம அவதாரம், அன்னவதாரம், ஆமை அவதாரம் முதலான அவதாரக் காட்சிகளைச் சிறப்புற புனைந்துரைத்துத் தமது கவித்திறத்தைக் காட்டிக் கொள்கிறார்.

ஆலிலைப்பாலன் கோலம், கசேந்திரனைக் காத்தது, சிவன் சாபம் தீர்த்தது. ஆகிய நிகழ்வுகளும் ஆழ்வாரால் அழகுறப் புனைந்துரைக்கப்பட்டு நம் கண்முன் காட்டப் பெறுகின்றன.

இறைவன் தமை ஆட்கொள்ள அவனது திருக்கோலத்தைக் கண்ணாரக் கண்டு தாம் கண்டதை அத்திருவுரு வழகினை ஆழ்வார், தலைமகள் கூற்றாகத் தலைமகளது செயல்களை வினவவந்தார்க்குத் தாய் கூறும் எட்டாம் பத்து-ஒன்றாம் திருமொழிப் பாசுரத்தில் காட்டுகிறார். அவர் கண்களால் கண்டு மகிழ்ந்த அவனது திருமேனி அழகைத் தாம்பெற்ற இன்பத்தைப் பிற பக்தர்களும் அனுபவிக்கும்படி அப்படியே அக்காட்சி கண்முன் வருமாறு வருணிக்கிறார்.

அவனது நான்கு திருத்தோள்கள் விளங்க, சங்கு, சக்கரம் தரித்தவனாய், திருக்கரத்தில் சிலையோடு, மணியோடு, துழாய் சூடிய முடியோடு மகரக்குண்டலங்கள் திருச்செவிகளில் அலங்கரிக்க, மணியாரம் மார்பில் அணிசெய, வண்டு நுகராத துளப மாலையை மார்பில் தாங்கியவனாய், பவளவாயினனாய், தாமரைபோல் திருவடிகள், திருப்பாதங்களுடையவனாய், திருமகளை மார்பினில் வைத்தவனாய் வண்டமரும் வனமாலை மணிமுடிமேல் மணம்நாற,

செவ்வரத்த உடையாடை யதன் மேலோர்
சிவளிகைக்கச் சென்கின் றாளால்
'அவ்வரத்த அடியினையும் அங்கைகளும்
பங்கயகம்" என்கின் றாகிரல்"[58]

எனும்படிக்குக் கருநீல வண்ணனாய்,

" 'கொற்றப்புள் ளொன்றேறி மன்றூடே
வருகின்றாள்' என்கின் றாளால்"[59]

எனும்படிக்கு, கருடாழ்வார் மீதேறி வந்து காட்சி தந்தான் என்கிறார். ஆழ்வாரின் இத்திருக்கோல வருணனை மாலை ஊனக்கண்ணாரக் கண்டு பக்தி உணர்வு மீதூரப் பெற்றது போல் உணர்வை எழுப்புதல் ஆழ்வாரின் பக்தியோடு கவித்துவத்தின் சிறப்பிற்குச் சிறப்பு சேர்க்கிறது

'நால்வாய் மும்மதத் திருசெவி
ஒருதனி வேழத் தரந்தையை"[60]

யானையின் உருவத்தை ஈண்டு வருணிக்கிறார். ஒரு குழந்தை கிணற்றில் விழுந்துபோக, அதனை எடுத்துக் கரையிலே போட்டவர்கள் 'அந்தோ' காலழகும் இஃதொரு கையழகும் இதொரு தலையழகும் இதொரு முகவழகும் என்னே!' என்று சொல்லிச் சொல்லி மாய்ந்து போவார்கள்; அப்படியே எம்பெருமானும் யானையின் காலை முதலை வாயினின்றும் விடுவித்தப் பின் அதனுடைய வாயும் செவியும் முதலிய அவயங்களின் அழகிலே ஆழ்ந்து கரைந்தமை தோற்ற அந்தப் பகவத்ஸமாதியிலே ஆழ்வார் ஆனையை வருணிக்கிறார்.[61]

...முக்கண் நாற்றோள்
ஐவாய் அரவோடு ஆறுபொதி சடையோன்"[62]

மூன்று கண்களையும், நான்கு தோள்களையும், ஐந்து வாயை உடைய பாம்பையும் கங்காநதி அமைந்த சடையை

யும் உடையவன் சிவன் என அவனுக்கு அடையாளம் கூறுவது போல அவர் வருணனை அமைவதைக் காணலாம்.

## திருத்தலங்களின் இயற்கை அழகு

திருவரங்கம், திருவேங்கடம், திருவித்துக் கோடு, தில்லைத் திருசித்திரக்கூடம், திருக்கண்ணபுரம் போன்ற எண்பத்தாறு வைணவத் திருத்தலங்களின் இயற்கை அழகினைச் சிறப்பாக வருணித்துப் பாடுகின்றார் ஆழ்வார்.

திருப்பிருதியில், மாமுகில் அதிர, மழை வருதல் உணர்ந்து மாமணி மயில்கள் மலை முகடேறி நடம் செய்கின்றன; மாதவிக்கொடிகள் வானளவு ஓங்கி நீண்டு வளர்ந்திருக்க—வண்டுகள் அம்மலர்த் தேனுண்ண வந்து இசைபாடிக் கொண்டிருக்கின்றன. மாமுகில் கூட்டங்கள் முழங்கியது கேட்டு அது களிறு என்று எண்ணி பெரிய மாசுணங்கள் பெயர்கின்றன; பிரமன் முதலிய இமையோர்கள் வந்து வணங்குகின்றனர்; இளமூங்கில் ஒன்றினைப் பறித்துத் தேன்கூட்டில் தேன் தோய்த்துத் தனது துணைக்குக் களிறு அன்பொழுக ஊட்டுகின்றது.

"வரைசெய் மாக்களி றிளவெதிர் வளர்முளை
அளைமிகு தேன்தோய்த்து
பிரச வாரிதன் னிளம்பிடிக் கருள்செயும்
பிருதிசென் றடைநெஞ்சே!"[63]

இப்பாசுரத்தொடர் திருப்பிருதியின் குறிஞ்சி நில வளக் காட்சியை இயற்கை அழகினைச் சிறப்பாக விளக்கிக் காட்டுகிறது.

சிங்கவேள்குன்றின் பாலை நிலக்காட்சியை நம் கண்முன் கொண்டு வரும்படி, அங்கு நிகழும் சில காட்சிகளை அப்படியே சுவை ததும்பக் காட்டிச் செல்கிறார்.

தெய்வமலால் மானிடர் சொல்லவொண்ணாதபடிக்குக் கடுமையினை உடையது: தேவர்கள்—மானிடரின்றி இங்கு

வாழும் மிருகங்களாலும் வணங்கும் சிறப்பினன் சிங்கவேள் குன்றாகிய நரசிம்மன்.

இத்தலத்தின் பாலைநிலக்காட்சியை ஆழ்வாரின் கீழ் வரும் பாசுரவரிகள் அப்படியே படம்பிடித்துக் காட்டுகின்றன.

"கவ்வும் நாயும் கழுகும்உச்சிப் போதொடு கால்சுழன்று
தெய்வ மல்லால் செல்லவொண்ணாச் சிங்கவேள்
குன்றமே"

"நின்ற செந்தீ மொண்டுசூறை நீள்விசும் பூடிரிய
சென்று காண்டற் கரியகோயில் சிங்கவேள் குன்றமே"

"காய்த்த வாகை நெற்றொலிப்பக் கல்லதர் வேய்ங்கழைபோய்
தேய்த்த தீயால் விண்சிவக்கும் சிங்கவேள் குன்றமே"[64]

திருவேங்கடமலையில் பொழில்கள் பலவுள; விண்ணைத் தொடும் நீள்சிகரங்கள் நாற்புறமும் சூழ்ந்துள; நிலந்தோய் நீள்முகில்கள் வந்து திருமலைகுன்றுகளில் தோய்ந்து முழங்குகின்றன; ஓங்கி வளர்ந்த மூங்கில்கள் வெடித்து வெண்முத்துக்கள் உதிர்கின்றன இத்தகைய இயற்கை அழகு பொலியும் வேங்கடத்தைத் தம் பாசுரவரிகளில் அப்படியே நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறார் ஆழ்வார் திருமங்கை.

"வேயேய் பூம்பொழில்சூழ் விரையார்திரு வேங்கடம்"
"தேனேய் பூம்பொழில்சூழ் திருவேங்கட மாமலை"
"குன்றேய் மேகமதிர் குளிர்மாமலை வேங்கடவா"
"நிலந்தோய் நீள்முகில்சேர் நெறியார்திரு வேங்கடம்"
"கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா"
"கோற்றேன் பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ் வேங்கடவா"
"கற்றேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனை வேங்கடவா"
"...பொங்குநீர்
செங்க யல்திளைக் கும்சு னைத்திரு
வேங்க டம்"[65]

திருமலையில் வேடுவர்கள் வாழுகின்றனர்; அவர்களிடும் அகிற்புகையானது ஓங்கி மேகத்தைத் தொடுகின்றது. அம் மலையில் வாழும் குறத்திகளோ குறிஞ்சி இசை பாட, சோலை வண்டுகளும் அவர்களோடு சேர்ந்து இசைபாடு கின்றன. தினைப்புனங்களில் பறவைகள் வந்து கதிர்களை உண்டுவிடாதவாறு அம்மாதர்கள் தினைப்புனங்களில் இருந்து கொண்டு அவற்றை விரட்டிக் கொண்டுளர். இவ்வாறு ஆழ்வார் திருமலையின் குறிஞ்சி நில வளக்காட்சியைக் காட்டுமழகு அவரின் கவிதை திறத்தைக் காட்டுகிறது.

திருவல்லிக்கேணியின் இயற்கையழகினை அள்ளிப் பருகிய கவிஞர் திருமங்கையாழ்வார், பின்வரும் பாசுரத்தொடர்களில் நமக்கு அவ்வழகினை நன்கு காட்டுகிறார்.

**"குரவமே கமழும் குளிர்பொழிலூடு**
**குயிலொடு மயில்கள்நின் றால**
**இரவியின் கதிர்கள் நுழைதல்செய் தறியாத்**
**திருவல்லிக் கேணி"**
**"தேனமர் சோலை மாடமா மயிலைத்**
**திருவல்லிக் கேணி"**[66]

சூரியகிரணங்கள் காணமுடியாதபடிக்கு நெருக்கமாய் அமைந்த சோலைகளை உடையது; மணிமாடங்கள் நிறைந்தது எனத் திருவல்லிக்கேணியின் சோலைவளம், செல்வவளம் ஆகியவற்றை ஆழ்வார் சுவைபட உரைப்பது கவிநலச்சிறப்பிற்குத் தகுந்த சான்றாகும்.

### திருக்கடல்மல்லை

மணமிக்க பொழில்களை உடையது· வயல்களில் உழவர்கள் உழுகையில் களையாக விளைந்திருந்த கமலம், செங்கழுநீர் மலர்களோடு சேர்ந்து உழ, அதற்குப் பிழைத் தெழுந்த கழுநீர் கடிகமழ்கின்றதாம் நிதிக்குவைகள், களிறு கள், மணிக்குவியல்களைச் சுமந்துகொண்டு கலங்கள் இயங்கு

கின்றவாம்.[67] இத்தகைய சோலைவளம், வயல்வளம், வாணிபவளம் செறிந்தது இத்தலமெனச் சுவைமீதூர அழகாக வருணிக்கிறார்.

தில்லைத் திருச்சித்ரகூடத்தில் பொழில்கள்தனில் குயில்கள் பாட்டிசைக்கின்றன சுனைகளில் கயல்கள் களித்த வண்ணமிருக்கின்றன அந்தணர்கள் வேள்வி செய்தவண்ணமிருக்கின்றனர் ; இல்லங்களில் வளர்க்கப்படும் கிளிகளும் நான் மறைகளைப் பாடிய வண்ணமிருக்கின்றன. பெருநீரானது யானைத் தந்தங்கள், சந்தனம், முத்து ஆகியவற்றை அடித்துக் கொண்டு வந்து சேர்த்துச் சித்திரக் கூடத்தானுக்குச் சேவை செய்து கொண்டிருக்கிறது செம்பொன்னாலான மணிமாடங்கள் சூழப்பெற்றிருக்கின்றன.[68] இவ்வாறு திருச்சித்திரக் கூடத்தின் நீர்வளம், சோலைவளம், செல்வவளம் ஆகியவற்றைத் திறம்பட வருணிக்கிறார்.

காழிச்சீராம விண்ணகரம், அருமறை நான்கு, ஐவேள்விகள், ஆறங்கங்கள், ஏழிசைகள் சிறக்கின்றபடி செல்வவளமிக்கது; ஆங்கு உழவர்கள் வயல்களை உழுதலால் உதிர்ந்த முத்தினைக் குருகுகள் தம் சினை என எண்ணிச் சூழ்ந்து கொள்கின்றன; மேலும் கமலமலர்கள் முதலானவை களைகளாகக் கழனிகளில் விளைந்துள; சேல்களோ அங்குமிங்கும் பாய்ந்தவண்ணமிருக்கின்றன [69]

வயல்களில் கமலம் மட்டுமின்றி நெய்தல், குவளை, குமுத மலர்களும் களைகளாக விளைந்திருக்கின்றன. வயல்களில் களைபறிக்கும் காலமது. களைபறிக்க வயலில் இறங்கிய கடைச்சிமார்கள் அவ்வயல்களில் களைகளாய் மலிந்திருந்த நெய்தல் குவளைமலர்கள் தம் கண்களைப் போல் இருக்கிறது என்றும், குமுத மலர்கள் தம் வாயழகை ஒத்திருக்கிறது என்றும் நினைந்து அவற்றைக் களை பறிக்காமலேயே அப்படியே விட்டு விடுகின்றனர்.[70]

இவ்வாறு ஒரு சில காட்சிகளைக் காட்டி இத்தலத்தின் செல்வ, வயல் வளங்களை ஆழ்வார் பாடும் விதம் அவரது கவித்துவத்திற்கு அணி சேர்ப்பதாக உளது.

திருவயிந்திரபுரம் சோலைகள் செறிந்தது; அதனால் வண்டுகளின் ரீங்காரமிக்கது; வானைத் தழுவி இருக்கின்றன மாடங்கள்; யானை மருப்பு, அகில் ஆகியவற்றைத் திரை அலைகள் கொண்டு வந்து வயல்களில் தள்ளுகின்றன; அன்னங்கள் தாமரைப்படுக்கையில் தமது பெடையோடு இனிதமர்ந்திருக்க, செந்நெல்லோ கவரி வீசிய வண்ணமிருக்கின்றது.[71] இவ்வாறு திருவயிந்திரபுரத்தின் வயல்—நீர்—சோலை—செல்வ வளங்களை ஆழ்வார் சுவைபட வருணிக்கிறார்.

திருநாங்கூரின் இயற்கை அழகை ஆழ்வார் பின்வரும் பாசுரத் தொடர்களில் நன்கு காட்டுகின்றார்.

**"சிலையிலங்கு மணிமாடத் துச்சிமிசைச் சூலம்**
**செழுங்கொண்டல் அகடிரியச் சொரிந்தசெழு முத்தம்**
**மலையிலங்கு மாளிகைமேல் மலிவெய்தும் நாங்கூர்**
**வைகுந்த விண்ணகரம்"[72]**

நாங்கூரில் மாடங்கள் விண்ணைத் தொடுமளவுக்கு உயர்ந்திருக்க—சூல்கொண்ட கொண்டல்கள் அவற்றின் உச்சியோடு உரசி செழுமுத்தங்களைச் சொரிகின்றன. மாளிகைகள்மீது த்வஜங்கள் நாட்டப்பட்டிருப்பதால் அவை அசைந்து ஆகாயத்தைத் தழுவும்போது சூரியனுடைய கிரணங்களை மறைத்து நிழல் செய்கின்றன. வயல்களில் களைகளாய் விளைந்திருக்கும் கமலம், செங்கழுநீர் மலர்களிலிருந்து மதுவானது ததும்பி வெள்ளமாய் ஒழுக, உழவர்களோர் மடையடைக்கின்றனர், முழவின்ஒலி, வண்டினங்கள் ஒலி, மறையொலி, மடவார் சிலம்பொலி, கடல்ஒலி எனப் பல்வகை ஒலிகள் திகழ்கின்றன.[73] இவ்வாறு நாங்கூர் செல்வ நிலநீர் வளங்களில் சிறப்படைந்திருந்ததை ஆழ்வார் சுவைபட வருணிக்கிறார்.

திருவரங்கத்தின் இயற்கை அழகினைச் சுவைத்த ஆழ்வார் அத்தலத்தின் செல்வ நீர்ச் சோலை வளங்களை வருணிக்குமாறு இச் சுவையை நமக்கு ஊட்டுகிறார். அழகிய சோலைகளை உடையது திருவரங்கம் செம்பொன்னோடு ஒத்த மதிள்களால் சூழப்பட்டது. மேகமண்டலத்தை அளாவி இருக்கின்ற மாளிகைகளை உடையது அம்மாளிகை களில் இருந்து உண்டான அகிற்புகையும், அந்தணர்கள் செய்யும் யாகங்களால் உண்டான அகிற்புகையும், அந்தணர் கள் செய்யும் யாகங்களால் உண்டான ஓமப்புகையும் பரிமளிக் கின்றன. சந்தன மரங்களையும், நவமணிகளையும் கொழித்துத் தள்ளிக்கொண்டு வந்து திருவரங்கனைக் காவிரி மகள் சேவிக்கிறாள். யானைத் தந்தங்களையும், மூங்கில் முத்துக்களையும் ரத்னங்களையும் தள்ளிக்கொண்டு. சோலை களில் புகுந்து லீலைகள் செய்தலால் மதுவோடுகூடிப் பெருகும் இந்நதியினை வண்டுகள் வந்து மொய்த்தவண்ணம் இருக் கின்றன. இக்காவிரி நதியில் முலைகளில் குங்குமச்சேறு பூசிய மாதர்கள் வந்து நீராடுகின்றனர், அதனால் நீரின் நிறம் மாறிக் கலங்கி ஓடுகிறது.

அரங்கத்தின் பொழில் நீர் வளத்தை,

> **"தெள்ளூரும் இளந்தெங்கின் தேறல் மாந்திச்**
> **சேலுகளும் திருவரங்கம்"[74]**

எனப் பாடுகிறார்.

திருவழுந்தூர் தாமரை மலர்களின் மேல் வரிவண்டு இசைபாட அன்னம் பெடையோடு உடனாடும் வயல்கள் சூழ்ந்தது; அம்மலர்கள் மலர்ந்து மலிந்துள்ள அழகிய பொய்கைகளுடையது; மாதர்கள் கூந்தலுக்கிடும் அகிற்புகை முகிலை மறைக்க கரும்பினதாலைப் புகையோ அழல் கதிரை மறைத்து விடுகின்றதாம்.[75]

இவ்வாறு தாம் அனுபவித்த அத்தலத்து வயல் செல்வ வளங்களை நம்மையும் அனுபவிக்கச் செய்கிறார் திருமங்கை யார்.

திருக்கண்ணபுரத்தின் மதிள்சிறப்பு, சோலைவளம், செல்வ வளம், நீர்வளம் ஆகியவற்றைக் கீழ்வரும் ஆழ்வார் பாசுரவரிகள் மூலம் உய்த்துணர்ந்து அவரது கவித்துவத்தின் சிறப்பினைக் காணலாம்.

**"கனஞ்செய் மாமதின் கணபுறம்"**

**"கன்னிமா மதில்புடைசூழ் கண்ணபுரம்"**

**"கடிக்கமலம் கள்ளுகக்கும் கண்ணபுரம்"**

**"கள்ளவிழ் சோலைக் கணபுரம்"**

**"கருமா முகில்தோய் நெடுமாடக் கண்ணபுரம்"**

**"கூரார் ஆரால் இரைகருதில்**
**குருகு பாயக் கயலிரியும்**
**காரார் புறவில் கண்ணபுரம்"[76]**

திருமாலிருஞ்சோலையில் சோலையழகை ஆழ்வார் பலவாறு வருணிக்கிறார்.

**"சினைவளர் பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலை"**

**"தேனமர் பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலை"**

**"பூம்பொழில்சூழ் திருமாலிருஞ் சோலை"[77]**

திருமாலிருஞ்சோலை அருவிகள் நிறைந்தது அவை சந்தம், மணி, பீலி தழைகளைக் கொணர்ந்து வந்து இழிகின்றனவாம். இத்தலத்திலுள்ள வேங்கை, கோங்கு, குறிஞ்சி மலர்களிலிருந்து இழியும் தேன் வார்புனலோடு கலக்கிறது.[78] இவ்வாறு திருமாலிருஞ்சோலையின் சோலை, நீர்வளங்களை ஆழ்வார் தனது கவித்திறன் சிறக்கப்பலவாறு வருணித்துப் பாடுகிறார்.

திருவாலி, திருநறையூர்களின் பொழில் வளத்தை,

**"வளம்பாரர்பூ வயலாலி"**

**"வளபொழில்சூழ் திருநரையூர்"[79]**

எனப் பாடிப் பரவசமுறுகிறார் ஆழ்வார்.

ஆழ்வாரின் திருத்தலங்களின் இயற்கை அழகு வருண நில, நீர், பொழில், செல்வ வளமெனப் பொதுவாக ஒரே மாதிரி ஒத்தமைகின்றது என்றாலும் எண்பத்தாறு திருத்தலங் களைச் சென்று சேவித்துப் பலவாறு அவற்றைப் பக்தியொடு கவித்துவம் கலையாறு வருணித்துப் பாடும் ஆழ்வாரது கவித்திறம் மிகவும் பாராட்டப்படக்கூடியதாகும். எண்பத் தாறு திருத்தலங்களின் இயற்கை அழகினை வருணிக்கப் புகும்போது, பெரும்பாலும் அவற்றின் நிலநீர் சோலை செல்வ வளங்களே வருணிக்கப்பட்டிருத்தலாலும் திருத்தலங் களின் எண்ணிக்கை அதிகம் என்பதாலும் திருத்தல இயற்கை அழகு வருணனையில் பொதுவாய் ஒற்றுமை இருக்கிறது

## 5-6. சொல்நயம்

புனைந்துரை வருணனையில் மட்டுமன்றிச் சொற்களை— சொல் தொடர்களை நயத்தோடு—கவித்திறனோடு அமைப் பதிலும் தாம் வல்லவர் என்பதை ஆழ்வார் காட்டிக் கொள்கிறார்.

துன்பம் வந்தபோது, அதனை நீக்கிக்கொள்ளவோ, மோட்சம், பெரும் செல்வம் வேண்டுமென எதிர்பார்த்தோ இல்லாதவனுக்காக அவனிடத்தில் அன்பு செலுத்தி உண்ணும் சோறு, தின்னும்வெற்றிலை, பருகும் நீர், இழுக்கும் மூச்சு எல்லாம் மாலவனே என எண்ணெயின் ஒழுக்கு இடையறாது இருப்பதுபோல் இடையறாது அவன் சிந்தையாய்—உள்ளம் உருக—விழிநீர்கசிய மயிர்க்கூச்செறிய ஆடிப்பாடிப் பித்தர் போல் வாழும் உண்மை பக்தருக்கு அவனே ஆவி; அவனே வாழ்வு; அவனே அனைத்தும் எனப் பக்தர் தம் பக்திச்சீரினை ஆழ்வார் ஒரே ஒரு சொல்லைப் பயன்படுத்தி விளக்கி விடுகிறார்.

"பத்த ராவியை"[80]

இறைவனைக் கல்லாகக் காண்போருக்கு அவன் கல்; தெய்வமாய் உணர்வோருக்குத் தெய்வமாய் அவன் காட்சி

தருகிறான். இது இறைத்தத்துவம். அன்னை ஒருத்திக்கு அவளை நம்பும் நல்மகனும், அவளை எண்ணாது தன்னிச்சைப் படி செயல்படும் மகனும் இருக்க, அத்தாய் தனை எண்ணாது அவனிச்சைப்படி இருக்கிறானே எனச் சினந்து அவனைப் பழி தீர்க்கமாட்டாள். அப்படியே அண்டமாளும் அன்னையாம் பரமனும் தனை கல்லாய் காண்போருக்குக் கல்லாய், கடவுளாய் உணர்வோருக்குக் கடவுளாய் இன்னும் அவர்கள் எப்படியெலாம் எணணுகிறார்களோ, அப்படி யெலாம் காட்சிதருகிறான். தனை வணங்கவில்லையே என அவன் எவரையும் ஒறுப்பதில்லை; வெறுப்ப தில்லை; ஆனாலும் தனைநோக்கி ஓரடி வைக்கும் மழலை யிடம் ஒன்பதடி வைத்து ஓடோடி வந்து அள்ளிக் கொள்ளும் தாயாய் அவனும் அவனை வணங்கும் ஆத்மாக்களுக்கு ஓடோடி வந்தருள்கிறான். பக்திக்குத் தானே இஷ்டப்பட்டு கட்டுப்படுகிறான்; அன்பெனும் பிடியுள் அகப்படுகிறான். தன் பக்தனுக்குக் கரும்பாகக் கனியாக அமுதாக இனிக்கின்ற வனாக இருக்கிறான். பக்திப்பித்தான ஆழ்வார் தம் அனுபவத்தை முதல் வைத்து இந்த இறைத் தத்துவத்தை ஒரே ஒரு சொல்—சொல் தொடரால் காட்டிச் செல்கிறார்.

"...அமு தம்பொதி யான்சுவைக்
கரும்பி னைகனியை"
"அமுதத்தை"[81]

ஞானஒளி பெறாது மாய இருட்டில் உழன்றுகொண்டு—தன் உண்மை சொரூபத்தை மறந்து உண்பது உடுப்பது உறங்குவது எனச் செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்து அத்தைத் தின்று அங்கேயே கிடக்கின்றது சீவாத்மா. இருட்டில் உலவும் நிழல்களைப் பிடித்திழுத்து வெளிச்சங் காட்டி அவற்றின் நிஜங்களை உணர்த்த இறைவன் தானே அவதரித்தும் தன் திவ்யாயுதங்களை அவதரிக்கச் செய்தும் பலவாறு முயல்கின்றான் இவ்வாறு பரமாத்மாவே சீவாத்மா வுக்கு விளக்காக விளங்கி—உண்மை சொரூபம் விளங்க

வைத்து அதனைத் தன்னுடன் சேர்த்து இன்பம் அளிக்கிறான். இதனை ஆழ்வார் பயன்படுத்தும் ஒரு சொல் நயத்தோடு விளக்கிச் செல்கிறது.

**"மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை"**
**"விளக் கின்ஒளி தன்னை"[82]**

பரமாத்மாவுக்குச் சொந்தமான சீவாத்மா மாயையில் மூழ்கி உண்மைநிலை மறந்து தனைச் சர்வ சுதந்திரனாய் எண்ணித் தன்னிச்சைப்படி நடக்கிறது. பக்தி சரணாகதி எனும் அரும்படிகள் சீவாத்மாவை அதன் இயல்பான பரமாத்மாவோடு சேர்ந்திருக்கும் நிலைக்குக் கொண்டு சேர்க்கின்றது. ஆழ்வார் தமை இறைவன் தானே வலிய வந்து ஆட்கொண்டு, அவரைத் திசைதிருப்பி ஆண்டமையை அவன் தமையாண்ட தமது வாழ்வு நிகழ்வையும் அதனோடு சீவாத்மாவின் உண்மை நிலைத் தன்மையையும் ஒரே ஒரு சொல் தொடரால் அழகாகப் படம்பிடித்துக் காட்டிச் செல்கிறார்.

**"காதல்செய் தென்னு ள்ளங் கொண்ட**
**கள்வனை[83]**

எம்பெருமான் பல்வேறு உருவினன்; பலநாமமுடையவன். மாயையில் உழலும் கீழ் மக்களுக்காக—அதருமத்தை அழித்து நிலைநாட்ட இந்நிலவுலகில் வந்து அவதரித்தவன். அதனால் இராமன் என்றும் கிருஷ்ணன் என்றும் பெயர் பல கொண்டவன்.

தனது உணர்வினை மறைத்து உயிர்கள் மீதுள்ள கருணையால் நிலவுலகில் வந்து தனது சௌலப்யம் தோன்ற அவதரித்தவன். நிலவுலகு அவதாரத்திலும் அவனது ஸ்வாமித்துவம் வெளிப்படுமாறு பல்வேறு லீலைகள் புரிந்தவன். பிறப்பிலியானாலும் கருமமாகிய வினையால் வரும் பிறவி அன்றித் தனது இச்சைப்படி வந்து அவதரித்தவன். இவ்வாறு முழுமுதற் பொருளாய் விளங்கும்

அவனது அவதார ரகசியம் தோன்றும்படிக்கு அவனை ஸ்வாமித்துவ சௌலப்ய திருக்கல்யாண குணங்கள் விளங்கும்படிக்கு ஆழ்வாரின்,

**"பேரு மாயிரம் பேச நின்ற**
**பிறப்பிலி"[84]**

எனும் சொல்தொடர் விளக்குகிறது.

'கரியன்' எனும் ஒரே ஒரு சொல்லை அமைத்து இருவேறு பொருள்களுடன் ஆழ்வார் அதைப் பயன்படுத்தும் விதம் அவரை ஒரு சிறந்த கவிஞராக ஏற்கவைக்கிறது.

**"...அவனுக்கு முணர்வதனுக்**
**கரியானை அழுந்தூர் மறையோர்கள் அடிபணியும்**
**கரியானை''[85]**

எவரும் உணர்வதற்கு அரியன்; அவனே மறையோர் பணியும் அழுந்தூர்க் கரியான் என ஒரு சொல் வைத்து இரு பொருள்பட வைத்து விளையாடுகிறார்.

**"ஒன்றுமா கடலுருவம்"[86]**

கண்டார்க்கு விடாயைத் தீர்க்குமதாயிருக்கையும், துஷ்ட ஜந்துக்களோடு நல்ல ஜந்துக்களோடு ரத்னம் முதலியவற்றோடு வாசியற ஸகல பதார்த்தங்களையும் தன்னுள்ளே இட்டு வைத்து ரஷிக்கையும் கடலின் ஸ்வபாவமாகக் காணுகின்றது; அப்படியே எம்பெருமானுடைய ஸ்வபாவத்தைப் பார்த்தால், ஆச்ரிதர்களுக்குத் தாபத்ரயஹரமாயும், ஆச்ரயித்தாரைத் தன்னபிமானத்தாலே இட்டுவைத்து ரஹிக்குமதாயுமிருக்கை தோற்றுவிக்கும்.[87] இவ்வாறு இறைவனைக்கடலோருருவம் என ஆழ்வார் விளிக்கும்சொல் நயமிக்கது.

எம்பெருமான் தனைப் 'பொன்னானாய்!. என்று ஆழ்வார் விளிக்கின்றார். இறைவனைப் பொன்போன்றவனே! என ஆழ்வார் விளிக்கையில் அச்சொல்பொருத்தம் எண்ணி எண்ணி வியத்தற்குரியது.

பொன் சுடுவதால்—வெட்டுவதால் இப்படி எத்தனை இம்சைகள் செய்யினும் அது எவ்வித வருத்தமும்படாது. ஆனால் மிக அற்பமானதொரு குன்றுமணியொடு அதை நிறுப்பதால் அது வருத்தமுறலாம், அதுபோல் எம் பெருமானும் தாம்பால் கட்டல், தூதனுப்பல் ஆகியவற்றால் வருத்தமுறாதவன். ஒத்தார் மிக்காரை இலையாய அவன் ஒவ்வாத சிலவற்றோடு தன்னை ஒப்பிடுகையில் வருத்தப்படு கிறான். பொன்னானது தன்னைப் பெற்றவர்களையும் பெற விருப்பம் உடையவரையும் இரவும் பகலும் கண்ணுறங்காது செய்யும் எம்பெருமானும் காண்பதற்கு முன்பு முமுட்சுக்களை உறங்கவொட்டான்; கண்டபின்பும் நித்யமுகதர்களை உறங்கவொட்டான்.

பொன்னானது தன்னை இழந்தவனைக் கதறி கதறி அழப்பண்ணும்; எம்பெருமானும் அப்படியே. சான்று இராமவ தாரத்தில் பரதன் அழுததைக் கூறலாம்.[88]

இறைவனை ஆழ்வார்,

**"என்னானாய்."**[89]

என யானையாகக் கூறுகிறார். என் ஆனாய் என விளிக்கும் இச்சொல் பொருத்தமாய் அமைந்து ஆழ்வாரின் கவிநலத்திற்குச் சான்றாக விளங்குகின்றது யானையானது எத்தனை தடவை பார்த்தாலும் பார்க்கும்போது எல்லாம் அபூர்வமான பொருளாகவே இருந்து இன்பம்தரும். 'எம் பெருமானும் அத்தன்மையானவன். யானையின் மீது ஏறவேண்டியவன் அதன் காலைப்பற்றி ஏறவேண்டுவது போல், எம்பெருமானிடம் சேர விரும்புபவர்களும் அவனது திருவடியே பற்றவேண்டும். யானையானது தனைக்கட்டிப் போடத் தானே கயிறு எடுத்துத்தரும்; இறைவனாகியமாலும் தன்னைக் கட்டுப்படுத்தும் பக்தி கயிற்றைத் தானே தந்தருளு வான். யானையை நீராட்டினாலும் அடுத்த நேரம் அழுக் காகவே இருக்கும்; இறைவனும் அழுக்குப் போன்ற இவ்வுயிர் களோடு சேரவே திருவுளம் கொண்டு இருப்பன்; யானையைப்

பிடிக்க பெண் யானையைக் கொண்டே பிடிக்கவேண்டும். பிராட்டியின் புருஷகாரமின்றி அவனும் வசப்படான். யானை பாகனுடைய அனுமதியின்றித் தன் பக்கலில் வருபவர்களைத் தள்ளிவிடும் எம்பெருமானும் பாகவதர்களை முன்னிட்டுப் புகாதவரை அங்கீகரித்தருளான். யானையின் மொழி யானைப்பாகனுக்குத் தெரியும். எம்பெருமானுடைய மொழி திருக்கச்சிநம்பி போல்வார்க்கே தெரியும் யானையினுடைய நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் முதலிய தொழில்கள் யாவும் பாகன் இட்டபடி இருக்கும்; இறைவனும் பாகவதரின் மனசுக்கேற்றபடி நடந்தருள்வான். யானை உண்ணும்போது இறையும் அரிசி பலகோடி எறும்புகட்கு உணவாகும்; எம்பெருமான் அமுதுசெய்த பிரசாதமும் பல கோடி பக்தர்களை வாழச் செய்கிறது. யானைக்கு கைநீளம்; எம்பெருமானும் அலம்புரிந்த நெடுந்தடக்கையன் ஆவான். கருமுகில் போன்ற அருள்பொழியும் திருக்கையனே. யானை இறந்தபின்பும் உதவும்; எம்பெருமானும் திருஅவதாரம் செய்து பின் தன்சோதிக்கு எழுந்தருளின பின்பும் இதிகாசம், புராணங்கள், அருளிச் செயல்கள் மூலமாகத் தனது சரிதைகளை உணர்த்தி உதவுகின்றான். யானைக்கு ஒரு கையே உளது. எம்பெருமானுக்கும் தரும் திருக்கைகளே தவிர வாங்கும் கைகளிலை; பாகனுக்குச் சம்பாதித்துக் கொடுக்கும் யானை; எம்பெருமானும் இவ்வாறே அர்ச்சக பரிசாரகர்களுக்கு அருள்கிறான். இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்களும் உண்டு.[90]

ஆழ்வார் இறைவனைப் பக்திமீதூர குறுங்குடியுள் முகிலை என விளிக்கிறார். இன்ன மலையிலே மேகம் படிந்தது என்றால் மழை தப்பாது என்றிருக்குமாபோலே. திருக்குறுங்குடியிலே நின்றான் என்றால் ஓலனமெல்லாம் உய்யும்படியாம் என்னலாம், ஒருகால் தோன்றி பொழிந்து விட்டு நின்றுவிடும் மேகம் போலன்றி சாஸ்வதமாய் நிற்கும் மேகமென்பது தோன்ற ஈண்டு சொல்லினை ('உள்முக')[91] பயன்படுத்தும் நயம் பாராட்டத்தக்கது.

'விளக்கொளியை' என இதே பாடலில் மேலும் அவனை ஆசை மீதூர விளிக்கிறார். விளக்கின் ஒளியானது எப்படி வெளிச்சத்தை உண்டாக்கிப் பதார்த்தங்களை விளங்கச் செய்யுமோ அப்படி ஸ்வஸ்வரூபம், ஜீவாத்மஸ்வரூபம், உபாயஸ்வரூபம், விரோதி ஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம் ஆகிய அர்த்த பஞ்சகத்தையும் தனக்கு விளங்கச் செய்து அருளினவன் என்றாராதிக்கின்றார்.[93]

'கடல்கிடந்த கனியே'[94] என அடுத்த பாசுரத்தில் இறைவனை விளிக்கிறார். கனியானது கண்டபோதே நுகரத்தக்கதும் பண்பாளரைப் பெறாதபோது அழிந்து போவதுமாயிருக்கும்; இறைவனும் தன்னை அனுபவிப்பார் தேட்டமாய் அவர்களைப் பெறாதபோது தான் அழியும்படியா யிருக்கும் தன்மையனாகின்றான்.[95]

ஆழ்வார் நாயகி தனை அவன் எப்படியெல்லாம் செய்தான் என்பதைத் தோழியிடம் தெரிவிக்கும்போது,

**"இலங்கொலிநீர்ப் பெரும்பௌவம் மண்டி யுண்ட**
**பெருவயிற்ற கருமுகிலே யொப்பர் வண்ணம்"[96]**

என்கிறாள்.

பரகாலநாயகி, தன்னைப் பெருங்கடலாகவும் அவனைக் காளமேகமாகவும் கருதி இவ்வாறு கூறுகிறாள். மேகமானது கடலின் நீரை கவர்ந்துசெல்வதுபோல அவனும் தனது அழகு, மனஅமைதி, மகிழ்வு ஆகியவற்றை ஒன்றுமில்லாதவாறு கவர்ந்துகொண்டுவிட்டான் எனும் பொருள்படுமாறு பாடுவது ஆழ்வாரின் கவிநயம் காட்டுகிறது என்றல்லாது வேறேதும் கூறலாகாது.

பரகாலநாயகி தனது நாயகனிடம் வண்டினைத் தூது விடுக்கிறாள்.

**"அறுகால சிறுவண்டே! தொழுதேன் உன்னை "[97]**

வண்டுக்கு ஆறுகால்கள் அமைந்து இருப்பது இயற்கை. ஆனால் ஆழ்வார் அதனை விசேஷமாகக் குறிப்பிட்டு பாடி வண்டே என் தலையால் உன்னைத் தொழுகின்றேன். என்

தலையிலே வைப்பதற்கு ஆறுகால்கள் உண்டாகப் பெற்றாயே! எனத் தூது சென்று மீண்டு வந்தால் வண்டின் கால்களைத் தன் தலைநிறைய வைத்துக்கொண்டு கூத்தாட இருப்பதைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

அவனது திருக்கைகளின் ஆற்றலைக் காட்ட எண்ணிய ஆழ்வார்,

**"கரிமுனிந்த கைத்தலமும்"[98]**

எனப் பாடுகிறார். கிருஷ்ணாவதாரத்தில் கம்சனால் ஏவப்பட்ட மதம் பொருந்திய குவலயாபீடம் என்கிற யானையைக் கோபம் கொண்டு அழிந்தொழித்த திருக்கைகளை உடையவன் என ஓர் அவதாரத்தின் நிகழ்வையே ஈண்டு ஒரு சொல்லால் காட்டும்மழகு பாராட்டத்தக்கது.

இறைவனைத் தன் உறவாக—உயிராக—வாழ்வாக—தன்னையே அவனாக உணர்ந்து வாழ்ந்த ஆழ்வாரின் அவனை விளிக்கும் சொற்களில்—விளிகளில் அவ்வுணர்வுகள் வெளிப்படையாகக் காணப் பெறுகின்றன.

**"வம்பார்பூ வயலாலி மைந்தா!"**
**"மாகீண்ட கைத்தலத்தென் மைந்தா!"**
**"அணியழுந்தூர் நின்றுகந்த அம்மான்"**
**"வடதிருவேங் கடம்மேய மைந்தா"**
**"வென்றசுரர் குலங்களைந்த வேந்தே"**
**"துன்னு குழல் கருநிறத்தன் துணையே"**
**"அப்பனை"**
**"ஆவியை"**
**"மைந்தனை"[99]**

தனது மைந்தனாக—வேந்தனாக—துணையாக எல்லாமாக எம்பெருமானைக் காணும் ஆழ்வாரது பக்தி பரவசப் பட்டதாகும்.

ஆழ்வார் தனது கவித்திறத்தால் ஒரு சில சொற்களைக் கொண்டே தனது பக்தியினை—தான் சொல்லவரும்

கருத்தை வெளியிட்டு பக்தனாக—பா கவிஞனாகப் பரிமளிக்கிறார் ஆழ்வார்.

"சீரார் திருவடி"
"நெடுங்கயிற்றால்"[10]

மேன்மையானவர்களது சென்னிக்கு ஆபரணமாக அமையவேண்டிய சிறப்பு பொருந்திய தனது திருவடியை ஒரு தீய நாகத்தின் தலையில் கொண்டு வைத்தானே! என வயிற்றெரிச்சலும், ஐயோ! ஈண்டு அவனையே கதியாக நினைந்து இருந்தும் அத்திருவடி நமக்குக் கிடைக்காது பாழ்நாகத்திற்கு--எதிரியாகப் போரிட்ட அந்நாகத்திற்கு வாய்க்கப்பெற்றதே! என ஒருவித ஏக்கமும் தோன்ற இரு சொற்களை ஆழ்வார் ஈண்டு ஆளும்விதம் பாராட்டுதற்குரியதாம். எம்பெருமான் பக்தி இப்படியெல்லாம் அவரைப் பேச வைக்கிறது.

எம்பெருமானாகிய பரம்பொருள் செய்யும் லீலைகளால் கோபமுற்ற யசோதை அவனைக் கயிற்றில் உரலோடு கட்டுமாறு சௌலப்யனாக அவனிருந்த இருப்பைப் பேச வந்தவர், யசோதை அவனை 'நெடுங் கயிற்றால்' கட்டியதாகக் குறும்பாகவும், அதே நேரம் அக்கயிற்றின் பெருமை தோன்றும்படியும் கவித்துவம் குறையாது பேசுகிறார்.

அடிக்கடி இறைவன் தன்னை யசோதை கட்டுகிறாளெனக் கயிறுகளை எல்லாம் துண்டு துண்டாக அறுத்து விடுவானாம். யசோதை ஆங்கிருந்த அச்சிறிய கயிறுகளாலேயே அவனைக் கட்டுகிறாளாம். சிறிய கயிறானாலும் அதற்கேற்ப கண்ணன் தன் மேனியைச் சுருக்கி அவன் தனைக் கட்ட இடம் அளிக்கிறானாம். இப்படிச் 'சிறிய கயிறு' என்பதை நெடுங்கயிறெனக் குறும்பாகவும். அவனது மேனியில் பட்டதால் பெருமை வாய்ந்த கயிறு என நெடுங்கயிறு எனவும் பாடுகிறார். ஆழ்வாரின் பக்திவித்து அவனைக் கட்ட உதவிய கயிற்றையும் பெருமைப்பட பேசும்படி செய்கிறது.

**"ஆரார் அயில்வேற்கண் அஞ்சனத்தின் நீறணிந்து**
**சீரார் செழும்பந்து கொண்டடியா நின்றேன் நான்"**[101]

இங்கு உள்ளுறையாகச் சமுசாரத்தில் மூழ்கி இருந்த தன்னை எம்பெருமான் ஆட்கொண்டு அருளியதாகக் குறிப்பிடுகிறார்.

பந்து கீழே விழுவதும் மேலே எழுவதுமாயிருப்பது போலச் சேதனன் தான் செய்த கருமங்களுக்கேற்ப மேலுலகங்களில் போவதும், திரும்புவதுமாய் இருக்கின்றான். பகவத்விஷயமே அறியாமல் ப்ராக்ருத பதார்த்தங்களிலே மண்டிப் பொழுதுபோக்கிக் கொண்டிருந்த வேளையிலே இறைவன் என்னை ஆட்கொண்டு திசை திருப்பினான் என்கிறார்.

பந்து கீழே விழுவதும் மேலே எழுவதுமாயிருக்கிறது போல் ப்ரக்ருதியும் அஜ்ஞனாய் அசக்தனான சேதனன் தான் செய்த கருமங்களுக்கேற்ப மேலுலகங்களில் போவதும் திரும்புவதாம்படி ஈச்வரன் தான் விளையாட்டுக்காகத் தன் ஸங்கல்பத்தாலே ப்ரேரிக்க தாழவிழுந்தும் உயரவெழுந்தும் சக்ரப்ரமம் போலே சுழன்றும் போகுகிற ஆத்மாவோடுண்டான ஸம்பந்தத்தினாலே தானும் விழுந்தெழுகை முதலான ஸ்வபாவங்களோடு கூடியதாயிருக்கும் ஆகவே ஸ்வாபதேசத்தில் பந்து என்று பிரக்ருதியைச் சொல்லக் குறையில்லை.[102]

ஈண்டு 'பந்து' என்ற சாதாரண ஒருசொல் அரிய தத்துவப்பொருளை விளக்குமாறு நயத்தோடு கூறிச் செல்கிறார் ஆழ்வார் திருமங்கை.

**" .. தன் சீதைக்கு**
**நேராவன்என் றோர் நிசாசரிதான் வந்தாளை**
**கூரார்ந்த வாளால் கொடிமூக்கும் காதிரண்டும்**
**ஈரா விடுத்து—அவட்கு மூத்தோனை வெங்கரம்**
**சேரா வகையே சிலைகுனித்தான்"**[103]

காளை இராமபிரான் அவனை நகரத்திற்குப் போக வொட்டாது சுவர்க்கத்திற்குச் செல்லுமாறு சிலை குனித்தார் என இதற்கு நேர்பொருள் தோன்றினால் கவித்திலகமான ஆழ்வார் கூறும் உண்மைப்பொருள் இதனினும் மாறுபட்ட தாகத்தான் இருக்கவேண்டும் எனத் தோன்றுகிறது.

வளைந்த வில்லும் கையுமாய் நின்ற பெருமாளைக் கண்ட சுரன் நாம் மேலே போய் வேறொரு நரகவேதனை அநுபவிக்கவேண்டா; எல்லா நரகவேதனையும் நமக்கு இங்கு அனுபவித்தாயிற்று என்று குடல் மறுகும்படி போர்க்களத் திலே அவனைப் படாதபாடுபடுத்தினானாம்.

"சிலை குனித்தான்"[105]

என்றது சீதைக்காக இராவணனைக் கொன்று ஒழித்தபடியை மங்கலவழக்குத் தோன்ற இப்படிப் பாடுகிறார். தான் சிறந்த கவிஞானபடியால் ஆழ்வார் இந்த மங்கலவழக்கு மாறாது சொற்களை அமைத்துப்பாடும் திறம் பாராட்டத்தக்கது.

"கற்போர் புரிசைக் கனக மாளிகை"[106]

"கற்போர் புரி செய்"

என்றவிடத்து இருவகை பொருள்படுமாறு பாடப்பட்டுள்ளது. அதாவது புரிசெய், புரிசை என்ற இருவகையாகப் பார்க்க லாம். புரி என்ற வடசொல் நகரமெனப் பொருள்பட' புரிசெய் என்பது கற்போர்களுடைய புரியாகக் கொள்ளப்படு கிறது. ''தொழில் ஓரப்படா நின்றுள்ள மதிள்களையுமுடைய தாய்" என்பதாய் புரிசை எனக் கொள்ளலாம்.

''கற்புஓர் புரிசை" என்று பிரித்து, நல்ல வேலைப்பாடு களையுடைய திருமதில்களையுடைத்தானது எனலாம்.

இப்படி ஒரு சொல்லை இருபொருள்பட அமைத்தத் திறம் பாராட்டிற்குரியது

"ஆடரவமளியில்"[107]

எம்பெருமான் எப்போதும் தன்னோடு அணைந்திருக்கப் பெற்றதனால் மகிழ்ச்சிக்குப் போக்குவீடாகப் படமெடுத்தாடுவான் திருவனந்தாழ்வான் என்பதை 'ஆடு அரவு' எனும் ஓரே சொல்லில் அடக்கிவிடும் பாங்கு குறித்தற்குரியது. ஈண்டு ஆழ்வாரின் 'இறை தன்னோடு அணைந்து, தனக்கு அருளவில்லையே' என்னும் ஏக்கம் பளிச்சிடுகிறது.

ஆழ்வார் இறைவனை விளிக்கும் விளிகளில் தமது கவிநலன்—பக்தி மனம் விளங்குமாறு பாடிச் செல்வது பரவசப்படுத்துகிறது. ஆழ்வார் இறைவனை மனம் உருகி விளிக்கும் பக்தி நிலையில் தமிழினை நாட்டியமாடவிடுகிறார்.

> **"நிதியினைப் பவளத் தூணை,**
> **நெறிமையால் நினைய வல்லார்**
> **கதியினை"**
> **"மதியினை, மாலை"**
> **"கோவினைக் குடந்தை மேய**
> **குருமணித் திரளை இன்பப்**
> **பாவினைப் பச்சைத் தேனைப்**
> **பைம்பொன்னை, யமரர் சென்னிப்**
> **பூவினை"**[108]

## 5. 7. உள்ளுறை

ஆழ்வார் தம் பாசுரங்களை மேலோட்டமாக அன்றி ஆழ்ந்து கற்கும்போது அவர்தம் பாசுரங்களில் ஆண்டுக் காணப்பெறும் சொற்கள் ஆழ்ந்த பொருள்கொண்டு விளங்குதலையும் உள்ளுறைப் பொருள்கள் ஆங்காங்கு ஒளிந்திருத்தலையும் காணமுடிகின்றன.

ஆழ்வார் பரகாலநாயகியாகி இறைவனிடம் வண்டையும், நாரையையும் தூதாக விடுக்கும்போது, வண்டை நோக்கி'

"தேமருவு பொழிலிடத்து மலர்ந்து போதைத்
தேனதனை வாய்மடுத்துன் பெடையும் நீயும்
பூமருவி யினிதமர்ந்து பொறியிலார்ந்த
ஆறுகால சிறுவண்டே! தொழுதேன் உன்னை"[109]

என்றும், நாரையை நோக்கி,

''செங்கால் மடநாராய்!.........
.........................
..............................
..................காளும்
பைங்கானம் ஈதெல்லாம் உனதே யாகப்
பழனமீன் கவர்ந்துண்ணத் தருவன் தந்தால்
இங்கேவந் தினிதிருந்துன் பெடையும் நீயும்
இருநிலத்தில் இனிதின்ப மெய்த லாமே''[110]

என்றும் பாடுகிறார்.

சோலையில்—மலரின் தேனைத் தன் பேடையோடு அருந்தி புணரும் வண்டே என்றது பூவைக் கண்டால் அருவருத்தும் போக்ய பொருட்களில் வெறுப்புண்டாகியும் மேனிநிறம் அழிந்தும் நின்ற என்னையும் உனைப்போல் ஆக்கவேண்டாவோ? நானும் என் துணைவனோடு கலந்து வாழும்படி நீ காரியமாற்ற வேண்டாவோ என்பதற்காக வாம். அதாவது ஸ்ரீவைணவர்களை வண்டாகச் சொல்லு வது வழக்கமாயிருப்பதால் ஆழ்வார் அவர்களை நோக்கி, ''நீர் எம்பெருமான் திருவடிகளிலே புருஷகாரஞ்செய்து அடியேனையும் உம்மைப் போன்று பாகவத அனுபவம் நித்யமுமாய் செல்லுமாறு ஆட்படுத்த வேணும் என்று பிரார்த்திக்கிறார் என, உள்ளுறையாகப் பொருள்கொள்ளு மாறு தம் அறிவு நலம் கலந்த பக்தி நலத்தோடு பாடுகிற ர்.

நாரையைத் தூதுவிடுக்கும் தம் காரியம் நல்லபடி நிறை வேற்றவேண்டி ஆழ்வார் அன்போடு செங்கால் மடநாராய்

என விளிப்பது உலக வழக்காகும். நாயகி நான் சொன்ன காரியம் முடித்துவரின் பழனமீன் நாரைக்குத்தான் கவர்ந்து உன்னை தருவன் என்கிறாள். நாரைக்கு மீன் எப்படி இனிதோ அப்படி ஆசாரியனுக்கு இனிதான பொருளைத் தந்து வணங்குவதாய் குறிக்கிறாள். எனை என் துணையோடு சேர்த்துவிடுமாறு நீ செய்திரு; நீ உன் துணையோடு இனிது வாழ்ந்திருக்க நானுதவி செய்கிறேன் என்பதாம்.

"இருந்தண் மாநிலம் ஏனம தாய்வளை
மருப்பினி லகத்தொடுக்கி
கருத்தண் மாகடல் கண்துயின் றவனிடம்
கமலநன் மலர்தேறல்
அருந்தி, இன்னிசை முரன்றெழும் அளிகுலம்
பொதுளியம் பொழிலூ டே
செருந்தி நாள்மலர் சென்றணைத் துழிதரு
திருவயிந் திரபுரமே"[111]

வராக அவதாரம் எடுத்து மாநிலத்தை மீட்டுக்கொண்டு வந்தவனும், திருப்பாற்கடலில் திருக்கண் வளர்ந்தருள் பவனுமான இறைவன் உறையுமிடம் திருவயிந்திரபுரம். இத்திருத்தலத்தில் பலபல சோலைகளுள; அவற்றில் திரள் திரளாக வண்டுகள் புகுந்து மதுவைப் பருகிக் களித்து, அக்களிப்புக்குப் போக்குவீடாக இனிய இசைகளைப் பாடிக் கொண்டு உலாவருகின்றன. அவ்வாறு உலாவருகையில் பூக்களின் தேனையும் பருகிச் செல்கின்றனவாம்.

"உளங்கனிந்திருக்கும் அடியவர் தங்கள் உள்ளத்துள் ஊறிய தேன்" எனப்படும் பகவத் விஷயமாகின்ற மதுவை விரும்பியும் 'போந்ததென் நெஞ்சென்னும் பொன்வண்டு உனதடிப்போதில், தண்சீரார் தெளிதேன் உண்டு அமர்ந்திட வேண்ட (இராமநுசர் நூற்றந்தாதி நூறு) என்கிறபடியே ஆசாரிய பாதார விந்த மதுவைப் பருகுதலையே விரதமாக

உடைத்ததாயும் மேல்நோக்கிச் செல்வதற்குச் சாதனமாகிய இரண்டு சிறகுகள் போன்ற கர்ம ஞானங்களை உடையராகி யும் ஸராக்ராகிகளாயுமிருக்கின்ற ஸ்ரீ வைணவர்களை வண்டாகச் சொல்வது வழக்கம். அப்படிப்பட்ட ஸ்ரீவைணவர் கள் பகவத்பாகவத போக்கியதைகளை அநுபவித்த ஆனந்தத் திற்குப் போக்குவீடாகப் 'பண்கள் தலைகொள்ளப்பாடி' (திருவாய் 3-5:2) என்கிறபடியே நாரதமுனிவர், திருப்பாணாழ்வார், தம்பிரான்மார் முதலானரைப் போலே இசைபாடுவதுண்டாகையாலே 'இன்னிசை முரன்று எழும்' என்றது. பகவத் பாகவத கணா அபவத்திற்கு வாய்த்த இடங்களே 'பொழில்' எனப்படும். செருந்தி என்ற ஒருவகை மரத்தைச் சொல்லி அதன் மலரிலே சென்று அணைவதாகச் சொன்னது 'தன் ஒப்பார் இல் அப்பன் தந்தனன் தனதாள் நிழலே' (திருவாய். 6.3:9) என்று சொல்லுகிறபடியே சம்சாரமாகிய கொடிய வெய்யிலிலே தபிக்கப்பட்டவர்கட்கு நிழல் தந்து விடாய்தீர்க்கும் தண்மையான நன்மரமாகிய வாசுதேவனுடைய பாதமாமலரில் சென்று சேர்ந்திருக்கும் இருப்பைச் சொன்னபடி. ஆக, ஸராக்ராதிகளான (சாரம் அறிந்தவர்கள்) ஸ்ரீ வைணவர்கள் கூட்டம் கூட்டமாகத் திரண்டு பகவத் பாகவத குணாநுபவக் களிப்பாலே யாழினிசை வேதத்தியல்களைப் பாடிக்கொண்டு பகவத் பாதாரவிந்த நிரதர்களாய் வாழுமிடம் திருவயிந்திரபுரம் என்பதாயிற்று.[112]

பிருதியின் குறிஞ்சி நிலக்காட்சியைக் காட்டுகையில் ஆழ்வார், அழகிய பாறைகள்மீது வேங்கைமலர்கள் உதிர்ந்து, படுக்கை விரித்தது போலிருக்க, அதன்மீது யானையானது தன்பெடையோடு கிடந்து உறங்குகின்ற படிக்குச் சிறப்பானது என்கிறார்.[113]

ஈண்டு உள்ளுறையாகக் கண்ணன் பிராட்டியோடு எழுந்தருளியுள்ளதை யானை பெடையோடிருத்தலாகக் கூறுகிறார்.

"வரைசெய் மாக்களி றிளவெதிர் வளர்முளை
சுவைமிகு தேன்தோய்த்து
பிரச வாரிதன் இளம்பிடிக் கருள்செயும்
பிருதி"[114]

பிராட்டியோடு இறை எழுந்தருளியுள்ள தலம் என்பதை, உள்ளுறையாய் வைத்து இளமூங்கிலைப் பறித்து தேனில் தோய்த்து பெண்யானைக் களிக்கும் ஆண்யானைகளானவை என ஒரு காட்சியைக் காட்டிப் பாடுகிறார்,

இப்பிருதியில் மாதவிக்கொடியானது முகிலோடு பிணங்கு வதாகவும் வண்டுகள் இசைபாடுவதாகவும் நிகழும் அருமை யான காட்சிகளைக் காட்டுகிறார் ஆழ்வார். மாதவிக் கொடியென்பது பிராட்டி; முகில்—எம்பிரான் தாயானவள் சேதநர்களின் பிழையைப் பொறுக்க - காக்க அவளோடு அவர் களுக்காகப் போராடி மன்றாடுவது மாதவிக்கொடி முகிலோடு பிணங்குவது. பக்தர்கள்—மகான்கள் வந்து வணங்கும் தலம் என்பது வண்டுகள் வந்து இசைபாடுவது என உள்ளுறையாக வைத்துப் பாடுகிறார்.

"தாதுமல்கிய பிண்டிவின் டலர்கின்ற
தழல்புரை பொழில்நோக்கி
பேதை வண்டுக ளெரியென வெருவரு
பிருதி"[115]

அசோகமலர்கள் பூத்துக்குலுங்க அவ்வழகைக் கண்டு அது நெருப்பு என நினைக்கும் வண்டுகள் பின் ஆய்ந்து உண்மையை உணர்ந்து அவற்றின் தேன் உண்ணும் மீண்டும பழையபடி அஞ்சுதலும், அச்சம் இறந்து உண்மை உணர்ந்து தேன் உண்ணுதலும் நிகழ்த்தும்.

இறைவன் சர்வரட்சகன் எனத் தெரிந்தும் இவனுக்கு என்ன தீங்கு வந்துவிடுமோ! என அஞ்சி, அவனுக்குப் பல்லாண்டு வாழ்த்து பாடுதலும், மற்றொருகால் அவ்வச்சம்

நீங்கி உண்மை உணர்ந்து அவனைத் தன்னை காக்க வேண்டு தலும், மீண்டும் அச்சம் கொள்ளல் அது நீங்கி சரண் அடைதலையும் நிகழ்த்து பிரபந்தர்கள் வாழுவது என்பதை உள்ளுறையாக வைத்து வண்டுகளைப் பாடுவது போல் பாடுகிறார். வண்டுகள்—பிரபந்தர்கள்.[116]

மேலும் "ஸாமகானம் பண்ணிக் களிக்கிற முமுட்சுகள்" வாழ்வது இவ்வதரி என்பதை,

"மதுவுண் வண்டு பண்கள் பாடும்வதரி"[117]

என வண்டுகளைக் காட்டி உள்ளுறையாய்ப் பாடுகிறார்.

## 5-8 திருமங்கை பாசுரங்களில் நாட்டுப்புறக்கூறுகள்

நாட்டுப்புறவியல் என்பது பழங்கால மக்களின் நம்பிக்கை கள், பழக்கவழக்கள், மரபுகள் ஆகும். இந்நாட்டுப்புறவியலை நாட்டுப்புற இலக்கியம், நாட்டுப்புறக் கலைகள் மற்றும் நம்பிக்கைகள் என இரண்டு பிரிவாக்கலாம். நாட்டுப்புறப் பாடல்கள், நாட்டுப்புறக்கதைகள்; நாட்டுப்புறக்கூத்துகள், நாட்டுபுறப் பழமொழிகள், விடுகதைகள், கதைப் பாடல்கள், புராண இதிகாசங்கள் ஆகியன நாட்டுப்புற இலக்கியத்துள் அடங்கும்.

சமணமும், பௌத்தமும் செல்வாக்குற்றிருந்த நிலையில் பக்தி இயக்கம் தோற்றுவிக்கப்பட்டு இந்து சமயத்திற்குப் புத்துணர்ச்சி ஊட்டப்பெற்றது. பக்தி இயக்கத் தொண்டர் களான, ஆழ்வார்களும் நாயன்மார்களும் சமண பௌத்தங் களின் வன்மையான பிடியிலிருந்து தமிழகத்தை விடுவிக்க விரும்பி தம் பாடல்களில்—தம் வாழ்வின் பல்வேறு உத்தி களை, நிலைகளை கைக்கொண்டனர். இத்தகைய நாட்டு மக்களைக் கவரும் உத்திகளில் ஒன்றே நாட்டுப்பாடல்களின் பாணியைப் பின்பற்றித் தமது பாடல்களினை அமைத்தல் என்பதாகும் திருமங்கை ஆழ்வாரும் இதற்கு விதிவிலக்காக அன்றி, தமது பாசுரங்களிலும் நாட்டுப்புறப் பாடல்கள் பாணியைப் பின்பற்றி உள்ளார்.

**நம்பிக்கைகள்—சகுனங்கள்**

நம்பிக்கைகள் என்பன மக்களால் உருவாக்கப்பட்டு, அம்மக்களின் சமுதாயத்தால் பாதுகாக்கப்படும் திறத்தன. நன்மையையும் இன்பத்தையும் உயிரினங்கள் விரும்பி எதிர் நோக்குகின்றன. பேசும் விலங்கான மனிதனும், தனக்கு இன்பம், நன்மை விளைய வேண்டியே—அவற்றை எதிர் பார்த்தே அவற்றுக்காகவே வாழ்வுப்பாதையில் தன் ஒவ்வொரு அடியையும் எடுத்து வைக்கிறான்.

இத்தகைய மனிதமனம் தனக்கு நன்மை விளைய வேண்டும் என்ற விருப்பத்தினால் சில பொழுதுகளில் காரண காரியங்களைப் பார்க்காது பொதுவான கருத்துக்களை ஏற்றுக் கொள்கின்றது. அவையே நம்பிக்கைகள் ஆகின்றன. நம்பிக்கைகள் மனிதனின் அச்ச உணர்வினை அடிப்படை யாகக் கொண்டு தோன்றியனவாகவே காட்சி தருகின்றன. அதாவது இயற்கையில் புதிரான செயல்களை உணர இயலாதபோதும், மனிதவாழ்வில் நிகழும் ஊறுகளுக்கும் காரணம் கற்பிக்க இயலாத நிலையிலும் மனிதமனம் சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கின்றது. அவை நம்பிகககைகளாக உருப்பெறுகின்றன. மனிதனின் அறிவு வளர்ச்சியின் தொடக்கக்காலத்தில்தான் இந்த 'நம்பிக்கைகள்' என்பது தோன்றி இருக்கவேண்டும்.

முக்கியமான ஒரு காரியத்தை உத்தேசித்து, ஓர் இடம் விட்டு வேறிடம் செல்லும்போதோ அல்லது ஒருசெயலைப் பற்றி நினைக்கும் போதோ ஏற்படுகின்ற சுபாசுப பலன்களைக் குறிக்கக் கூடிய குறிகளைச் சகுனமென்பர்.

**திருமங்கையாழ்வார் பாசுரங்களில் சகுனம்—நம்பிக்கைகள்**

திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி பத்தாம்பத்து பத்தாம்திருமொழியில், தாம் தலைவி பரகாலநாயகியாகி, செம்போத்து காக்கை, குயில், கிளி, பல்லிக்குட்டி ஆகியன

தங்கள் வழக்கப்படி ஒலி செய்துகொண்டிருக்க, 'என்தலைவனான எம்பெருமான் இங்கே வந்து சேரும்படிக்கு ஒலி செய்க' என இறைஞ்சி வேண்டுகிறார்

"மாதவனைவர திருத்தாய்செம்போத்தே"
"உத்தமனைவர கரையாய்காக்கைப்பிள்ளாய்"
"மாதவனைவர கொட்டாய்பல்லிக்குட்டி"

செம்போத்து என்னும் பறவை வலமானால் நினைத்தது நடக்கும் என்பது சகுன சாஸ்திரிகளின் கொள்கை. அதனால் பரகாலநாயகி செம்போத்து பறவையை நோக்கி, 'எம்பிரான் இங்கே வந்து சேருகையாகிற என்னுடைய விருப்பம் நிறைவேறும்படிக்கு நீ வலமாக வேணும்' என்கிறாள். ஆதலால் 'செம்போத்து எனும் இப்பறவை தன்னடையே வலமானால் நல்ல சகுனம்' என்பதனைப் பரகாலநாயகி மூலம் அறிவிக்கிறார் ஆழ்வார்.

காகம் கரைந்தால் விருந்துவரும் என்பது தமிழர்தம் நம்பிக்கை. வீட்டின் முற்றத்திலே காக்கை வந்திருந்து கொண்டு கத்தினால் இஷ்டமானவர்களின் வருகை நேரும் என்கிறது சகுன சாஸ்திரம். இதனை அறிந்திருந்த பரகால நாயகி கரையாய் காக்கைபிள்ளாய் எனக் காக்கையை வேண்டுகிறாள்.

ஒன்றைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்கும்போதோ. ஒருசெயலைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும்போதோ அதாவது அந்நேரத்தில் பல்லி சப்தமிட்டால் அச்செயல் முழுமையடையும் என்பது நம்பிக்கை. இந்நம்பிக்கை தமிழச்சியான பரகாலநாயகிக்கும் இருந்திருக்கும். அதனால் அவளது நா தன்னையறியாமலேயே 'மாதவனை வர கொட்டாய் புல்லிக்குட்டி, என்று மயங்கி வேண்டியிருக்கும்.

ஈண்டு, செம்போத்து பறவை தன்னடையே வலமானால் நல்ல சகுனம், காக்கை கரைந்தால் விருந்து வரும்; ஒன்று

நினைக்கும்போது பல்லிசப்தமிடல் நன்மையே முதலிய பழந்தமிழர்களின் சகுண நம்பிக்கைகள் காட்டப்பெற்றன.

இங்குச் செம்போத்து வலம் வருதல், காக்கைக் கரைதல், பல்லிகொட்டுதல் ஆகியன விருப்ப நிறைவேற்றக் குறிப்புக்களேயன்றி இஷ்டங்களைப் பெறுவிப்பனவல்ல, பரகாலநாயகி தன் காதல்மிக்க நிலையில் இவ்வுண்மையை மறந்து, இவை எம்பெருமானாகிய நாயகனைத் தன்பால் கொண்டுவந்து சேர்க்கும்படியான சக்திவாய்ந்தவை என்று வியந்து பாடுவதாகக் கொள்ளலாம்

## திருமங்கையாழ்வார் பாசுரங்களில் பழமொழிகள்

பழமொழி என்பது வழிவழியாக வந்த கூற்றுகளாகும். ஓசை நயம் காரணமாக எளிதில் மனத்தைக் கவர்வதாலும் நினைவில் தங்குவதாலும் மக்களால் பன்முறை பயிலப்பட்டு, பழக்கத்தில் கையாளப்பட்டு, பயன் தருவதனால் பழமொழிகள் மக்களிலக்கியமாயின. ஒரு நாட்டின் பண்பாட்டை அந்நாட்டு மொழியுள் வழங்கும் பழமொழிகளால் அறியலாம்.

திருமங்கையாழ்வார் தம் பாசுரங்களில் இரண்டு திருமொழிப்பாசுரங்களில் பழமொழியினைக் கையாள்கின்றார். பெரியதிருமொழியின் 'புள்ளுரு'வாகி (10—9) எனும் பகுதியின் ஒவ்வொரு பாடலும் பழமொழியில் முடிவுறுகிறது. மேலும் 118 பகுதியில் பாடல்தோறும் உவமையாக ஒரு பழமொழி கையாளப்படுகிறது.

எம்பெருமானாகிய நாயகனோடு கலந்து பிரிந்து பிரிவாற்றாளான பரகாலநாயகியின் கடலிலும் மிக்க காதலினையும், அக்காதலுக்குத் தக்கபடி அந்நாயகன் வந்து கலவி செய்யாது அலட்சியத்திலிருந்ததை நோக்கின் அவள் தான் எம்பெருமானாகிய நாயகனிடம் நீ இங்ஙனமே இவளை நோவுபடவிட்டிருப்பது முறையோ? நமக்கு இப்பெண் ஒரு பொருளோ என அலட்சியமாய் நினைக்கிறாய் போலும்;

இதுதானோ உன் பெருமைக்குத் தகுவது? என்று பேசுகிறாள். ஆழ்வார் திருமங்கை இறைவனிடம் தம் பக்தியின் மிகுதியை யும் அலட்சியப்படுத்தாமல் தமக்கு அருளவேணும் என்று கூறியும் வேண்டுகிறார் இப்பாசுரத்தில்.

"பிள்ளை தன்கையிற் கிண்ணமேயொக்க பேசுவது"

''முன்றிலெழுந்த முருங்கையிற்றேனா முன்கைவளை
கவர்ந்தாயே"

"அங்கையில் வட்டாம் இவளெனக்கருதுகின்றாயே''

"யிவளைநீயுங்கள் தொண்டர்கைத்தண்டென்றவாறே"

பெருவழிநாவற் கனியினுமெளியள் இவளெனப்
பேசுகின்றாயே"

"எருக்கிலைக்காகவெறிமழுவோச்சல் என்செய்வதெந்தை
பிரானே''

''கோழிவெண்முட்டைக்கென் செய்வதெந்தாய்? குறுந்தடி
நெடுங்கடல்வண்ணா"

"கவுட்கொண்டநீராம் இவளெனக்கருதுகின்றாயே"

"ஆரழலோம்புமந்தணன்தோட்டமாக நின்மனத்து
வைத்தாயே''

பிள்ளை தன் கையில் கிண்ணம், முன்றிலெழுந்த முருங்கையில் தேன், அங்கையில் வட்டு, தொண்டர் கைத்தண்டு, பெருவழி நாவற்கனி, எருக்கிலைக்காக வெறிமழுவோச்சல், கோழி வெண்முட்டைக்கென குறுந் தொடி, கவுட்கொண்ட நீர், ஆரழலோம்புமந்தணன் தோட்டம்

இப்படி, பரகாலநாயகியின் தாய், இறைவனாகிய நாயகன் வந்தணைந்து கலவிபுரியாது அலட்சியப்படுத்து கின்றான் தன் மகளை என்பதனை மேற்கண்ட பழமொழி கள்—பழமொழிக்கான பொருட்களின் வாயிலாக நன்கு விளம்பரப்படுத்தி வருந்துகின்றாள்.

இவ்வாறே, எளிதாயும், சுவைமிக்கதாயுமுள்ள அர்ச்சாவதார அனுபவத்தை விட்டு கிட்டுதற்கு அரியதாயும், சுவையற்றதாயுமுள்ள மோட்ச அனுபவத்தைப் பெற விரும்புதல் பேதைமை என்ற தன் எண்ணத்தைத் தகுந்த பழமொழியின் துணைகொண்டு சிறப்பாக வலியுறுத்து கின்றார் ஆழ்வார் திருமங்கையார்.

**"ஏர்ஆர்முயல்விட்டுக் காக்கைப்பின் போவதோ"**[118]

**திருமங்கையாழ்வார் பாசுரங்களில் சூழல்:**

சங்ககாலத்தை அடுத்து சமண பௌத்த சமயங்கள் அரசியலையும் அறிஞரையும் கவர்ந்து, பொது மக்களைத் தம்வயப்படுத்த முனைந்தன. இந்தப் போக்கினைக் கண்டு வருந்திய ஆழ்வார்களும், தேவார மூவர்களும் பண்டைத் தமிழ் இன்ப அன்பு வாழ்க்கைக்குரிய அருளுணர்வினைப் பக்தி இயக்கமாகப் பாடி உருவாக்க முயன்றனர். இந்த உருவாக்கம், ஊர்தோறும் சென்று மக்களோடு இருந்து இறைவனைப்பாடி, பக்தியை வளர்க்கும் ஒரு முறையாகவும், பாமரர் பாடிய சந்தங்களிலும் கண்ணிகளிலும் பாடல்பாடி, தம் பக்தி உணர்வு எல்லோரிடத்தும் செல்லுமாறு பரப்பியதை இன்னொரு முறையாகவும் கொண்டது. இந்த இரண்டாவது முறையில் நாட்டுப்புறப்பாடல் வடிவு பல பக்தி உணர்வுக்கு மேற்கொள்ளப் பெற்றன.

இவ்வாறு பாமரர்பால் பக்தி உணர்வு சென்று சேர வேண்டுமென்று கருதிய சமயச் சான்றோர் நாட்டுப் பண்பாட்டினை—மரபினை—கட்டிக் காக்கும் பொறுப்பைப் பெண்களிடத்தில் தந்து இத்தகு சமயச் சிந்தனைகள்—உணர்வுகள் அவர்களைச் சென்று சேருமானால் சைவ வைணவ சமயங்கள் வேறு தொல்லைகளினின்று தம்மைக் காத்துக்கொள்ளும் ஆற்றல் பெறும் என்று கருதிப் பெண் களுக்கே சிறப்பாக உரிய நாட்டுப்புற வடிவங்களில் சிறப்பாகத் தம் கருத்துக்களையும் கடவுள் உணர்வுகளையும்

பாடினர். எனவேதான் சாழல், அம்மானை முதலிய வடிவுகளில் பக்திப்பாடல் பல இடம் பெறலாயின.

சாழல் என்பது மகளிராடும் விளையாட்டு வகைகளில் ஒன்று. இது முன்னிரண்டு அடிகளில் வினாவும் பின்னிரண்டடி களில் விடையுமாகவும் அமையும். சாடுதலே சாழலாயிற்று என்னும் அடிப்படையில் கேள்விக்கலையில் சாடுதலும், தக்க பதிலால் எதிரடி கொடுத்தலுமாக இச்சாழல் அமைந்துள்ளது.

திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இச்சாழல் நான்கடி கொச்சகங்களாலான பத்துச் செய்யுட்களால் பாடப் பெற்றுள்ளது பதினோராம் பத்து—ஐந்தாம் திருமொழி (பெரிய திருமொழி) முழுவதும் சாழல் அமைப்பில் அமைந்துள்ளது.

இங்குத் திருமங்கையாழ்வார் நாட்டுப்பாடல் அமைப்பினில் பாடுதல் என்ற உத்தியோடு, புறச் சமயத்த வர்க்கு வைணவச் சிறப்பினை நிறுவ மிக்கப் பயன்படும் வகையில் —திருமாலின் எளிமை, மேன்மை குணங்களை (சௌலப்ய, பரத்வ) விளக்கிக்கூறும் வகையில்—ஒரே சமயத்தில் இறைவனது மேன்மை—எளிமை குணங்களில் ஆழங்கால்படும் இன்பத்தை ஆழங்கால்பட்டு அனுபவிக்கும் வகையில் 'சாழலை' தேர்ந்துள்ளார் எனலாம்

ஞானம், சக்தி, பலம், ஐஸ்வர்யம் வீரியம், தேஜஸ்ஸு என்றிவைப் போன்ற திருக்குணங்கள் மேன்மைக்குணங்கள் (பத்துக்குணங்கள்) என்றும். வாத்ஸல்யம், சௌசீல்யம் முதலிய குணங்கள் எளிமைக்குணங்கள் (ஸௌலப்ய குணங்கள்) என்றும் வழங்கப்பெறும். பகவத்குணாநுபவம் பண்ணுகிறவர்களில் சிலர் இறைவனின் பரத்துவ குணங் களையே அநுபவிப்பர். சிலர் அவனது எளிவந்த இயல்பு களால் அவனை அநுபவிப்பர். பலர் இரண்டையும் ஒரு சேர அனுபவிப்பர்.

இத்திருமொழியில் (பெரிய திருமொழி—பதினோராம் பத்து ஐந்தாம் திருமொழி) திருமங்கையாழ்வார் இவ்விரண்டு குணங்களை ஒருசேர அனுபவிக்க விரும்பி ஒரே சமயத்தில் இரண்டு பிராட்டிமாருடைய நிலைமையை அடைந்து, ஏசிப் பேசுகிற ஒருத்தியின் பாசுரத்தாலே இறைவனது சௌலப்ய (எளிய) குணத்தையும், ஏத்திப் பேசுகிற மற்றொருத்தியின் பாசுரத்தாலே எம்பிரானின் பரத்வ (மேன்மை) குணத்தையும் அனுபவிக்கிறார்.

இப்பெரிய திருமொழி—பதினோராம்பத்து—ஐந்தாம் திருமொழியில் அமைந்துள்ள பத்துப் பாசுரங்களில் கிருட்டிணாவதாரம் சிறப்பாகப் பேசப் பெறுகிறது. மற்றும் வாமன அவதாரம், திரிவிக்கிரம அவதாரம், இராம அவதாரம் ஆகியனவும் ஓரளவு பேசப்படுகின்றன. விஷ்ணுவின் பரத்துவமும், அவன் ஏழுலகுண்டு ஆலிலை துயின்ற நிகழ்வும் ஆங்காங்குக் காணப்படுகின்றன.

திருமாலை முழுமுதற்பொருளாகக் கொள்கிறது வைணவம். முழுமுதற்பொருள் என்பது மாறுபடாத தன்மை உடையது; இடத்தாலும் காலத்தாலும் அளவிட முடியாதது; அனைத்துக்கும் காரணமாய், அனைத்தையும் அடக்கி ஆள்வதாயுள்ளது; சகலகர்மங்களால் தானே ஆராதிக்கப்பெற்றுப் பலன்களைத் தருவதாய் இருப்பது; சத்தியம், ஞானம், ஆநந்த, அனந்த சொரூபமாயிருப்பது.

**"கானமரும் கல்லதர்போய்க் கடுறைந்தது"**

(இராமனாய்)

**"தந்தைதனை கழலத்தோன்றிப்போய் ஆய்ப்பாடி**
**நந்தன் குலமதலையாய் வளர்ந்தது"**

(கிருஷ்ணவதாரம்)

**"உறியார்நறுவெண்ணெயுண்டுகந்தது"** ( " )

**"கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டது"** ( " )

**"மன்றில்மரக்கால் கூத்தாடியது"** ( " )

"தூதனாய்மன்னவனாற்சொல்லுண்டது"
(கிருஷ்ணாவதாரம்)

"பார்மன்னர்மங்கப்படைதொட்டுவெஞ்சமத்து
தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தது" ( " )

"கண்டாரிரங்கக்கழியக் குறளுருவாய் வண்தாரான்
வேள்வியில்மண்ணிரந்தது" (வாமனவதாரம்)

முதலான மேற்கண்ட இராமாவதார, கிருஷ்ணாவதார, வாமனவதார செயல்கள் யாவும் திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொள்வதற்குத் தடைக் கற்களாக உள்ளன. புறச்சமயங்களான சமண, பௌத்தத்தினை வேருடன் அழிக்கப் புறப்பட்ட, பக்தி ஞான வீரர்களுள் ஒருவரான—வாதப்பிரதி வாதங்களுள் தலைசிறந்தவரான திருமங்கையாழ்வார் வைணவத்தை—தசாவதார நாயகனான திருமாலைத் தாழ்வாகப் பேசி குறை கூறி மக்களைக் குழப்பி வந்த புறச்சமயத்தவர்கள் நெஞ்சுள் கொண்டு அவர்கட்குப் பதில் கூற, வைணவத்தின் சிறப்பை—திருமாலே முழுமுதற் பொருள் என்ற கொள்கையை நிலைநிறுத்த—இச்சாழலைப் பயன்படுத்தியும் அதன் வாயிலாய் அவனது சௌலப்ய, பரத்வகுணங்களைத் (எளியமேன்மையான) தெளிவுறுத்தியும் நிறுவுகிறார்.

வெண்ணெய் களவுண்டது, தாம்பினால் கட்டுண்டது போன்ற எம்பெருமானை—அவனது கிருஷ்ணாவதாரலீலைகளைப் புறச்சமயத்தவர்களின் கண்களுக்குக் குறைகளாக அவை தோன்றினாலும் உண்மையில் அவை எம்பிரானது பரத்துவ நிலையை நிலைநாட்டுவனவாக—தாழ்வும் மேன்மையே என்ற நோக்கில் அவனது சிறப்பைப் பறை சாற்றுவனவாகவே உள்ளன என்று வாதிடுகின்றார் ஆழ்வார்.

புறச்சமயத்தவரின் வெறுங்கண்கள் எம்பெருமானது திருஅவதாரங்களைக் குறைகூறும் வெறும் நோக்கில் பார்க்கின்ற போது அவதாரங்கள் கேலிக்குரியதாகத்

தாழ்விற்குரியதாக அப்பாழ் விழிகட்குத் தெரிகின்றன. மாலவனன்பு என்னும் மைதீட்டி பார்க்கும் வைணவர் நயனங்களுக்கு அவ்வதாரங்கள் அரும்பெரும் தத்துவங்களைச் சுமந்து நிற்கும் ஒப்புயர்வுற்ற பொக்கிஷங்களாகக் காட்சி தருகின்றன. திருமங்கையாழ்வார் இச்சாழலில், ஏசிப்பேசும் முதல்தோழி வாயிலாகப் புறச்சமயத்தவர்களின் ஐயங்களையும், ஏத்திப் பேசும் இரண்டாம் தோழி மூலம் திருமாலினது முழு முதற் பொருள் தன்மை, பரத்வ குணநலன்கள், திருமாலின் அவதாரத் தத்துவங்கள் ஆகியன பற்றியும் பரக்கப் பேசுகின்றார்.

'பிறப்பிலியான முதற்பொருள் இராமனாகப் பிறந்து கால்நோக நடந்தான்' (ஏசிப்பேசல்) என்பதற்கு 'அதருமத்தை அழிக்க, தருமத்தை நிலைநாட்ட யுகந்தோறும் பிறக்கிறேன்' என்றபடி எம்பெருமான் இராமனாய்ப் பிறந்து கால்நோக நடந்தது தருமத்தை நிலைநாட்டவேயாம். மேலும் அப்பொன்னடிகள் வானவர்தம் சென்னிசூடும் மலராவன என்று இறைவனது அவதாரக் காரணம், மேன்மைநிலை ஆகியவற்றைப் (ஏத்திப்பேசல்) பேசுகின்றார் திருமங்கை.

**"பிறப்பிலியாம் முதற்பொருள் கண்ணனாய்ப் பிறந்தான்;**
**கம்சனுக்கஞ்சி ஒளித்து வளர்ந்தான்—ஏசிப்பேசல்**
**நான்முகற்குத் தந்தையான அவன் ஒளிந்துவளர்ந்தது**
**மானுட பாவனையால்**

**தன் கர்மத்தால் பிறக்கவில்லை; தர்மத்தைக் காக்கப்**
**பிறந்திட்டான்**
(ஏத்திப்பேசல்)
**கள்வனாய் தயிருண்டான்** (ஏசிப்பேசல்)

தன் வயிற்றை நிறைத்துக்கொள்ள உணவில்லை. உலகேழும் உண்டும் நிறையாத திருவயிறோன். இதில் கள்வனாய் வெறும் வெண்ணெய் தயிருண்ணல் எம்மூலைக்கு? கள்வனாய் அவன் தயிருண்டது அடியவர்களுடைய

ஹஸ்தஸ்பர்சமுள்ளதொரு பொருளாவல்லது தரிக்க மாட்டாத பெருங்குணத்தாலேயாம். (ஏத்திப்பேசல்)

யசோதையிடம் தாம்பினால் கட்டுண்டான் (ஏசல்)

வானவர்க்கும் நெஞ்சால் நினைத்தற்கரியன் அவன். யசோதையிடம் கட்டுண்டது தன் எளிமைக்குணத்தாலே யாகும். இது அவனுகந்து ஏற்ற ஒன்றே. தாழ்வு போல் தோன்றும் இச்செயலும் அவனுக்குப் பெருமை சேர்ப்பதே; பரத்துவத்தைக் காட்டுவதே. இத்தகையதொரு செயல் தான் அவன் மன்றில் மரக்கூத்தாடியதும் என்கிறார் ஆழ்வார்.

முதலாமவள் 'இரந்தானங்கு மாவலியிடம் பூமியை' என ஏசிப்பேச, தனக்கொரு குறையுண்டாகி இரக்கவில்லை; தன் பக்தனான மாவலியை அழிக்க விழையாது அவன் செருக்கை அழிக்க நினைத்ததால் வாமனனாய் வந்து இரக்க வேண்டி வந்தது. ஆனால் அவ்வாமனனே திரிவிக்கிரமனாக வளர்ந்து, ஏழுலகுக்கும் மிக்கானான் என்று எங்கும் வியாபித்திருக்கும் முதற்பொருளாம் திருமாலின் திருப்பெருமையைப் பேசுகின்றாள் இரண்டாம் தோழி.

ஆன்மாவானது அகங்கார மமதைப் பேய் பிடித்து ஆட்டம் போடுகையில் ஆன்மாவின் தலைவனான எம்பெருமான் தனக்கேயுரிய கருணை திறத்தால் பொருளைத் தன்பால் சேர்த்துக் கொள்ள விழைந்து அதனது அகங்காரமமாரங்களை நீக்கி அருள்கின்றான். ஆணவம் நீங்கப்பெற்ற இவ்வான்மா எங்கும் வியாபித்திருக்கும் திருமாலின் பரத்துவத்தை உணர்ந்து பரமானந்தத்தில் மூழ்கும். இவ்வரும் தத்துவத்தை வாமனாவதாரம் உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

திருமங்கையாழ்வார் இச்சாழலில் இறைவனது ஐவகை நிலைகளையும் காட்டிச் செல்கிறார்.

ஒருவர்க்கும் எளியனாகாதபடி திருப்பாற்கடல், திருமலை யிலுளன் (ஏசல்)

திருமங்கையினுடைய உளத்திலே வந்து வசிக்கவே அவன் திருப்பாற்கடல், திருமலையில் வசித்தது. இப்போது அவ்விடங்களையெல்லாம் விட்டு ஆழ்வாருடைய உள்ளத்திலுள்ளான். (ஏத்தல்)

ஈண்டு திருப்பாற்கடல் என்னும் வியூகநிலையும், திருமலை என்னும் அர்ச்சாவதாரநிலையும், உள்ளத்திலுளன் என்றபடி அந்தர்யாமித்துவநிலையும் பேசப்பெறுகின்றன.

இவ்வாறு, திருமங்கையாழ்வார் பாசுரங்களில் 'சாழல்' அமைப்பு பலவாறு சிறப்பாக அமைந்துள்ளது.

## 5-9. திருமங்கை பாசுரங்களில் இலக்கியவடிவங்கள்

திருமங்கையாழ்வார் பாசுரங்களில் பதிகம், கோல்தும்பி, திருச்சாழல், பிள்ளைத்தமிழ், தூது, குறவஞ்சி, கீர்த்தனை, பொங்கத்தம், பொங்கோ, குழமணிதூரம், திருவங்கமாலை, உற்பவமாலை, தாண்டகம், மாடல், திருவெழுகூற்றிருக்கை ஆகிய இலக்கியவடிவங்கள் காணப்பெறுகின்றன.

### பதிகம்

இப்பதிக இலக்கிய வடிவம் பக்தி இலக்கியங்களில் பெரும்பான்மை பகுதிகளில் வந்தமைவதாகும். நூலின் முன்னுரை, சுருக்கம், பாயிரம் பதிகம் என்றழைக்கப்படுகிறது. அதுவன்றி பத்துப்பாடல்கள் அடங்கிய தொகுதியைக் குறிக்கவும் இச்சொல் பயன்படுத்தப்பெறுகின்றது. பதி-பத்து. கம்-தொகுதி. பத்துடையது பதிகம் ஆகிறது

சில பதிகங்கள் பதினோரு பாடல்களைக் கொண்டும் அமைகின்றன. இத்தன்மையதில், இறுதிப்பாடல் திருக்கடைக் காப்பாக அமைந்து பதிகத்தைப் பாடுவதால் பெறும் பயன்களைக் கூறுவதாய் அமைகின்றது.

திருமங்கையாழ்வார் பாடிய பதிகங்கள் அனைத்தும் பத்துபத்து பாடல்களையே பெற்றுள்ளன. பத்தாம்பத்து ஏழாம் திருமொழியில் மட்டும் பதினான்கு பாசுரங்கள் இடம் பெற்றுள ஆழ்வாரின் பெரியதிருமொழி பதினோரு பத்துக் களுள் ஒவ்வொரு பத்தும் பத்துத் திருமொழிகளைப் பெற்றுள்ளது. ஒவ்வொரு பத்தும் பத்தாவது பாடலில், பாடல்பாடியவர் பெயர், பாசுரம் பயில்வதால் எய்தும் பலன் களைக் கூறுகின்றது.

தெய்வத்தைப் பற்றிப் பெரும்பாலும் பத்துச் செய்யுட் கள் அமைந்ததாய் வரும் பிரபந்தமே பதிகம் எனப் பெறுகிறது

"கோதிலோர் பொருளைக் குறித்து ஐயிரண்டு
பாவெடுத் துரைப்பது பதிகமாகும்"[119]

எனப் பத்துப்பாடல்கள் அமையவேண்டும்; எப்பொருளிலும் அமையலாம், என பதிகத்திற்கு இலக்கணம் கூறப்பெறுகிறது. பதிக யாப்பு வடிவம் பற்றி,

"ஆசிரியத்துறை அதனன் விருத்தம்
கலியின் விருத்தம் அவற்றின் நான்கடி
எட்டின்காறும் உயர்ந்த வெண்பா
மிசைவைத்து ஈரைந்து என்னப்
பாட்டுவரத் தொடுப்பது பதிகம் ஆகும்"[120]

எனப் பன்னிருபாட்டியல் இலக்கணம் வகுக்கிறது.

பெரிய திருமொழியில் திவ்வியதேசத்திருத்தலங்களின் நிலஅமைப்பை ஒட்டிப் பதிகங்கள் அமைக்கப்பட்டுள்ளமை

**பெரியதிருமொழி—பதிகயாப்பு**

| | யாப்பு | பதிகங்கள் | பாடல் தொகை |
|---|---|---|---|
| 1. | அறுசீர் கழிநெடிலாசிரிய விருத்தம் | 27 | 270 |
| 2. | எழுசீர் ,, | 15 | 154 |
| 3. | எண்சீர்விருத்தம் | 21 | 210 |
| 4. | கலிநிலைத்துறை | 14 | 140 |
| 5. | கலிவிருத்தம் | 11 | 110 |
| 6. | தரவுகொச்சகக்கலிப்பா | 14 | 140 |
| 7. | கலித்தாழிசை | 1 | 10 |
| 8. | வெண்டுறை | 1 | 10 |
| 9. | ஆசிரியத்துறை | 3 | 30 |
| 10. | வஞ்சிவிருத்தம் | 1 | 10 |
| | மொத்தம் | 108 | 1084 |

திருமங்கையாழ்வாரின் திருமொழிகளில் பயிலப்பெறும் பதிக யாப்பு வகையினை மேலும் விரிவாகப் பட்டியல்படுத்திக் காட்டலாம்.[121]

**கோல்தும்பி**

கோல்தும்பி—அரசவண்டு. அரசவண்டினை அழைத்துப் பாடப்பட்ட இலக்கியம் இதுவாகும். மகளிர் விளையாட்டு வகையாக இது கொள்ளப்பெறுகிறது தலைமக்கள் ஒருவரை யொருவர் பிரிந்திருக்கும்போது தம் ஆற்றாமை மீதூர இயற்கைப் பொருட்களை அழைத்துப்பேசுவர். ஆழ்வார் திருமங்கை பத்துப் பாக்களில் இவ்விலக்கிய படைப்பைப் பயன்படுத்திப் பாடுகிறார். இறைவனாகிய திருக்கண்ண புரத்து எம்பெருமானின் திருமுடிமீது சூடியுள்ள நறுந்துழாய் மாலையை ஊதக்கோருகின்றார்; பாதங்களை ஊதுமாறு கோருகிறார்; அவனது பெருமையைப் பரக்கப்பேசுகிறார்.

### சாழல்

சாழை—மகளிர் கைகொட்டி விளையாடும் விளையாட்டு. சாழை கொட்டுதல்—கை கொட்டுதல். பாடலுடன் இணைத்து வரும் ஆடல். மகளிர் விளையாடும் விளையாட்டு இது. முன்னிரண்டடிகள் கேள்வியாகவும், பின்னிரண்டடிகள் விடையுமாகவும் அமைந்தது இவ்விலக்கிய வடிவமாகும். சாடுதல் சாழலாயிற்றாம். திருமங்கையார், பத்து பாசுரங்களால் இச்சாழல் இலக்கிய அமைப்பைக் கைக்கொள்கிறார்.

### பிள்ளைத்தமிழ்

இறைவனைக் குழவியாக்கிப் பாடும் பக்தி பிரபந்தம் பிள்ளைத்தமிழாகும். திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழி—சப்பாணிக் கொட்டாயோ என்ற பத்துப் பாசுரங்கள்[122] பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தக் கூறுகளைக் கொண்டுள்ளன.

### தூது

தலைவனைப் பிரிந்த தலைவி அன்னம், நாரை, கிளி, வண்டு முதலிய இயற்கை அஃறிணைப் பொருட்களை அழைத்து தூதுவிடுவதாக அமைவது இவ்விலக்கிய வகையாம். ஆழ்வார் திருமங்கை வண்டை, நாரையை தமது பெரிய திருமொழி பாசுரங்களில் தூதாக அனுப்புகிறார். செம்போத்து, காக்கை, பூங்குயில், பல்லிக்குட்டி, பைங்கிளி, கோழி முதலியவற்றை மேலும் தூதாக அனுப்பி ஆனந்திக்கிறார். சிறிய திருமடலிலோ தமது நெஞ்சையே தூதாக அனுப்புகிறார். திருநெடுந்தாண்டகத்திலும் தூதுவிடுத்து பக்திக்காதலில் ஆழ்கிறார்[123]

"தேமருவு பொழிலிடத்து மலர்ந்த பேதைத்
............
...............
நின்னயந்தாள்; என்றிறையே இயம்பி"[124]

வண்டை விளித்துத் தொழுத பரகாலநாயகி அது செய்ய வேண்டிய காரியத்தை விதிக்கின்றாள். திருவழுந்தூர் ஆமருவியப்பன் திருவடியில் சென்று தனது நிலைமையைச் சொல்லுமாறு வேண்டுகின்றாள்.

"தேன்வெள்ளம் நிறைந்திருக்கப்பெற்ற சோலைப் புறத்தில் மலர்ந்த புஷ்பங்களிலுண்டான தேனைப் பானம் பண்ணி உனது பெடையும் நீயும் புஷ்பத்திலே பொருந்தி இனிமையாகப் புணர்ந்து மேனியிற்புகா அதிகரிக்கப்பெற்ற அறுகால்களை உடைய சிறிய வண்டே!" உன்னை வணங்கி யாசிக்கின்றேன்; மதுக்கூட்டங்களை விரும்பி மேய்த்தவனும் நித்யசூரிகளுக்குத் தலைவனும் அழகிய திருவழுந்தூரிலே நிற்பவனுமான எம்பெருமான் பக்கலிலே இப்போதே நீ போய் பயப்படாமல் பொருந்தி நின்று ஒரு பெண்பிள்ளை ஆசைப்பட்டிருக்கின்றாள் என்று சிறியதொரு வார்த்தையைச் சொல்'' என்கிறாள்.

வண்டை விளிக்கும் விளியிலேயே பூவைக் கண்டால் அருவருத்தும் போக்ய பொருட்களில் வெறுப்புற்றும் மேனி நிறமழிந்தும் இரா நின்ற எனையும் உன்போல் ஆக்க வேண்டாவோ? நானும் துணைவனோடு கலந்து வாழும்படி நீ காரியஞ்செய்ய வேண்டாவோ? என்ற உள்ளுறை கருத்துத் தோன்ற விளிக்கிறாள்.

"ஆசாரிய பாதாரவிந்த சேவையாகிற மதுவைப் பருகுதலையே விரதமாகவுடைத்தாகியும், உயர்கதிக்குச் சாதனமாகிய இரண்டு சிறகுகள் போன்ற கர்மஞானங்களை யுடையராகியும் ஸாரக்ராஹிகளாயுமிருக்கின்ற ஸ்ரீவைஷ்ண வர்களை வண்டாகச் சொல்வது வழக்கம்.[125] அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களை நோக்கி 'நீர் எம்பெருமான் திருவடி களிலே புருஷகாரஞ்செய்து அடியேனையும் உம்மைப்போலே பகவதநுபவமே நித்தியமாய்ச் செல்லுமாறு ஆட்படுத்திக் கொள்ளவேணும்' என்று பிரார்த்தித்தல் இதற்கு உள்ளுறை

பொருள். வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிவது ஸம்பிரதாயமென்க.''

**"அறுகால சிறுவண்டே! தொழுதேன் உன்னை''[126]**

ஈண்டு ஆழ்வார் வண்டுக்கு ஆறுகால் உள்ளமை இயல்பா யிருக்க, அதனைக் கண்டு குறித்தது, தூது சென்று மீண்டு வந்தால் இவ்வண்டின் கால்களைத் தன் தலைநிறைய வைத்துக் கொண்டு கூத்தாடவாம்.

ஈண்டு வண்டினைச் சிறுவண்டே என்றும், திருவழுந்தூரா னிடம் தூது போகும்படியும் சொல்லியது எதற்காக என எண்ணும்போது, வண்டுசிறியதாய் இருப்பது ஒரு பாக்கியமே. அனுமன் இலங்கைக்குத் தூது சென்றபோது சிலவிடங்களில் தன் வடிவைச் சிறுத்துக் கொண்டு ஈர இருக்க வேண்டி இருந்தது- அவ்வாறு இன்றி நீயே சிறியதாய்த்தான் உள்ளாய்! மேலும் நீ வண்டாக இருப்பதால் தேனருந்த செல்லுதல்போல் அவனது அடர்முடி மார்புமாலை மேல் அமர்ந்து சொல்ல வேண்டியதைச் சொல்லலாம் என்கிறார்.

எம்பெருமான் பிரிகிறபோது அரங்கம் எம்மூர் என்ற பரகாலநாயகிக்குக் கூறிச் சென்றாலும், பிரிந்து போனவர் முழுதும் போயிருக்க மாட்டார்; திருவழுந்தூரிலே ஒருக்கால் தங்கி இருக்கலாம் அல்லது அரங்கம் எம்மூர்என்று போனவன் ஆங்கு நீர், நிழல் வாய்ப்பான சூழலில் தனிமையில் இருக்க விரும்பாது எதிர்கொள்ள புறப்பட்டு இப்பொழுது திருவழுந்தூரிலே எழுந்தருளி இருப்பான் என்ற பரகால நாயகியின் எண்ணந்தான் அவளைத் திருவழுந்தூர் நாயக னிடம் வண்டுவிடுதூது மேற்கொள்ள வைக்கிறது.

**"வாராய் மட நெஞ்சே! வந்து—மணிவண்ணன்
சீரார் திருத்துழாய் மாலை நமக்கருளி
தாரான் தரும், என் றிரண்டத்தி லென்றதனை
ஆரானும் ஒன்னாதார் கேளாமே சொன்னக்கால்
ஆராயு மேனும்; பணிகேட்டு அதுஅன்றெனினும்
போரா தொழியாத போந்திடுநீ"[127]**

"அறிவு மாண்டு கிடக்கிற நெஞ்சே! எழுந்திரு; தன்னைப் பிரிந்தார் மடலெடுக்க வேண்டும்படியான வடிவு படைத்த அவன் பக்கல் சென்று 'திருத்துழாய் ப்ரஸாதம் நமக்குக் கொடுக்க முடியுமா? முடியாதா? இரண்டிலொன்று சொல்லி விடு' என்று ஏகாந்தமாகக் கேள்" அதற்கு அப்பெருமான் ஆதரவு தோன்ற விசாரித்து நல்ல மறுமாற்றம் சொன்னாலும் சரி, 'அவளாரோ எனக்குத் தெரியாது' என்று அநாதரமாகச் சொல்லி விட்டாலும் சரி; ஏதோவொரு கருத்தைத் தெரிந்து கொண்டு அங்கு விளம்பித்து நிற்காதே கடுக என்பால் மீண்டுவா எனத் தனது நெஞ்சை அவனிடம் தூது விடுகிறாள். 'யாருமிலாத நேரம் பார்த்து அவனை இரண்டிலொன்றைக் கேள்' என விசேஷமாகச் சொல்லித் தூது விடுவது பாராட்டற்குரியது.

**நாரைவிடு தூது :**

**"செங்கால் மடநாராய்! இன்றே சென்று**

**...............**

**இருநிலத்தில் இனிதின்ப மெய்த லாமே"**

சிவந்த கால்களையுடைய அழகிய நாரைப்பறவையே! இன்றைக்கே புறப்பட்டு போய் திருக்கண்ணபுரத்தில் புகுந்து செந்தாமரைக் கண்ணராய் என்மீது வியாமோஹங் கொண்டவரும் எனக்குத் துணைவருமான சௌரிப்பெருமாள் பக்கலிலே எனது விருப்பத்தைச் சொல்லுவாயாகில் அவரைப் பிரிந்து வருந்திக் கிடக்கின்ற நமக்கு இதுபோன்ற ஆனந்தம் வேறு ஒன்றுமில்லை; நீ உள்ள காலமெல்லாம் இந்தச் சோலைப்பரப்பு முழுவதும் உனக்கே உரியதாம்படியாக நீர் நிலங்களிலுள்ள மீன்களை நீ கவர்ந்து உண்ணும்படிக்குக் கொடுப்பேன். அங்ஙனம் நான் தந்தபின் உனது மனையாட்டியும் நீயும் இவ்விடத்தே வந்து மகிழ்வுடனிருந்து இப்பெரிய பூமண்டலத்திலே ஆனந்தத்தை அடைந்து மகிழலாம் என்கிறார்.

மேற்பாட்டில் வண்டைத் தூதுவிட்ட நாயகி, அதுபோய் திரும்பி வருமளவும் தரித்திருக்கமாட்டாது நாரையைத் தூதுவிடுகிறாள். சீதையைத் தேடுதற்கு இராமபிரான் எல்லா திசைகளிலும் வானரங்களை அனுப்பியது போல் ஈண்டு ஆழ்வார்நாயகி தான் கண்டவற்றையெல்லாம் தூது விடுக்கிறாள்.

நாரையானது தான் கேட்டுக்கொண்டதைச் செய்ய வேண்டும்; உடனே செய்யவேண்டும் என்பதால் அதனை மிகவும் இனிமையாக அதன் அழகைச் சொல்லி அது மகிழும் படியாக விளித்து அதன்மூலம் அது தம் காரியத்தைக் களிப்புடன் செய்யும்படி செய்கிறாள் பரகாலநாயகி.

ஈண்டுத் திருக்கண்ண புரத்தானிடம் தூதாகச் செல்லச் சொல்கிறாள். நாயகி முற்பாட்டில் தூது சென்ற வண்டு திருவழுந்தூரானைக் கண்டு செய்தி சொல்ல அவன் அதனோடவே விரைவில் வர, அவர்கள் திருக்கண்ணபுரம் வந்திருக்கலாம் என எண்ணி ஆங்கு நாரையைத் தூதனுப்பு கிறாள் போலும். எம்பெருமானை நோக்கிய தூதாவதால் அது எத்தலத்து நாயகனிடமும் தூது அனுப்புவதாக இருக்கலாம்.

தூது சென்று வரின் பழனமீன் கவர்ந்து உண்ணத் தருவேன் எனத் தலைவி கூறுகிறாள். இதன் உள்ளுறை நாரைக்கு மீன் எப்படி இனிதோ அப்படி ஆசாரியனுக்கு உகப்பான பொருளைத் தந்திட வேணும் என்பதாம். தான் கொள்ளும் உணவைத் தன் தேவதைகளுக்குத் தரவேணும் என்பது போல ஆசாரியர் விஷயத்திலே அவர்களுகந்தது இடவேணும் என்பதற்கேற்ப தான் உண்ணாத மீன்களை நாரையின் விருப்ப உணவாதலால் ஆழ்வார் நாயகி தர முன்வருகிறாளாம்.

ஆழ்வார் திருமங்கை பறவைகளைத் தூதாய் விடுவது நோக்கத்தக்கது. ஈண்டு ஆசாரியர்கள் பகவத் விஷயத்தில்

கொண்டு சேர்க்கின்ற புனிதப் பணியாளர்களாய் விளங்குவ தால் அவர்களைப் பறவைகளாக ஆழ்வார் கொண்டு குறிப்பாலுணர்த்துகிறார் எனலாம். இரண்டு சிறகுகளைக் கொண்டு பறவைகள் விசும்பில் பறந்துதிரிகின்றன. அங்ஙனமே ஞானம், அநுட்டானம் என்னும் இரண்டால் இறைவன் அடையப்பெறுகின்றான் என்பது ஆன்றோர்கொள்கை.

## குறவஞ்சி, கீர்த்தனை, பொங்கத்தம்பொங்கோ, குழமணிதூரம்

தலைவன் உலா வருதலைக் கண்டு காமுற்றுப் புலம்பு கிறாள் தலைவி. அவளுக்குக்குறி கூறுதலாகிய செய்தியைக் கொண்ட இலக்கியம் குறவஞ்சி என்றழைக்கப்பெறுகிறது. சிறிய திருமடலில் ஆழ்வார் இவ்விலக்கிய அமைப்பை வைத்துப் பாடுகிறார். குடக்கூத்தாடி வருகிறான் கண்ணன். அவனைக் கண்ட தலைவி காமுற்று அவனால் உடல், மனம் வேறுபட்டு நோவுறுகிறாள். அவள் அன்னை கட்டுவிச்சியிடம் அவளைக் குறித்துக் குறிகேட்க, கட்டுவிச்சி கட்டேறிக் குறி சொல்கிறாள்

கீர்த்தனை என்பது புதிய யாப்பு வகையாக, ஒன்பது செய்யுள் அமைக்கப்பட்டு ஆறடிகளாலான பாடல்கள் ஒவ்வொன்றும் இருபகுதிகளாய் அமைவது. முதற்பகுதி கலிவிருத்த அமைப்புடையதாகும். தொடர்ந்து வரும் தாழிசை வடிவு பெறுவதுடன் பாடல்தோறும் வந்த அடியே மீண்டும் வருவது. இவ்விலக்கிய அமைப்பைத் தமது பெரிய திருமொழிப் பாசுரத்தில் ஆழ்வார் பயன்படுத்தியுள்ளார் [129]

பொங்கத்தம் பொங்கோ என்னும் இலக்கிய வடிவம் திருமங்கையாரால் மட்டுமே பயன்படுத்தப்பட்ட இலக்கிய அமைப்பாய் உளது, தோற்றவர்கள் தோல்வியாலே பறை அடிக்க ஆடும் கூத்தாம் இது [130] இராமனின் வெற்றியை அரக்கர்கள் கூறுவதாக இது அமைகிறது. அரக்கர்களின் தோல்வி, இராமனின் வெற்றியைத் தெரிவிப்பதாக ஆழ்வாரால் இவ்விலக்கிய அமைப்பு ஆடும் ஒரு கூத்தாகக்

காட்டப்பெறுகிறது. ஆன்மாவை இறைவன் வென்றதாக, அவ்வெற்றிக்கொண்ட முறையைப் பாடுவதாகும் இது என்பர்.[131]

குழமணிதூரம் என்னும் இலக்கிய அமைப்பும் ஆழ்வாரால் மட்டுமே பாடப்பெறும் ஓர் இலக்கிய அமைப்பாகும். தோற்றவர் தோல்விக்காகத் தலைகீழாய் ஆடும் கூத்து இதுவாம்.[132]

இலங்கை அரக்கர்களின் பாசுரமாய் இது அமையப் பெற்றுள்ளது.

## திருவங்கமாலை, உற்பவமாலை

உடல் உறுப்புக்களை வருணித்துப் பாடுவது இதுவாம். வெண்பா அல்லது வெளிவிருத்தயாப்பில் அமையப்பெறும் பிரபந்தவகை இது வென்பர்.[133] திருமங்கையார் இவ்விலக்கிய அமைப்பில் பத்துப்பாக்களைப் பாடிப்பரவசப்படுகின்றார்.

மால் பிறப்பு பத்தினையும் கூறும் இலக்கியவடிவம் உற்பவமாலை ஆகும். ஆசிரியவிருத்தத்தால் அமையப் பெறுவது இது. திருமங்கையார் பெரியதிருமொழியில் திருமால் அவதாரங்கள் தொடர்ந்து ஆசிரிய விருத்தத்தில் அமையப் பெற்றுள்ளமையைக் காணலாம். நிலையிடம் எனத் தொடங்கும் பகுதியில் மச்ச அவதாரத்திலிருந்து தொடர்ச்சி யாய் ஒன்பது பாடல்களில் மாலினது ஒன்பது பிறப்புக்கள் பேசப்பெறுதல் குறிப்பிடத்தக்கது.

## தாண்டகம்

தாண்டகம் என்னும் சொல் இருபத்தாறு எழுத்தின் மிக்க அடியான் வரும். அளவழித்தாண்டகம், அளவியற் தாண்டகம் என இரு பகுப்பினையுடைய பாக்கள் இது. அறுசீரால், எண்சீரால் இயன்ற ஒத்த நான்கடி கொண்ட செய்யுட்களையுடையது இத்தாண்டக அமைப்பு. கடவுளரைப்

புகழ்வதாய் அமையக்கூடியது; குறுந்தாண்டகம், நெடுந் தாண்டகம் என இருவகையினதாக அமையக்கூடியது.

ஆழ்வார் பாடல்களில் குறுந்தாண்டகமும் (20), நெடுந் தாண்டகமும் (30) உள. குறுந்தாண்டகத்தில் இறை பக்தி, நெடுந்தாண்டகத்தில் அகப்பொருள் அன்பும் பேசப் பெறுகின்றன.

### மடல்

தான் காதலித்த தலைவியை அடையவேண்டிய தலைவன் பனங்கருக்களால் செய்த குதிரை மீது ஊர்வது மடலேறுதலாம். தொல்காப்பியம் 'ஏறிய மடல்திறம்' என இதனைக் குறுக்கிறது.[134] மடலூர்வேன் என்றல், மடலூர்தல், மடலூர்க் கண்ட சான்றோர் விபரம் கேட்கத் தன்னிலை கூறி உணர்த்தல், தலைவியை அடைதல் அல்லது தனதுயிர் துறத்தல் ஆகியன இம்மடலேறலில் நிகழ்வனவாம்.

திருமங்கை ஆழ்வார் பாடிய சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகியன தலைவி கூற்றாய் அமைந்து, தலைவி மடல் ஏறுவள் என்பதாய் வருகின்றது. பெண்கள் மடலேறும் புதுநெறியைப் புகுத்தித் தமது பாடல்களில் புரட்சி செய்துள்ளார் ஆழ்வார்.

ஆழ்வார் திருமங்கை பாடிய பாசுரங்களில் ஆன்மாவாகிய தலைவி, தானே மடலேறப் போவதாக அச்சுறுத்துகிறாள். ஆழ்வார் வடநெறி மரபுதனைத் தான் பின்பற்றியதாகக் கூறி மகிழ்ந்துகொள்கிறார் இம்மடல்களில் ஆன்மாவாகிய உயிர் இறைவனை நாடி நிற்கும் தத்துவம் காணப்பெறுகிறது என்றால் அது மிகாததாம்

## குறிப்பெண் விளக்கம்:

1. பொன். சௌரிராசன் கட்டுரைமணிகள் (சென்னை, 1979), ப. 55.
2. மு வரதராசன், இலக்கியத்திறன், இரண்டாம் பதிப்பு, (சென்னை, 1965), ப. 14.
3. கழகப்புலவர் குழுவினர், (தொ. ஆ), கழகத் தமிழ் அகராதி, இரண்டாம் பதிப்பு, 1969
4. பெ நடராசன், 'இலக்கியம் தரும் இன்பங்கள்', முருக தனுஷ்கோடி மணிவிழாமலர், (சென்னை, 1967) ப. 123.
5. இராமலிங்கப்பிள்ளை, இலக்கிய இன்பம், மூன்றாம் பதிப்பு, (சென்னை, 1953) ப 123.
6. ச.வே. சுப்பிரமணியன், கம்பன்கற்பனை, முதற்பதிப்பு, (சென்னை, 1978), ப. 13.
7. ந. தர்மாரெட்டி, திருவள்ளுவர் வேமனர்—ஓர் ஒப்பாய்வு, முதற்பதிப்பு, (திருப்பதி 1984), ப. 201.
8. இ. சுந்தரமூர்த்தி, திருக்குறள் அணிநலன், முதற் பதிப்பு, (சென்னை, 1971), ப. 10
9. பெரி. திரு. 6.8.3; 7.1.—9 வரை; 7 3.4; 7.6.1; 8.8.1; 9.2.3,6; 11.9.3,9.
10. பெரி. திரு. 2.9.7.
11. மேற்படி 10.4.2; 10.5.2.
12. பெரி. திரு. 4.3.7,9; 4 8.1; 5.3.10; 5.5.1; 5 9.1; 5 9.7; 5.6.1; 7.3.7; 7.4.7; 7.6.5; 7.6.2,9; 7.7.7; 7.9.9; 7.10.2; 8.1.2,6; 8.2.4; 8.4.6,9; 8.9.1,2; 9 2.8,9; 9 5.6,5; 9 6.3; 9.5.1; 9.7.4; 9.8.7; 9.8.8; 9 9 3,7,8; 9.10.5; 10.5.1; 10.4.2; 10.9.2; 10.9.3,7,8; 10.10.2,3,6,7; 11.3.9: 11.2.9; 11.1.7; 11.7.5,7.
13. மேற்படி 9.8.7.
14. மேற்படி 9.9.9.
15. மேற்படி 7.3.5; 9.3.9.

16. மேற்படி 9.2.7.
17. மேற்படி 6.4.5,8; 6.3.3.
18. மேற்படி 6.4.4.
19. மேற்படி 7.8.5.
20. மேற்படி 7.5.10.
21. மேற்படி 9.7.4.
22. மேற்படி 7.1.5; 8.6.3; 10.2.4. 10.2.7; 11.4.7; 11 5.1.
23. மேற்படி 6.8.6;
24. மேற்படி 6.9.6.
25. மேற்படி 11.7.9.
26. மேற்படி 10.9.3,7,9.
27. குறுந். பா. 9.
28. பெரி.திரு. 2.1.1.
29. மேற்படி 2.1.9.
30. பெரி. திரு. 3.1.4.
31. மேற்படி 3.1.8.
32. மேற்படி 3.1.6.
33. மேற்படி 4.2.5; 4.8.5; 3.9.4.
34. மேற்படி 3.9.8.
35. மேற்படி 3.8.3.
36. மேற்படி 5.9.2.
37. மேற்படி 6.9.4.
38. மேற்படி 67.4.1.
39. மேற்படி 7.5.7.
40. மேற்படி 9.10.5; 9.6.6.
41. திருவெழு. அடி 42.
42. பெரி. திரு. 11.5.5.
43. மேற்படி 2.1.2.

44. மேற்படி 3.1.7.
45. மேற்படி 5.2.3.
46. மேற்படி 5.2.5.
47. மேற்படி 5.2.6.
48. மேற்படி 5 2.8.
49. மேற்படி 6.7.4.
50. தண்டியாசிரியர், தண்டியலங்காரம், நூற்பா 36.
51. பெரி திரு. 11.7.1; 10. 1.2,3,4.8; 8,9,1,2; 7.10.1,8; 7.3.4,9; 5.6 1,
52. நெடுந். பா.4.
53. சிறிய திருமடல் அடி 1—2.
54. பெரி. திரு. 10,8.1,2,5,6.
55. மேற்படி6. 7.9.
56. மேற்படி 10.4.1.
57. மேற்படி 2.3.4.
58. மேற்படி 8.1.7.
59. மேற்படி 8.1.8.
60. திருவெழு. அடி 11—12.
61. மேற்படி அடி 11—12.
62. மேற்படி அடி 19—20.
63. பெரி. திரு. 10.2.5.
64. பெரி. திரு. 1,7.4,5,8.
65. மேற்படி 1.9.1,2,3,4,7,8,9; 1.8.1.
66. மேற்படி 2.3.7,9.
67. மேற்படி 2.5.3—9 வரை, 2.5.8,6.
68. மேற்படி 3.2.7,3.
69. மேற்படி 3.4.2.
70. மேற்படி 3.4.3.
71. மேற்படி 3.4.6,8,7.
72. பெரி. திரு. 3.9.4.
73 மேற்படி 4.2.5; 3.9.8; 3.10.5.
74. மேற்படி 5.8.1—10; 5.4.7,1,3,2; நெடுந். பா 23.

75 பெரி. திரு. 7 5.9; நெடுந். பா 15; பெரி. திரு 7.5.5.7
76. பெரி. திரு. 8.5.9; 8.1.9,5; 8.2.9; 8.6.10; 8.8.3.
77. பெரி. திரு. 9.9.2,5,8.
78. பெரி. திரு. 9.8.1,4.
79. நெடுந். பா. 12.16.
80. பெரி. திரு. 7.10.1.
81. மேற்படி 7.10.1; 8.9.2.
82. மேற்படி 8.9.4; 7.10.9.
83. மேற்படி 7.3.8.
84. மேற்படி 1 8.7.
85. மேற்படி 7.6 6.
86. நெடுந். பா 2.
87. நெடுந். திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை. ப 47.
88. நெடுந் திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை. ப 86—88.
89. நெடுந். பா 10.
90. நெடுந். திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை, ப. 89—90.
91. நெடுந். பா 14.
92. நெடுந். திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை, ப. 109.
93. மேற்படி, ப. 110.
94 நெடுந். பா. 15.
95. நெடுந். திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை, பா. 112.
96. நெடுந். பா. 24.
97. நெடுந். பா 26.
98. மேற்படி பா 25.
99. நெடுந். பா 12.13.15,16; குறுந். பா 3.12,
100. சிறியதிருமடல். அடி 38,35.
101. மேற்படி அடி 10—14.
102. இயற்பா சிறியதிருமடல், திவ்யார்த்ததீபிகை, ப. 33.
103. சிறியதிருமடல். அடி 38—40.
104. இயற்பா சிறியதிருமடல், திவ்யார்த்ததீபிகை, ப. 13.
105. சிறியதிருமடல் அடி 40.
106. திருவெழு. அடி 41.

107. மேற்படி அடி 44.
108 குறுந். பா 1, 6
109, நெடுந். பா 26.
110. நெடுந். பா 27
111. பெரி திரு 3.1.1.
1 2. ந. சுப்புரெட்டியார், வைணவ உரைவளம், ப. 11—18.
113. பெரி. திரு. 1.2.3.
114. மேற்படி 1.2 5.
115. மேற்படி 1.2.6.
116. மேற்படி 1.2.9.
117. மேற்படி 1 3.2.
118. சிறிய திருமடல் கண்ணி 6.8.
119. முத்துவீரியம் 70.
120. பன்னிரு பாட்டியல் 11.
121. பின்னிணைப்பு—2ல் காண்க.
122. பெரி. திரு. 10.5.1—10 வரை.
123. சிறியதிருமடல் 121—122.
124. நெடுந். பா 26.
125. ந. சுப்புரெட்டியார், வைணவ உரைவளம், முதற்பதிப்பு, (சென்னை, 1985), ப. 117—118.
126. நெடுந் பா 26.
127. சிறியதிருமடல் அடி 5 & 7—60.
128. நெடுந். பா 27.
129. பெரி. திரு. 6.1.1.
130. பி.பி. அண்ணங்கராசாரியார், பெரியதிருமொழி பத்து பதினொன்று தீபிகையுரை, (காஞ்சிபுரம், 1956), ப. 10
131. மேற்படி ப. 21.
132. மேற்படி ப. 22.
133. ச வே. சுப்பிரமணியன். தமிழிலக்கியவகையும், வடிவும், (சென்னை, 1984) ப. 522—528.
134. தொல். 64.

# நிறைவு உரை

ஆய்வேட்டில் சொல்லப்பட்ட செய்திகளின் சுருக்கமாய் நிறைவுஉரை அமைந்துள்ளது,

முதல் இயலில் திருமங்கை ஆழ்வாரின் பிறப்பு இளமைப் பருவம், ஆகிய செய்திகள் விளக்கப்படுகின்றன. இவரது காலத்தைப் பற்றிய பல்வேறு கருத்துக்கள் ஆயப்பெற்று அவற்றினடிப்படையில் இவர் எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்ற முடிவு கொள்ளப்படுகிறது. வெவ்வேறு சந்தர்ப்பங்களில் 'வெவ்வேறு சிறப்புக்களால்' வெவ்வேறு சிறப்புப் பெயர்களைப் பெற்ற நிகழ்ச்சிகள் விளக்கப்பெற்று இறைவனாலே 'கலியன்' என்ற சிறப்புப்பெயர் பெற்றமை பெறுகிறது.

திருமங்கையாழ்வார் ஒரு சிறந்த வைணவபக்தர் என்ற செய்தி அவரது இறை நெறி வாழ்வு எனும் பகுதியில் தெளிவு செய்யப்பெறுகிறது. அவர் பாடிய பாசுரங்கள், ஆழ்வார் அவற்றைப் பாடியருளிய சூழல், மடல், தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை ஆகியவற்றின் யாப்பமைப்புக்கள் அவை ஆழ்வார் பாசுரங்களில் அமைந்த பாங்கு— ஆகிய செய்திகள் விளக்கப்பெறுகின்றன.

இரண்டாம் இயல் பக்தியின் விளக்கம் கூறி அவற்றின் வகைகளைப் பல்வேறு அறிஞர்தம் கருத்துக்கள் வழிநின்று காட்டுகிறது, பல்வேறுபட்ட பக்தி வகைகளிலிருந்தாலும் நாரத பக்தி சூத்திரம் கூறும் பதினோருவித பக்தி வகைகளை மட்டும் சிறப்பாக விளக்கி அவை திருமங்கையாழ்வார் பாசுரங்களில் அமையும் பாங்கினை நிறுவுகிறது. ஆழ்வார் திருமங்கையின பக்தி பாவங்களை விளக்கி, அவரைச் சிறந்த வைணவபக்தராய் நிறுவுகிறது.

மூன்றாம் இயலில் அவதாரங்களுக்கு முக்கியத்துவம் தரப்படுவதால் அவ்வவதாரத்தை ஏற்கும் வைணவம்— வைணவத்திற்கு பிறப்பிடமாவது இந்து சமயம்—இந்து

சமயமெனும் கிளைநதிக்கு மூலமானது சமயம்— ஆகிய செய்திகள் தெரிவிக்கப்படுகின்றன.

எம்பெருமானின் ஐந்து நிலைகளாயுள்ள பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சைகளில் விபவநிலை மட்டுமன்றி இவ்வைந்து நிலைகளையும் அவதாரமாகவே கொள்ளலாம் என்ற கருத்து கூறப்பெறுகிறது. திருமாலினது பத்து அவதாரங்களும் பரிணாமத்தின் முக்கியப்படிகளை உணர்த்து கின்றன என்ற செய்தியும், பத்து அவதாரங்களும் மனித சமூக நல்வாழ்விற்கு ஏற்ற கருத்துக்களை உணர்த்துவதாய் அமைந்துள்ளன என்ற செய்தியும் குறிப்பிடப்பெற்றுள்ளது.

இவ்வியலில், திருமங்கைபாசுரங்களில் திருமால் அவ தாரங்கள் விளங்கும் பாங்கு ஆயப்பெறுவதோடு, விபவதாரங் களில் தசாவதாரங்களுக்குச் சிறப்பிடம் தரப்பெறுகிறது.

நான்காம் இயலில், தலம் ஆலயம், மூர்த்தி, தீர்த்தம் ஆகியன விளக்கபெறுவதோடு, திருமாலுக்குரிய திருத் தலங்கள் குறிப்பிட்டுக் காட்டப்பெறுகின்றன; மேலும் ஆழ்வார் சென்று வணங்கியதாய் விளங்கும் எண்பத்தாறு வைணவத்தலங்கள் அவர்தம் பாசுரங்களில் அமைந்த பாங்கு விளக்கப்படுகிறது. எம்பெருமானைப் போன்றே அவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்களையும் எண்ணி, மாறாது பக்திசெய்தவர்— அவனிருக்குமிடத்தையும் அவனாகவே எண்ணிப் பாடித் தொழுத பரம பக்தர் ஆழ்வார் திருமங்கையார் என இவ்வியல் நிறுவுகிறது.

இறுதி இயல் பக்தராக—பக்திப் பித்தராகத் திகழும் திருமங்கையைச் சிறந்த கலைஞராக – கவிஞராக—பக்தித் தேன் தொட்டு ஊட்டும் பாவலராக நம்முன் காட்டுகிறது. கலை, இலக்கியக்கலை - விளக்கப் பெறுவதோடு, திருமங்கை பாசுரங்களில் காணப்பெறும் அணிகள் இவ்வியலில் எடுத்துக் காட்டப்பெறுகின்றன திருமங்கையாழ்வார் பாசுரங்களில் உள்ளுறை, சொல்நயம், நாட்டுப்புறக் கூறுகள் நிறைந் திருக்கும் செய்தியும் ஆழ்வாரின் புனைந்துரைக்கும் திறனும் காட்டப்பெறுகிறது.

# துணைநூற்பட்டியல்


பக்திஇலக்கியம், *அருணாசலம், ப., முதற்பதிப்பு, 1978. தமிழ்ப்புத்தகாலயம், சென்னை.*

வைணவ தத்துவ ஞான அடிப்படைகள், *அரங்கசீனிவாசன், முதற்பதிப்பு, 1984.* திருவள்ளுவர் பதிப்பகம், திருச்சி.

ஆழ்வார்கள் வைபவம், *அண்ணங்கராசாரியார், பிரதிவாதி பயங்கரம். கிரந்தமாலா ஆபிஸ், 1956. காஞ்சீபுரம்.*

திவ்யபிரபந்த திவ்யார்த்ததீபிகை, *அண்ணங்கராசாரியார், பிரதிவாதிபயங்கரம் இயற்பா ஆயிரத்தில் மூன்றாவது* ஸம்புடம் *மூன்றாம்* பதிப்பு, *1957.* கிரந்தமாலா ஆபிஸ் *காஞ்சீபுரம்.*

தெய்வவழிச் சிந்தனைகள், *இரத்தின சண்முகனார், அருணோதயம், முதற்பதிப்பு 1977.* சென்னை.

ஆழ்வார்கள் காலநிலை, *இராகவையங்கார். மு.,* பழனியப்பா *பிரதர்ஸ், திருச்சி.*

தமிழ் இசைக்கட்டுரைகள், *இராச அரசு.,* கலையுலக வெளியீடு-1.

இலக்கிய இன்பம், *இராமலிங்கம் பிள்ளை, மூன்றாம்* பதிப்பு *1953.* பழனியப்பா *பிரதர்ஸ்,* சென்னை.

பல்லவர் வரலாறு, *இராசமாணிக்கம் பிள்ளை, மா., மறுபதிப்பு, 1964.* கழகவெளியீடு, சென்னை.

தமிழில் உவமை, *ஏசுதாசன், ப.ச., சதா* பதிப்பகம், 1978, திருச்சி.

தமிழும் தத்துவமும், *கந்தசாமி, சோ. ந., முதற்பதிப்பு, 1976.* மணிவாசகர்நூலகம், சிதம்பரம்.

தெய்வவழிச் சிந்தனைகள், *கணேசன், பி.சி., (தொ.ஆ) முதற்பதிப்பு, 1978.* வானதி பதிப்பகம், சென்னை.

தெய்வத்தின் குரல் (*முதற்பகுதி*), *கணபதி., ரா., (தொ.ஆ) இரண்டாம்* பதிப்பு, 1977. வானதி பதிப்பகம், சென்னை.

அர்த்தமுள்ள இந்துமதம், கண்ணதாசன். இருபதாம் பதிப்பு, 1988 (இரண்டாம்பகுதி) வானதி பதிப்பகம், சென்னை,
அர்த்தமுள்ள இந்துமதம், கண்ணதாசன், (மூன்றாம்பகுதி) 1977. வானதி பதிப்பகம் சென்னை,
இந்துமதத்தின் இரகசியங்கள், கிருஷ்ணமூர்த்தி. அ. முதற்பதிப்பு, 1979 ஸ்ரீதேவி பதிப்பகம், கல்லக்குறிச்சி,
குருபரம்பராப்ரபாவம், கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் எஸ்., (ப.ஆ)., இரண்டாம் பதிப்பு, 1951. திருச்சி,
செம்பொருள், கிருஷ்ணவேணி அம்மையார், எஸ்., திருமலை-திருப்பதி தேவத்தான வெளியீடு
வைரக்கல், கீரன், முதற்பதிப்பு, 1978. சங்கப்பலகை, சென்னை.
இலக்கியமும் திறனாய்வும், கைலாசபதி, க., இரண்டாம் பதிப்பு, 1971. பாட்டாளிகள் வெளியீடு, சென்னை.
,ஆழ்வார்கள் அனுபவித்த அலர்மேல்மங்கை உறைமார்ப. முதற்பதிப்பு, 1973. மெர்க்குரி புத்தகக் கம்பெனி. கோயமுத்தூர்,
அஷ்டபிரபந்தம் (முதல் தொகுதி) கோபாலகிருஷ்ணமா சாரியர், ௨. வே. வை. மு., நான்காம்பதிப்பு, 1966. வை.மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் கம்பெனி சென்னை,
இந்திய விடுதலையும், தமிழ் இலக்கியமும், சஞ்சீவி, ந.பு., (பொ.ப.ஆ.), முதற்பதிப்பு, 196 சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, சென்னை,
ஆழ்வார்கள் சரித்திரம் சடகோபராமநுஜாசாரியர் வை.மு. கோபால கிருஷ்ணமாசாரியர் வை.மு., மூன்றாம்பதிப்பு, 1966. வை.மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் சென்னை,
பக்தி-பரபத்தி, சிவராம கிருஷ்ணசர்மா சி.வி. முதற்பதிப்பு, 198?. திருமலை திருப்பதி தேவத்தான வெளியீடு, திருப்பதி,
தெய்வத் திருஅவதாரங்கள், சிங்காரவேலனார், முதற்பதிப்பு, 1981. அருணோதயம், சென்னை,

இலக்கிய விமர்சனம், சிதம்பர ரகுநாதன், மூன்றாம் பதிப்பு, 1964 ஸ்டார் பிரசுரம், சென்னை,

ஆழ்வார்கள் அருள்மொழி, சிதம்பரம், சாமி., 1960.

ஸ்ரீமத் பகவத்கீதை, சுவாமி சித்பவானந்தர் (த.அ.)., ஐந்தாம் பதிப்பு, 1964. தபோவனப் பிரசுராலயம், திருப்பராய்த்துறை,

தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, சுப்ரமணிய அய்யர் ஏ.வி., இரண்டாம் பதிப்பு, 1971. அமுதநிலையம் லிமிடெட், சென்னை.

திருக்குறள் அணிநலம், சுந்தரமூர்த்தி, இ., முதற்பதிப்பு, 1971. சென்னை பல்கலைக் கழகம்

சோழநாட்டுத் திருப்பதிகள், கென்னை சுப்புரெட்டியார், ந, (இரண்டாம்பகுதி) முதற்பதிப்பு, 1981. ஆர் வாசுதேவன் பப்ளிகேஷன்,

சோழநாட்டுத் திருப்பதிகள் (முதற்பகுதி) சுப்புரெட்டியார், ந, முதற்பதிப்பு, 1981. ஆர். வாசுதேவன் பப்ளிகேஷன், சென்னை,

பாண்டிநாட்டுத் திருப்பதிகள், சுப்புரெட்டியார், ந., முதற்பதிப்பு, 1977 எஸ், ஆர். சுப்பிரமணியப்பிள்ளை, சென்னை,

திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும், சுப்புரெட்டியார், ந, முதற்பதிப்பு, 1975. பாரிநிலையம் சென்னை,

கவிதையனுபவம், சுப்புரெட்டியார், ந., முதற்பதிப்பு, 1861. கழக வெளியீடு, சென்னை,

தொண்டைநாட்டுத் திருப்பதிகள், சுப்புரெட்டியார், ந. முதற்பதிப்பு, 1973 எஸ்.ஆர். சுப்பிரமணியபிள்ளை புத்தக வெளியீட்டாளர் சென்னை,

வடநாட்டுத் திருப்பதிகள், சுப்புரெட்டியார், ந, முதற்பதிப்பு, 1980. ஆர். வெங்கடசுப்ரமணியம் பப்ளிகேஷன்,

முக்திநெறி, சுப்புரெட்டியார், ந., முதற்பதிப்பு, 1982. வாசுதேவன் பப்ளிகேஷன், சென்னை,

சில நோக்கில் நாலாயிரம், சுப்புரெட்டியார், ந., முதற்பதிப்பு, வாசுதேவன் பப்ளிகேஷன், சென்னை,

வைணவ உரைவளம், சுப்புரெட்டியார் ந, முதற்பதிப்பு, 1985. வேங்கடம் பப்ளிகேஸ்ன்ஸ், சென்னை

கம்பன் கற்பனை, சுப்பிரமணியன், ச.வே, முதற்பதிப்பு, 1978. தமிழ்ப் பதிப்பகம், சென்னை.

மறைமலை அடிகளாரின் இலக்கியப் படைப்புகள், செயப்பிரகாசு, நா, முதற்பதிப்பு, 1981. சென்னை,

ஹிந்துமதம் (ஓர் அறிமுகம்), சேஷாத்திரி, தி., இரண்டாம் பதிப்பு, 1975 அத்வய பிரசகம், மதுரை

தில்லைச் சிற்றம்பலவன் கோயில் சிதம்பரம் ஸ்தலவரலாறு, சோமசுந்தரம்பிள்ளை, ஜே.எம்., அண்ணாமலை நகர், 1966.

தத்துவமும் பக்தியும், ஞானசம்பந்தன், அ.ச., தெய்வத் தமிழ்மன்றம், மாயூரம், 1977.

திருவள்ளுவர், வேமனர்—ஓர் ஒப்பாய்வு, தர்மாரெட்டி, ந., முதற்பதிப்பு, 1984. திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.

தண்டியலங்காரம், தண்டியாசிரியர், பன்னிரண்டாம் பதிப்பு, 1978. கழக வெளியீடு, சென்னை.

ஆழ்வார் திருவுள்ளம், தாமோதரன், கு., முதற்பதிப்பு. 1978. பூங்கொடி பதிப்பகம். சென்னை.

வாரியார் வழங்கும் சிந்தனைச் செல்வம், திருமுக கிருபானந்தவாரியார், முதற்பதிப்பு, 1975. வானதி பதிப்பகம், சென்னை.

திருக்குறளில் கற்பனைத்திறனும் நாடக நலனும், முதற் பதிப்பு, 1973. சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

நாலாயிர திவ்வியப்பிரபந்தம், வேங்கடசாமி ரெட்டியார், கி., (ப ஆ), இரண்டாம் பதிப்பு, 1981. திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை.

வழிபாடும் சமயமும், வைத்தியநாதன், எஸ்., முதற்பதிப்பு, 1977. தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்க லிமிடெட், சென்னை.

அகராதி நினைவுகள், வையாபுரிப்பிள்ளை, எஸ்., முதற் பதிப்பு, தமிழ்ப்புத்தகாலயம், சென்னை.

ஸ்ரீநாரத பக்தி சூத்திரவிளக்கவுரை, ஸ்வாமி, முதற்பதிப்பு, 1984. பாரதி பதிப்பகம், சென்னை.

திருஅருள்மொழி, ஸ்வாமி, ஆறாம்பதிப்பு, ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை,

நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம், (பாகம் 2) ஸ்ரீவத்ஸன், தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை.

திருவாசகம், ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், தபோவன பிரசுராலயம், திருச்சி, 1968.

## கட்டுரைகள்

'சமய இலக்கியங்கள்' ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு கருத்தரங்கு ஆய்வுக்கட்டுரைகள், தொகுதி—3, குன்றக்குடி அடிகளார், உலகத்தமிழாராய்ச்சி மன்றம், சென்னை, 1981.

வைணவசமய நூல்கள்' தெய்வத்தமிழ் சுப்புரெட்டியார் ந., சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, 1975.

'திவ்வியப்பிரபந்த ஆய்வு வளர்ச்சி' 14வது கருத்தரங்கு ஆய்வுக்கோவை. தேவர், க.,

'மனிதனும் சமயமும்' இளவேனில் ஜெயா, பி., இளங்கோ மன்ற வெளியீடு, சென்னை, 1972.

## மலர்கள்

'அருளிச் செயலும் அருளாளனும்' திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதி ஸ்வாமி தேவத்தான கோஷ்டி சிறப்பு அத்யாபக வேதமலர், அண்ணங்கராசாரியர், பிரதிவாதி பயங்கரம், 1985,

'ஸ்ரீவைணவம்' பொன்விழாமலர், இராமசாமி அய்யங் கார், டி . இந்துமதாபிமானசங்கம், காரைக்குடி, 1967.

'பத்தி' தூத்துக்குடி சச்சிதானந்த சபையின் வெள்ளி விழா மலர், உமாதேவி, எஸ்., 1969.

'தமிழும் சமயமும், ஞானசம்பந்தன், அ ச , உலகத் தமிழ் மாநாடு விழாமலர், சென்னை, 1968.

'இலக்கியம் தரும் இன்பங்கள்' முருக தனுஷ் அகாடி மணி விழாமலர், நடராசன், பெ., முருக தனுஷ்கோடி மணி விழா மலர்க்குழு, சென்னை, 1967,

'கலையும் வாழ்வும்' சங்கர பாண்டிய நாடார் முத்துவிழா மலர், மணி, பெ. ப., சங்கர பாண்டிய நாடார் முத்து விழா மலர்க்குழு விருதுநகர், 1968.

'திருமலையும் ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாய நெறியும்' திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதி ஸ்வாமி தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி சிறப்பு மலர் கிருஷ்ணதாஸன், தி.அ., 1985.

'இஷ்வாகு குலதனம்—ஸ்ரீரங்கநாதன்' 1985 சிறப்புமலர் வெளியீட்டு விழா கிருஷ்ணமாசார்யஸ்வாமி,

'தில்லைச் சிற்றம்பலவன் கோயில் சிதம்பரம்—தலவரலா கழகபொன்விழாமலர், சோமசுந்தரம்பிள்ளை, ஜே. எம். சென்னை, 1970.

'திருமாலின் ஐவகை நிலைகள்' பொள்ளாச்சி ஸ்ரீவரதராஜப் பெருமாள் கோவில் கும்பாபிஷேக சிறப்பு மலர், ஸ்ரீவரதராஜப் பெருமாள் கோயில் வெளியீடு, வேங்கட சாமி, மு., பொள்ளாச்சி, 1970.

குண்டூசி, தீபாவளி மலர் 62. ராதாகிருஷ்ணன், கே., சென்னை.

**இதழ்கள்**

21, ஏப்ரல் 1985. கல்கி,
டிசம்பர் 1981. ஸப்தகிரி, ஜூலை அக்டோபர் நவம்பர் 1931,

**ஆய்வுகள்**

சங்ககால இடைக்காலத் தமிழிலக்கியங்களில திருமாலின் தசாவதாரங்கள்-ஓர் ஆய்வு சற்குணம், சொ., நவம்பர் 1982.

**அகராதி**

'கழகத்தமிழ் அகராதி' கழகப்புலவர் குழுவினர் (தொ.ஆ)., மூன்றாம் பதிப்பு, 1974. சென்னை,

**கலைக்களஞ்சியம்**

கலைக்களஞ்சியம், தொகுதி-1, தமிழ்வளர்ச்சிக் கழகப்பதிப்பு. சென்னை,

**ஆங்கில நூல்**

LOVE—DIVINE NARADA BHAKTI SUTRA, Swami Chininayananda, Srae Tayrvankuti, Uttar Kasi, 1968.

அன்பு நெறியே தமிழர் நெறி, துரை அரங்கனார், மொ. அ. நான்காம் பதிப்பு, 1967. மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

சுவாமி விவேகானந்தரின் அருள்மொழிகள் ஆயிரம், நடராஜன், அ.லெ. (தொ. மொ)., முதற்பதிப்பு, 1978. கற்பக நிலையம், சென்னை

ஏழுமலை ஆண்டவன், நடராஜன், எஸ்., முதற்பதிப்பு, 1977 பிரதிபா பிரசுரம், சென்னை.

தசாவதார தத்துவங்கள். நடராஜன், எஸ்., முதற்பதிப்பு, 1978. பிரதிபா பிரசுரம், சென்னை.

ஸ்ரீமத் பாகவத புராணம். நாராயண வேலுப்பிள்ளை, எம். முதற்பதிப்பு, 1982. குமரன் பதிப்பகம், சென்னை.

விஷ்ணுபுராணம், நாராயண வேலுப்பிள்ளை, எம்., முதற்பதிப்பு, 1985. குமரன் பதிப்பகம் சென்னை.

அவதார மகிமை, நாராயண வேலுப்பிள்ளை, எம், முதற் பதிப்பு, 979. முகவை பதிப்பகம், சென்னை.

ஆழ்வார்கள் வைபவம், நாராயண வேலுப்பிள்ளை, எம், முதற்பதிப்பு 19?2. சங்கப்பலகை, சென்னை.

திவ்வியப் பிரபந்தத்தில் மனம், நாகராசன், கரு., முதற் பதிப்பு, 1981. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

வேங்கடம் முதல் குமரி வரை, நாகராசன் கரு, இரண்டாம் பதிப்பு, எஸ்.ஆர். சுப்பிரமணியபிள்ளை பப்ளிஷர்ஸ், (பொருநைநதி துறையிலே) திருநெல்வேலி.

தமிழ் இலக்கிய வரலாறு, பாலசுப்பிரமணியன், சி. பதினாறாம் பதிப்பு, நறுமலர்ப் பதிப்பகம், சென்னை.

வாழவைக்கும் வைகுண்டங்கள், பாஸ்கரமார்த்தாண்டன், பொன்., முதற்பதிப்பு 1984. அம்பாள் பதிப்பகம், சென்னை.

கவிதைத்தலை, பார்த்தசாரதி, நா., முதற்பதிப்பு, 1962. வள்ளுவர் பண்ணை, சென்னை.

சங்ககால மகளிர், பாலசுப்பிரமணியன், சி., முதற்பதிப்பு, 1983. நறுமலர்ப் பதிப்பக வெளியீடு. சென்னை.

ஆழ்வார்கள் அமுதமொழி, பாஷ்யம், தி., முதற்பதிப்பு, மணவாளன் பதிப்பகம், சென்னை.

திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், முதற் பதிப்பு, 1983. சென்னை.

காதலால் கதி பெற்றவர், பி.ஸ்ரீ. முதற்பதிப்பு, 1958. கலைமகள் காரியாலயம், சென்னை.

திவ்யப்பிரபந்த ஸாரம், மூன்றாம் பதிப்பு. 1957. அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், சென்னை.

தென்னிந்திய வரலாறு, (முதற் பகுதி) பிள்ளை, கே.கே., நான்காம் பதிப்பு, 1976. பழனியப்பா பிரதர்ஸ்' சென்னை.

ஆனந்தம், மணி, அ., முதற்பதிப்பு, 1883. திருமலை—திருப்பதி தேவத்தான வெளியீடு, திருப்பதி.

இந்து சமயக்கருத்துக்கள். மாருதிதாசன், முதற்பதிப்பு, 1981. நர்மதா பதிப்பகம். சென்னை.

சங்க இலக்கியத்தில் கற்பனை. மாயாண்டி, இரா, முதற் பதிப்பு, 1980. எழிலகம், சென்னை.

சேக்கிழாரும் திருக்கண்ணப்ப நாயனாரும், 1955. மீனாட்சி சுந்தரனார், தெ.பொ.

புகழ் மணக்கும் வைணவத் தலங்கள், முத்துப்பிள்ளை, சி., பைலட் பப்ளிகேஷன்ஸ், சென்னை.

தசாவதாரம், முத்துக்குமரன், பி.எல்., முதற்பதிப்பு, 1979. மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

இலக்கியச்செல்வி, முத்துவீராசாமி நாயுடு, ஜே, முதற் பதிப்பு, சென்னை.

இந்திய ஸ்தல யாத்திரை, முத்துராமகிருஷ்ணன், வி எஸ்., (தொ.ஆ)., புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், சென்னை, 1965.

திருத்தலப்பயணம், ராய. சொ , க, வெ. சித. வெ வேங்கடாசலம் செட்டியார், காரைக்குடி, 1966.

இந்து சமயத் தத்துவம், ராஜா பகதூர், ஜி , (த.ஆ.) முதற்பதிப்பு, 1964

பக்திமார்க்கம், ராமகிருஷ்ணன், ஆர். (த.ஆ.), எட்டாம் பதிப்பு, 197 . ஸ்ரீராமகிருஷ்ணமடம், சென்னை.

சில்லரை ரஹஸ்யங்கள், ஸ்ரீராமதேசிகாசார்யர் (பரிசோ)., (முதற்பாகம்) ராமஸ்வாமி ஐயங்கார் (பிர.), தஞ்சை, 1972.

வரலாற்றில் பிறந்த வைணவம், ராமாநுஜதாதாசாரியார் அக்னிஹோத்ரம், ஸ்ரீசாரங்கபாணி சுவாமிதேவஸ்தானம் கும்பகோணம், 1973.

தென்னாட்டுக்கோயில்கள், ராதாகிருஷ்ணப்பிள்ளை, எம்., முதற்பதிப்பு, 1956. அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை.

ராஜாஜி கட்டுரைகள், ராஜாஜி, ஐந்தாம் பதிப்பு, 1971. வானதி பதிப்பகம், சென்னை.

பஜகோவிந்தம், ராஜாஜி, நான்காம் பதிப்பு, 1955. பாரதி பதிப்பகம், சென்னை.

இலக்கியத்திறன், வரதராசன், மு., இரண்டாம்பதிப்பு, 1965 பாரிநிலையம், சென்னை.

தமிழ் இலக்கிய வரலாறு, வரதராசன், மு., முதற்பதிப்பு, 1972. சாகித்தியஅகாதமி, புதுதில்லி,

தமிழர் சமய வரலாறு, வேலுப்பிள்ளை, ஆ., முதற்பதிப்பு, 1980, பாரி புத்தகப் பண்ணை, சென்னை.

தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், வேலுப்பிள்ளை, ஆ. முதற்பதிப்பு, 1969. தமிழ்ப்புத்தகாலயம், சென்னை.

நாலாயிர திவ்வியப்பிரபந்தம், வேங்கடசாமி ரெட்டியார், கி., (ப.ஆ)., முதற்பதிப்பு, 1973. திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை.

## ENGLISH BOOKS :


Ayyar, ASP. : SRI KRISHNA
The Madras Law Journal
Office, Madtas, 1952.

Barnett, LD. : HINDU GODS AND HEROES,
ESS ESS Publications,
Delhi, 1977.

Damodaran, G : THE LITERARY VALUE OF TIRUVAYMOLI,
Sri Venkateswara Unive rsity,
Tirupati, 1978.

Sarma, D.E. : WHAT IS HINDUISM,
The Madras Law Journal
Press, Madras,
Third Edition, 1945.

Srinivasachari, P.N. : SRI KRISHNA,
Tirumala Tirupati Devasthanams, Tirupati, 1953.

Subbu Reddiar, N. : RELIGION AND PHILOSOPHY OF NALAYIRAM WITH SPECIAL REFERENCE TO NAMMALVAR,
Sri Venkateswara Unive rsity,
Tirupati, 1977.

Swami Chinmayananda : LOVE DIVINE NARADA, BHAKTI SUTRA,
Sree Tapovankuti,
Uttar Kasi, 1968.